உ

கணபதி துணை.

ஸ்ரீலஸ்ரீ

அடியார்க்கடியார்

சுவாமிகளால்

இயற்றிய

# பழமொழிப் போதம்

## (மூலமும் உரையும்)

கருவூர்

கோ. தெ. ராமசாமி முதலியாரால்

கருவூர் பிரிட்டிஷ் இந்தியாப் பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

**1932**

ஆங்கீரஸ-௵ சித்திரை-௴

கலியுகம் 5034.

இதன் விலை அணா 8.

பழமொழிப்போதம் மூலமும் உரையும்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 10 | பருவமுற மாணாக்கன் [பால் | பருவமுறமாணாக்கன்பால் எண்ணின்முறையே அன்வயம் |
| 2 | 1 | தாகிய | தாய |
| ,, | 5 | லாமுறை | ல்லாத சம்பிரதாயம் |
| 3 | 7 | (3) இம்பர் | இம்பர் |
| ,, | 8 | 5 | 4 |
| ,, | 9 | 6 | 5 |
| ,, | ,, | சேர்ந்து (7) | சேர்ந்து |
| ,, | 12 | (1) | எனலாம் (1) |
| ,, | 19 | வதாம் | வதாம். எனலாம். |
| 4 | 3 | மலத்தை நீக்குபவ | விமல |
| ,, | 7 | (அரோ) | (அரோ) (விமலன் - மலத்தை விடுவிப்பவன்) |
| ,, | 10 | மலத்தை நீக்குபவ | விமல |
| ,, | 18 | ஈசன் | (2) ஈசன் |
| 9 | 11 | முந்தின | முந்திய |
| 14 | 2 | என்பதாகத் | என்பதாக |
| 15 | 13 | மாகிய, | மாகிய |
| ,, | ,, | (ஏ) | (ஏ), |
| 17 | 12 | விதமாம் | விதமாம். |
| 18 | 3 | வினைமுற்று | வினைப்பெயர் |
| 19 | 10 | சொரூபங் | சொருபங் |
| ,, | 15 | ,, | |
| ,, | 24 | பார்க்கினும் | பார்க்கினும், |
| 20 | 1 | போல | போல. |
| ,, | 2 | தூணுகுமா | தூணுகுமா. |
| ,, | 14 | மாக | மாக. |
| 22 | 21 | அலாது | அலாது (ஏ) |
| 28 | 15 | இது, | , இது |
| 31 | 19 | முக்காற்பாகம் | முப்பாகம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 33 | 14 | கற்பளே | கற்பனே |
| 34 | 13 | யது | யது ஆம். |
| 37 | 3 | பரர் | பார் |
| 39 | 2 | திதி தீ | தி திதீ |
| 45 | 15 | பட்ட | பட்டது |
| ,, | 23 | ,, | ,, |
| 50 | 4 | தாம் | தாம். |
| 51 | 2 | உண்டாக்கும் | உண்டாக்கும். |
| ,, | 19 | தீரார | தீரா |
| 52 | 23 | யாம் | யாம். என்பதாம் |
| 56 | 4 | புகி | புகி, |
| ,, | 6 | யுரு | யுரு, |
| ,, | 8 | ஞறின் | ஞறின், |
| ,, | 10 | யிற் | யிற், |
| 60 | 11 | இடையார் | இயையார் |
| 64 | 13 | (என்பதாம்) | என்பதாம். |
| ,, | 7 | (3) | (2) |
| ,, | 15 | எனல்,) (2) | எனல் |
| ,, | 20 | மமாக | மமாக, |
| 65 | 1 | (3) | (2) |
| ,, | 4 | (5) | (4) |
| ,, | 5 | (4) | (3) |
| ,, | 6 | (6) | (5) |
| ,, | 11 | எனல், (2) | எனல், |
| ,, | 23 | பூரணஞு | பூரணஞு |
| 67 | 15 | மற்று | (மற்று) |
| 69 | 8 | யிடத்து | யினிடத்து |
| 72 | 6 | வாதலாக் | வாதலால், |
| 77 | 13 | (எனல்) | எனல், |
| 78 | 11 | (எனல்) | எனல் |
| 84 | 23 | சகம் | ச்சகம் |
| 86 | 14 | துணர்வு | துணர்வு, |
| ,, | 16 | தோ | தோ, |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 86 | 18 | தான் | தான், |
| ,, | 20 | குதிரைக்கு | குதிரைக்கு, |
| 91 | ,, | நின்றது) | நின்றது) (உருர், முற்றெச்சம்) |
| 92 | 24 | வாசனை | வாதனை |
| 93 | 6 | ,, | ,, |
| 94 | 4 | கருத்து | கருத்து, |
| 95 | 6 | பார்த்து | பார்த்துத், |
| ,, | 10 | அவர் | • அவர் |
| 96 | 21 | பிரமமதாய் | பிரமமதா |
| 97 | 4 | ஆய் | ஆ |
| 98 | 2 | பக்திநெதி | பத்திநெறி |
| 101 | 13 | தாய்ச் | தாச் |
| ,, | 19 | அரிதாய் | அரிதா |
| 105 | 17 | விசாரம், | விசாரம் |
| 108 | 23 | பேதத்தின் | வேதத்தின் |
| 111 | 10 | •ன்னூ | நன்னூ |
| 126 | 20 | தனை | தன்னை |
| 129 | 9 | நொக்கல் | நோக்கல் |
| 132 | 7 | பெரியோர்கள் | பெரியோர்கள், |
| 133 | 16 | ஓர் | ஒர் |
| 134 | 11 | சரீரம் | சரீரம், |
| ,, | 12 | கள் | கள், |
| 135 | 9 | விளங்கிநீ | நீ |
| 136 | 4 | அப்பியாசி | அப்பியாசி, |
| 137 | 2 | முத்தி | • முத்தி |
| ,, | 8 | இளைத்துப் | இளைத்துப், |
| ,, | 7 | விருத்தி | விருத்தி |
| ,, | 17 | சாரியை) | சாரியை (கோடரி - கோடாலி) |
| 139 | 16 | விளங்குவார் | விளங்குவார், எனலாம் |
| 140 | 4 | முணர்ச்சி | மு, ணர்ச்சி |
| 141 | 2 | அழிப்பான் | அழிப்பன் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 141 | 6 | அழிப்பான் | அழிப்பன் |
| 146 | 8 | வனல் | எனல் |
| 148 | 9 | அசை) | அசை) (தாம், சாரியை) |
| 149 | 19 | பொவிந்த | பொலிந்த |
| 151 | 17 | வே . சா | வே - சா |
| 153 | 8 | உரவினுள் | உரலினுள் |
| 155 | 14 | யிரயோச | பிரயோச |
| 157 | 13 | ஈஸ்வரன் | ஈஸ்வரன், |
| 158 | 6 | அற்ற | அற்று |
| ,, | 14 | அழிய | அழிய, |
| ,, | 15 | அற்ற | அற்று |
| 168 | 2 | மயக்கமாம் | மயக்கமாம், |
| 169 | ,, | யோடு | யொடு |
| 172 | 22 | ஏ, ஏ, | ஏ, ஏ, ஏ, |
| 178 | 11 | தமை | தமை - |
| ,, | 22 | கர்மமும் | கர்மமும், |
| 181 | 20 | மியல்விய | மியல்வியவ |
| 182 | 10 | நிலைமை - | நிலைமை |
| 189 | 22 | டாயில் - | டாயின் |
| 194 | 5 | சமானமாக | சமானமாக, |
| 198 | ,, | அனுபவமும் | அனுபவமும், |
| 199 | 6 | குத்தூரிய | குத். தூரிய |
| 204 | 9 | என்பது | என்பது |
| ,, | 18 | முக்த்த | முக்த |



ஐங்கரன்பொற் றாள்க ளருட்குருவின் சேவடிகள்
சங்கரனார் பூஞ்சரணஞ் சத்தியுமை—செங்கமலப்
பாதங் கலைவாணி பங்கயத்தா ளன்பொடுமெய்ப்
போதும் பணிந்துதிப் போம்.



உ

ஸ்ரீகணேசாயநம:

அடியார்க் கடியா ரியற்றிய

# பழமொழிப் போதம்.

## (பழமொழிகளால் ஏற்படும் ஞானம்)

### குரு நாதன் அடிவைத்தது போல.

வெண்பா.

*அருள் வாழ் வுதவு மமலேசன் மெய்யாங்*
*குரு பாதம் வைத்ததொரு கொள்கை—தெரியிற்*
*சருவவிடை யூறுந் தவிர்க்குந் தகையே*
*பருவமுற மாணுக்கன் பால்.* (1)

**பதவுரை:**—(1) அருள்வாழ்வு உதவும் - ஞான வாழ்க்கையைக் கொடுக்கும், அமல - சுபாவமாகவே மலமில்லாத, ஈசன்- ஈஸ்வரனுடைய, மெய்யாம் - திருமேனியாகிய, குரு - குருநாதனது, பாதம் வைத்தது - அடிவைத்ததாகிய, ஒரு கொள்கை - ஒப்பற்ற தன்மையாவது, தெரியில் - ஆராயுங்கால், (3) சருவ விடையூறும் - சகல இடையூறுகளையும், தவிர்க்குந் தகையே - நீக்கும் பெருமையே, (2) பருவமுற - பக்குவமடைய, மாணுக்கன்பால் - அப்போது சீடனிடத்து.

**பொழிப்புரை:**—ஞான வாழ்க்கையைக் கொடுக்கும், சுபாவமாகவே மலமில்லாத ஈஸ்வரனுடைய திருமேனியாகிய

குரு நாதனது அடிவைத்ததாகிய ஒப்பற்ற தன்மையாவது ஆராயுங்கால் பக்குவமடைய அப்போது சீடனிடத்துச் சக விடையூறுகளையும் நீக்கும் பெருமையே.

(இடையூறவது—பற்றுக்கள்)

## வித்திலா முறை மேலுமில்லை கீழுமில்லை.

கலி விருத்தம்.

வித்தி லாமுறை மேலுமில் கீழுமில்
நித்தி யானந்த நீள்களிப் பொன்றினற்
சுத்த மாயை யசுத்தமென் மாயையு
மொத்து முத்தி யுடன்றரும் பந்தமே. (2

(1) வித்து இலாமுறை - விதையில்லாத சம்பிர தாயம் மேலும் இல் - மேலும் இல்லை, கீழும் இல் - கீழுமில்லை என் பது, நித்தியானந்த - ஈஸ்வரனது அழிவற்ற சுகமாகிய நீள்களிப்பு - பரமசந்தோடமான, ஒன்றினல் - ஒப்பற்ற சுபா வத்தால், (3) சுத்தமாயை-சுத்த மாயாசத்தியும், (2) அசுத்தப் என் - அசுத்த மென்கிற, மாயையும் - மாயாசத்தியும், (4) ஒத்து - கிரமமாகச் சீவனைப் பொருந்தி, (6) முத்தியுடன் - மோட்சத்தையும், தரும் - கொடுக்கும் தன்மையே, (5) பா தம் - பந்தத்தையும். (ஏ, ஈற்றசை) (பந்தம்—கட்டு) (மோட் சம்—விடுதல்)

விதையில்லாத சம்பிரதாயம் மேலும் இல்லை கீழுமில்லை, என்பது ஈஸ்வரனது அழிவற்ற சுகமாகிய பரமசந்தோட மான ஒப்பற்ற சுபாவத்தால் அசுத்தமென்கிற மாயாசத்தியு சுத்த மாயாசத்தியும் கிரமமாகச் சீவனைப்பொருந்திப் பந்தத் தையும் மோட்சத்தையும் கொடுக்குந் தன்மையே.

### நரிகூவல் சமுத்திரம் எட்டும்.

பம்பு மோர்தத் துவஞ் செயற் பட்டிட
விம்ப ரொன்றி னொன் றேய்ந்தெவை யும்முடி
யும்ப ரான்மா வுழியுண ரப்படுஞ்
சம்பு கூவல் சமுத்திர மெட்டுமால். (3)

(2) பம்பும் - பொருந்தும், ஓர்தத்துவம் - ஒருதத்துவ மானது, செயல்பட்டிட - காரியப்பட, (3) இம்பர் - இவ்வி டத்தில், (5) ஒன்றின் - அடுத்த ஒரு தத்துவத்தில், (4) ஒன்று - அவ்வொரு தத்துவம், (6) ஏய்ந்து - சேர்ந்து, (7) எவையும்—எல்லாத்தத்துவங்களும், முடி—சென்று முடிவடை கின்ற, உம்பர் - மேலான, ஆன்மாஉழி - ஆத்மாவிடத்து, உணரப்படும் - அறியப்படுவதாம் (1) சம்பு கூவல் - ஒரு நரி கூவினால் அது, சமுத்திரம் - சமுத்திர பரியந்தம், எட்டும் - செல்லும் என்பது, (ஆல், ஆசை)

ஒரு நரி கூவினால் அது சமுத்திர பரியந்தம் செல்லும் என்பது, பொருந்தும் ஒருதத்துவமானது காரியப்பட இவ்வி டத்தில் அவ்வொருதத்துவம் அடுத்த ஒருதத்துவத்தில் சேர் ந்து எல்லாத்தத்துவங்களும் சென்று முடிவடைகின்ற மேலா ன ஆத்மாவிடத்து அறியப்படுவதாம்.

### அவனன்றி ஓரணுவும் அசையாது.

என்று மாயை யினைத்தன் வயங் கொளா
நின்ற னாதிசித் தாய நிமலனே
கன்று சிற்சட காரண னாலவ
னன்றி யோரணு வும்மசை யாதரோ. (4)

(2) என்றும் - எப்போதும், மாயையினை - மாயாசத்தியை, தன்வயம் - தன் வசமாக, கொள்ளா நின்று - கொண்டு, அனாதி - எக்காலத்தும், சித்து ஆய - ஞானவடிவமாகிய, நிமலனை - மலத்தை நீக்குபவனான ஈசனை, கன்று - மாறுகின்ற, சிற்சட - அறிவுக்கும் அறியாமைக்கும், காரணன் - காரணனாதலாம், (ஆல்) (1) அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது (அரோ) என்பது. (ஆல், அரோ, அசைகள்)

அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது என்பது எப்போதும் மாயாசத்தியைத் தன் வசமாகக்கொண்டு எக்காலத்தும் ஞானவடிவமாகிய, மலத்தை நீக்குபவனான ஈசனை மாறுகின்ற அறிவுக்கும் அறியாமைக்கும் காரண னாதலாம்.

## கோடிக்குத் தன்காய் கனக்காது.

### வெண்பா.

ஈசன்பா லன்னோற் கிலீலாசங் கற்பமெனப்
பேசும் பல் கோடி பிரிவெண்ணில்—பூச
லடுக்கண்ட மாமாயை யாலவன்மா லொன்றான்
கொடிக்குத்தன் காய் கனக்குங் கொல். (5)

ஈசன்பால் - ஈஸ்வரனிடத்து, அன்னோற்கு - அவனுக்கு, இலீலா சங்கற்பம் என - விளையாடல் போன்ற சங்கற்பமென்று, பேசும் - சொல்லப்படுகின்ற, பல்கோடி பிரிவு - பலகோடி பேதங்களாகவும், எண் இல் - எண்ணமுடியாத, பூசல் - ஆரவாரத்தையுடைய, அடுக்கு அண்டம்ஆம் - அடுக்காகிய அண்டங்களான, மாயையால் - மாயாசத்தியினால், அவன் - அவ்வீசன், மால் ஒன்றான் - பிராந்தியடையான்

எனலாம், (1) கொடிக்குத் தன்காய் - ஒரு கொடிக்கு அதனது காயானது, கனக்குங்கொல் - கனக்குமோ என்பது

ஒரு கொடிக்கு அதனது காயானது கனக்குமோ வென்பது, ஈஸ்வரனிடத்து அவனுக்கு விளையாடல்போன்ற சங்கற்பமென்று சொல்லப்படுகின்ற பலகோடி பேதங்களாகவும் எண்ணமுடியாத ஆரவாரத்தையுடைய அடுக்காகிய அண்டங்களான மாயாசத்தியினால் அவ்வீசன் பிராந்தியடையான் எனலாம்.

## வல்லவன் வகுத்ததே வாய்க்கால்.

வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனவீசன்
றொல்லோ னொருவன் சுதந்திரனே—யல்லாற்
சிருட்டி திதி சங்காரச் செய்கை நியதிப்
பொருட்டிலது வேறோர் பொறி. (6)

(1) வல்லான் வகுத்ததே - வல்லவன் ஏற்படுத்தியதே, வாய்க்கால் எனல் - கால்வாய் என்பது (3) ஈசன் - ஈஸ்வரனாகிய, தொல்லோன் ஒருவன் - அநாதியான ஒருவன், சுதந்திரனே - சுதந்திரமுடையவனே, அல்லால் - அல்லாமலும், (2) சிருட்டி திதி சங்கார - உண்டாக்கல் காத்தல் அழித்தலாகிய, செய்கை - செயலின், நியதிப்பொருட்டு - நியமனத்திற்காக, (5) இலது - இல்லை எனலாம், (4) வேறோர் பொறி - அதை மாற்றுவதற்கு வேறோர் உபாயமும்.

வல்லவன் ஏற்படுத்தியதே கால்வாய் என்பது உண்டாக்கல் காத்தல் அழித்தலாகிய செயலின் நியமனத்திற்காக ஈஸ்வரனாகிய அநாதியான ஒருவன் சுதந்திரமுடையவனே, அல்

லாமனும் அதை மாற்றுவதற்கு வேறோர் உபாயமும் இல்லை எனலாம் (விவகார கதையில்)

## வல்லவன் ஆடியதே பம்பரம்.

### வஞ்சி விருத்தம்.

தேடிய தவத்தர் செயலன்
றீடதிச யப்ப டவிறை
மாடுவது மாயை வலியா
னாடியது பம்ப ரமரோ. (7)

(3) தேடிய - முயற்சித்துச்சம்பாதித்த, தவத்தர் - தவசிகளுடைய, செயல் அன்று - செய்கைகள் அல்ல என்பதாம், (2) ஈடு - வல்லமையைக்கண்டு, அதிசயப்பட - ஆச்சரியமடைய, இறை - ஈஸ்வரன், மாடுவது - செய்வதே, மாயை - மாயாசக்தியாம், (1) வலியான் - சமர்த்தன், ஆடியது - விளையாடியதே, பம்பரம் - பம்பரத்தின் வேகமான சுழற்சியினால் ஏற்படும் அசைவற்ற தன்மை போல்வது எனல், (அரோ - அசை)

சமர்த்தன் விளையாடியதே பம்பரத்தின் வேகமான சுழற்சியினால் ஏற்படும் அசைவற்ற தன்மை போல்வது எனல், வல்லமையைக்கண்டு ஆச்சரியமடைய ஈஸ்வரன் செய்வதே மாயாசக்தியாம், முயற்சித்துச் சம்பாதித்த தவசிகளுடைய செய்கைகள் அல்ல என்பதாம்.

## கதைக்கேது கால் தலை.

சதுர்த்தா திசயப் பிசியாய்
வதைக்கா துறுமா யையெனு
மதற்கா தியொடந் தமிலை
கதைக்கே துகழற் றிரசே. (8)

(4) சதுர்த்த - சமர்த்தாகிய தன்மையை யுடைய, அதி ஆச்சரியகரமான, பிசியாய் - பொய்யாகி, வதைக்காது - உயிர்களை அழிக்காது பொருந்துகின்ற, மாயை னும் - மாயை யெனப்படும், அதற்கு - அந்தச்சக்திக்கு, யொடு அந்தம் இலை - முதலும் முடிவும் இல்லை என்ப . (1) கதைக்கு, (3) ஏது - இல்லை எனல், (2) கழல் - கால் தலை (ஏ. அசை)

கதைக்குக் கால்தலை இல்லை எனல், சமர்த்தாகிய தன் மையுடைய ஆச்சரியகரமான பொய்யாகி உயிர்களை வதை து பொருந்துகின்ற மாயை யெனப்படும் அந்தச்சக்தி முதலும் முடிவு மில்லை என்பதாம் (விவகார தசையில்)

## காரி கோழிமுட்டை குடியின் அம்மியை உடைக்கும்.

### வெண்பா.

அதிகாரி குக்குடவண் டங்குடியி னம்மி
யெதிராகா வாறுடைக்கு மீசன்—றிதிமாயா
சத்தியிற்கா லஞ்சீவர் தாமுறுமிச் சாவிடய
சித்தி யெலா மாய்க்குந் தெளி. (9)

அதிகாரி - அதிகாரியின், குக்குட அண்டம் - கோழி டையானது, குடியின் அம்மி - குடியினுடைய அம்மிக்

கல்லேயும், எதிர் ஆகா ஆறு - எதிராகாத விதம், உடைக்கும் - உடைத்துவிடும் எனல், ஈசன் - ஈஸ்வரனுடைய நிதி - நிலேயான, மாயாசத்தியில் - மாயையில், காலம் - காலசக்தியானது, சீவர் (தாம்) உறும் - சீவர்கள் முயற்சித்து அடைந்திருக்கிற, இச்சாவிடய - ஆசைக்கு இடமான, சித்தியெலாம் - பெரிய சித்திகளே யெல்லாம், மாய்க்கும் - நாசமாக்கிவிடும், தெளி - இதை நீ தேர்ந்து நட என்பதாம் (தாம், சாரியை)

அதிகாரியின் கோழி முட்டையானது குடியினுடைய அம்மிக்கல்லேயும் எதிராகாத விதம் உடைத்துவிடும் எனல், ஈஸ்வரனுடைய நிலேயான மாயையில் காலசக்தியானது சீவர்கள் முயற்சித்து அடைந்திருக்கிற ஆசைக்கு இடமான பெரிய சித்திகளே யெல்லாம் நாசமாக்கிவிடும், இதை நீ தேர்ந்து நட என்பதாம், (நிலே, விவகார தசையில்)

## விளேயாடப்போய் வினேயாய் முடிந்தது.

விளேயாடச் சென்று வினேயாய் முடிந்த
திளேயாத பூரணமா மீசன்—களேயா
விலீலேயாற் றன்னேமறந் தெண்ணிலுயி ராகும்
புலீர்கோச காரமது போல் (10)

(1) விளேயாடச் சென்று - விளேயாடப் போய், வினேயாய் முடிந்தது, எனல், இளேயாத - இளேப்படையாத, பூரணமாம் ஈசன் - பரிபூரண சொரூபியான ஈஸ்வரன், களேயா - களேப்புறுக, இலீலேயால் - விளேயாட்டுப் போன்ற தன்மையால், தன்னே மறந்து - தன்னேமறந்தது போன்று, (3) எண் இல் - கணக்கற்ற, உயிர் ஆகும் - சீவர்களாவன் என்பதாம், (2) புல் -

புல்லால் கூடு செய்து, ஈர் - இழுத்துக்கொண்டு செல்லுகின்ற, கோச காரம் (அது) போல் - உலண்டு என்னும் புழுவைப் போல (அது, சொல்லுருபு)

விளையாடப்போய் வினையாய் முடிந்தது எனல், இளைப் படையாத பரிபூரண சொரூபியான ஈஸ்வரன் களைப்புறுத விளையாட்டுப்போன்ற தன்மையால் தன்னைமறந்தது போன்று, புல்லால் கூடு செய்து இழுத்துக்கொண்டு செல்லுகின்ற உலண்டு என்னும் புழுவைப்போலக் கணக்கற்ற சீவர்களாவன் என்பதாம்.

மாங்காய் புளித்ததோ வாய் புளித்ததோ.
விதை முந்தியதோ மரம் முந்தினதோ.

மாங்காய் புளிப்பதோ வாய்புளிப்ப தோவுலகு
தீங்கோ மனந்தானே தீங்குகொலோ—பாங்குற்ற
வித்து முதலோ விருட்சமுத லோகருமம்
மொத்ததுமுன் னோவுடன்முன் னோ (11)

மாங்காய் புளிப்பதோ, வாய் புளிப்பதோ எனல், உலகு தீங்கோ - உலகம் தீயதோ, மனம் - சித்தம், (தான்) (ஏ) தீங்கு கொல் - தீயதோ, (ஓ) என்பதாம், பாங்கு உற்ற - காக் கப்பட்ட, வித்து முதலோ - விதை முந்தினதோ, - விருட்ச முதலோ - மரம் முந்தினதோ எனல், கருமம் ஒத்தது முன்னோ - கன்மம் முன் வந்ததோ, உடல் - சரீரம், முன்னோ — முன் வந்ததோ, என்பதாம்.

மாங்காய் புளிப்பதோ வாய் புளிப்பதோ எனல், உலகம் தீயதோ சித்தம் தீயதோ என்பதாம். காக்கப்பட்ட விதை முந்தினதோ மரம் முந்தினதோ எனல், கன்மம் முன்வந்ததோ

சரீரம் முன் வந்ததோ என்பதாம் (ஏ, ஓ, அசைகள்) (கு
சாரியை).

**கூத்துப்பார்க்கப் போன இடத்தில் பேய்பிடித்த து**

நடங்காணச் சென்றிடத்தே நண்ணியது பேய்தான்
றொடர்ந்தே விசித்திரமாய்த் தோன்றிப்—படர்ந்த
விடயத்திற் சிந்தை விநோதமாய்ச் சென்றேற்
றிடும்வா சனைநிகள மே (

(1) நடம் - கூத்து, காண - பார்க்க, சென்ற இடத்
போன இடத்தில், (ஏ) (3) நண்ணியது - பற்றியது எனல்,
பேய் - பிசாசம், (தான்) (4) தொடர்ந்து - தொடர்ச்சியா
(ஏ) விசித்திரமாய் - ஆச்சரியமாய், தோன்றி - காணப்பட்
படர்ந்த - பரவிய, விடயத்தில் - சத்தாதி விஷயங்களி
சிந்தை - மனம், விநோதமாய் - விளையாட்டாய், சென்று
பொருந்தி, (6) ஏற்றிடும் - ஏற்கும் என்பதாம், (5) வாச
நிகளம், வாசனையாகிய விலங்கை (ஏ,) (ஏ, ஏ, ஏ, அசைக
(தான், சாரியை).

கூத்துப்பார்க்கப் போன இடத்தில் பிசாசம் பற்றிய
எனல், தொடர்ச்சியாய் ஆச்சரியமாய்க் காணப்பட்டுப் பரவி
சத்தாதி விஷயங்களில் மனம் விளையாட்டாய்ப் பொருந்
வாசனை யாகிய விலங்கை ஏற்றிடும் என்பதாம்.

**சணற்பன் வீட்டுக்கோழி**
**தானே விலங்கு மாட்டிக்கொண்டது.**

சணற்பன் மனைக்குருகு தானே நிகள
மிணைத்துக் கொளும்பிரவிர்த் திக்கோ—ரணித்துணை
மன்னும் பலபா வனைவசத்தே சங்கற்பந் [பே
துன்னிக்கன் மஞ்சேர்த் துவர் (1

சணற்பன் மனைக்குருகு - சணற்பன் வீட்டுக்கோழி, தானே - தான்றானே, நிகளம் - விலங்கை, இணைத்துக் கொளும் - போட்டுக்கொள்ளும் எனல், பிரவிர்த்திக்கோரணி - பிரவிர்த்தி யென்னும் கலக்கமான, துறையோர் - மார்க்கத்தினர், மன்னும் - நிலைப்பதாகிய, பலபாவனை வசத்து - பலபாவனையின் வசமாய், (ஏ) சங்கற்பந்துன்னி - சங்கற்பத்தைச்செய்து, கன்மம் சேர்த்துவர் - கன்மத்தைச் சம்பாதித்துக் கொள்வர் என்பதாம். (ஏ, அசை)

சணற்பன் வீட்டுக்கோழி தான்றானே விலங்கைப் போட்டுக்கொள்ளும் எனல், பிரவிர்த்தி யென்னும் கலக்கமான மார்க்கத்தினர் நிலைப்பதாகிய பலபாவனையின் வசமாய்ச் சங்கற்பத்தைச் செய்து கன்மத்தைச் சம்பாதித்துக் கொள்வர் என்பதாம்.

## நிர்வாண தேசத்தில் கௌபீனம் கட்டினவன் பைத்திய காரன்

எற்றேநிர் வாண விராச்சியத் திற்கவந்தி
பெற்றோனே பித்தனும் பெத்தநிலை—யுற்றார்கட்
பாரமார்த் திகம் பயில்வோனுன் மத்தனெனத்
தீரமாத் தோற்றிடுவன் றேர் (14)

எற்று - இது என்னதன்மையுடையது (ஏ), நிர்வாண இராச்சியத்தில் - நிர்வாண தேசத்தில், கவந்தி - கௌபீனம், பெற்றோனே - கட்டினவனே, பித்தனும் - பைத்திய காரனும் எனல், பெத்தநிலை - பந்தநிலைமையை, உற்றார் கண் - அடைந்தவர்களிடத்து, பாரமார்த்திகம் - பரமார்த்தஸ்திதியை, பயில்வோன் - பேசிநடப்பவன், உன்மத்தனென - பித்தன்போல,

திரமா - திடமாக, தோற்றிடுவன் - தோன்றுவன் என, தேர் - தெரிந்து கொள் என்பதாம். (ஏ, அசை)

இது என்ன தன்மையுடையது, நிர்வாண தேசத்தில் கௌபீனம் கட்டினவனே பைத்திய காரனும் என்பது, பந்த நிலைமையை அடைந்தவர்களிடத்துப் பரமார்த் தஸ்திதியைப் பேசி நடப்பவன் பித்தன்போலத் திடமாகத் தோன்றுவன் எனத் தெரிந்துகொள் என்பதாம்

## பித்தனுக்குத் தன் குணம் எற்றுநூல் போலத்தோன்றும்

பித்தர்க்குத் தன்குணம் பெய்நூ லினுநேர்மை
பெத்தர்க்குப் பல்வகைய பேதத்தின்—வைத்துக்
கருதப் படும்வியவ காரிகமே யின்பந்
தருசத் தியமாகுந் தான் (15)

பித்தர்க்கு - பைத்திய காரருக்கு, தம் குணம் - தமது நடை, பெய்நூலினும் - எற்று நூலைப்பார்க்கினும், நேர்மை - ஒழுங்காய்த்தோன்றும் எனல், பெத்தர்க்கு - பந்தநிலைமையை அடைந்தோர்க்கு, பல்வகைய - பலவிதமான, பேதத்தின் வைத்து - பேதமாக, கருதப்படும் - நினைக்கப்பட்ட, வியவ காரிகமே - விவகாரத்தன்மையே, இன்பந்தரு - சுகத்தைக் கொடுக்கின்ற, சத்தியமாகும் - சத்திய நிலைமைபோலத் தோன்றும் என்பதாம், (தான்). (தான், சாரியை).

பைத்திய காரருக்குத் தமது நடை எற்று நூலைப்பார்க்கினும் ஒழுங்காய்த் தோன்றும் எனல், பந்த நிலைமையை அடைந்தோர்க்குப் பலவிதமான பேதமாக நினைக்கப்பட்ட விவகாரத்தன்மையே சுகத்தைக் கொடுக்கின்ற சத்திய நிலைமை போலத் தோன்றும் என்பதாம்.

## விழலுக்கிறைத்து வீணுகாதே

### வஞ்சி விருத்தம்.

எழிற்சி வத்தி னின்றியிப்
பொழிற்கண் மிக்க போதம்வைத்
துழப்பர் முத்தி யொன்றிடார்
விழற்கி றைப்பர் வீணரே (16)

(3) எழில் - அழகிய, சிவத்தின் இன்றி - சிவத்தினிடத்தில் வைப்பதில்லாமல், இப்பொழிற் கண் - இச்சகத்தினிடத்து, மிக்க போதம் வைத்து - மிகுந்த உணர்ச்சியை வைத்து, உழப்பர் - உழல்பவர், முத்தி ஒன்றிடார் - மோட்சம் அடையார் என்பதாம், (2) விழற்கு - விழற்புல்லுக்கு, இறைப்பர் - நீர்பாய்ச்சுவர், எனல், (1) வீணர் (ஏ), (ஏ, அசை).

வீணர் விழற்புல்லுக்கு நீர் பாய்ச்சுவர் எனல் அழகிய சிவத்தினிடத்தில் வைப்பதில்லாமல் இச்சகத்தினிடத்து மிகுந்த உணர்ச்சியை வைத்து உழல்பவர் மோட்சம் அடையார் என்பதாம்.

## இளம்பிள்ளை பயமறியாது.

### வெண்பா.

திகழ்த்தின் முமுட்சுவலாச் சீவர்பலர் துன்பஞ்
செகத்தின் வடிவமெனத் தேரு—துகைக்கு
முளஞ்சார் விடயத்துற் றேவா துழப்பா
ரிளஞ்சேய் பயமறியா தே (17)

(2) திகழ்த்தின் - தெரிவிக்குமிடத்து, முமுட்சு அலா - மோட்ச இச்சை யுடையோர் அல்லாத, சீவர்பலர் - பலசீவர்

கள், (4) துன்பம் - துக்கமே, (3) செகத்தின் வடிவம் - உலகத்தின் உருவம், (5) என - என்பதாகத், தேறாது - தேர்ந்து கொள்ளாமல், உகைக்கும் - தாவுகின்ற, உளம் - மனமானது, சார்விடயத்து - அடுத்த விடயங்களில், உற்று - பொருந்தி, ஓவாது - ஓய் வின்றி, உழப்பார் - வருந்துவார்கள் என்பதாம் (1) இளஞ்சேய் - இளம்பிள்ளை, பயமறியாது (ஏ) எனல், (ஏ, அசை)

இளம்பிள்ளை பயமறியாது எனல் தெரிவிக்கு மிடத்து மோட்ச இச்சையுடையோர் அல்லாத பலசீவர்கள் உலகத்தின் உருவம் துக்கமே என்பதாகத் தேர்ந்துகொள்ளாமல் தாவுகின்ற மனமானது அடுத்த விடயங்களில் பொருந்தி ஓய்வின்றி வருந்துவார்கள் என்பதாம்.

## அடாதன செய்பவர் படாதன படுவர்.

### வஞ்சித்துறை.

அடாதசெ யவரே
படாதன படுவார்
விடாதயல் விழைவோ
ரெடாவுரு வெதுவே (18)

(1) அடாத - தகாதவைகளை, செய் அவரே - செய்யும் அவர்களே, படாதன - சகிக்கப்படாத துன்பங்களை, படுவார் - அடைவார்கள் எனல், (3) விடாது - நீக்காது, (2) அயல் - அன்னியங்களை, (4) விழை வோர் - விரும்பு வோர், எடா உரு - பிறந்து எடாத சரீரங்கள், எது - இல்லை என்பதாம் (ஏ, அசை)

தகாதவைகளைச் செய்யும் அவர்களே சகிக்கப்படாத துன்பங்களை அடைவார்கள் எனல், அன்னியங்களை நீக்காது விரும்புவோர் பிறந்து எடாத சரீரங்கள் இல்லை என்பதாம்.

## கூத்திக்குக் கொடுத்துக் குரங்காகாதே

### வெண்பா.

கணிகைக்கு நல்கிக் கவியாவார் சென்மப்
பிணிகலவா ஞேயப் பிரமத்—தணுகச்செய்
வண்ணமறி யாதுணர்வை மாயைப் புலன்வசத்தே
யண்ணுவித்துப் புன்பசுவா வார் (19)

கணிகைக்கு - சிலர் வேசிக்கு, நல்கி - கொடுத்து, கவி யாவார் - குரங்குபோல் ஆகுவர் எனல், சென்மப்பிணி - பிறவி நோய், கலவா - சம்பந்தப்படாத, ஞேயப்பிரமத்து - அறிய வேண்டிய பிரம சொரூபத்தில், அணுகச்செய் - அடையச் செய்கின்ற, வண்ணம் - மார்க்கத்தை, அறியாது - அறியாமல், உணர்வை - உணர்ச்சியை, மாயைப்புலன் வசத்து - மாயா காரியமாகிய, விஷயங்களிடத்து (ஏ) அண்ணுவித்து - பொருந் தச் செய்து, புன்பசு - இழிந்த உயிர், ஆவார் - ஆவார்கள் என்பதாம் (ஏ, அசை)

சிலர் வேசிக்குக் கொடுத்துக் குரங்குபோல் ஆகுவர் எனல், பிறவிநோய் சம்பந்தப்படாத அறியவேண்டிய பிரம சொரூபத்தில் அடையச் செய்கின்ற மார்க்கத்தை அறியாமல் உணர்ச்சியை மாயா காரியமாகிய விடயங்களினிடத்துப் பொருந்தச் செய்து இழிந்த உயிர் ஆவார்கள் என்பதாம்.

## மண்ணுங்கட்டி மாப்பிள்ளைக்கு எருமுட்டை பணிகாரம்

### வஞ்சி விருத்தம்.

மட்டிரளை யாமணமக ற்கெரு
முட்டைபணி காரமெனன் மெய்யுடற்
கட்டியிரி னுக்கிடர்க ளாய்மடம்
பட்டவிட யங்களொரு பஞ்சமே (20)

மண்திரளை ஆம் - மண்கட்டியாளாகிய, மணமகற்கு - மாப்பிள்ளைக்கு, எருமுட்டை, பணிகாரமெனல், மொய்புடல் - (பலதாதுக்கள்) சூழ்ந்த சரீரமாகிய, கட்டு உயிரினுக்கு - கட்டினையுடைய ஜீவனுக்கு அநுபவமாக ஏற்பட்டது, இடர்களாய் - துக்க சொரூபங்களாய், மடம் - ஜடத்தன்மை, பட்ட - பொருந்திய, விடயங்கள் - சப்தாதிவிடயங்கள், ஒருபஞ்சமே - ஓர் ஐந்தே என்பதாம். விடயம் ஐந்து என்பது - சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம். தமிழில் ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்.

மண்ணுங் கட்டியாளாகிய மாப்பிள்ளைக்கு எரு முட்டை பணிகாரமெனல், பலதாதுக்கள் சூழ்ந்த சரீரமாகிய கட்டினையுடைய ஜீவனுக்கு அநுபவமாக ஏற்பட்டது துக்க சொரூபங்களாய் ஜடத்தன்மை பொருந்திய சப்தாதி விடயங்கள் ஓர் ஐந்தே என்பதாம்.

## வெறுவாய் மெல்பவருக்கு ஒருவாய் அவல் கிடைத்ததுபோல

### கலித்துறை.

வெறுவாய் மெல்பவ ருக்கொரு வாயவல் விதிநேர்த
லுறுமோர் பற்றில ராயும வாநினை வொருகோடி
செறிவா ருக்கிட மேவல்பொ ருட்படு சிற்றின்பம்
பெறுமா றன்னவர் பின்வினை யளவெது பேசீரே (21)

வெறுவாய் மெல்பவருக்கு ஒருவாயவல், விதி - அதிட்ட வசத்தினால், நேர்தல் - கிடைத்தல் எனல், உறும் - பொருந்தும், ஓர்பற்று - ஒரு ஆதாரவும், இலராயும் - இல்லாதவராகி

யும், அவா - இச்சையினால், நினைவு - சங்கற்பங்கள், ஒரு கோடி - கணக்கில்லாதன, செறிவாருக்கு - செய்பவருக்கு, இடம் ஏவல் பொருள் - இடம் பொருள் ஏவல், படு-ஏற்படுதலா லுண்டாகிற, சிற்றின்பம் - அற்பசுகத்தை, பெறும் ஆறு - அடையும் விதமாம், அன்னவர் - அப்படிப்பட்டவர், பின் - பின்பு சம்பாதிக்கின்ற, வினையளவு - வினைகளின் அளவு, எது - எது, பேசீர் - சொல்லுங்கள் (ஏ, அசை)

வெறுவாய் மெல்பவருக்கு ஒருவாயவல் அதிட்ட வசத்தினால் கிடைத்தல் எனல், பொருந்தும் ஒரு ஆதரவும் இல்லாதவராகியும் இச்சையினால் சங்கற்பங்கள் கணக்கில்லாதன செய்பவருக்கு இடம் பொருள் ஏவல் ஏற்படுதலாலுண்டாகிற அற்பசுகத்தை அடையும் விதமாம் அப்படிப்பட்டவர் பின்பு சம்பாதிக்கின்ற வினைகளின் அளவு எது சொல்லுங்கள் என்பதாம்.

## முதலே துர்ப்பலை அதிலுங் கர்ப்பிணி

### வஞ்சித்துறை.

முதலே துர்ப்பலை
யதிலுங் கர்ப்பிணி
சிதம்வீழ் சிற்றுயி
ரெதிர்வன் பற்றதே (22)

முதலே - முன்னமே, துர்ப்பலை - பலகீனமானவள், அதிலும் - பின்னும், கர்ப்பிணி - கர்ப்ப மடைந்தவளாதல் எனல், சிதம் - தனது ஞானம், வீழ் - இயல் பிலேயே இல்லாத, சிற்றுயிர் - அற்ப ஜீவன், எதிர் - எதிர்ப்பட்ட, வன்

பற்றது - (விஷயங்களில்) வலிய பற்றையுடையதாதல், என்பதாம் (ஏ, அசை) (வன்மை + பற்று + து - வன் பற்றது - குறிப்பு வினை முற்று).

முன்னமே பலகீனமானவன் பின்னும் கர்ப்ப மடைந்தவளாதல் எனல் தனது ஞானம் இயல்பிலேயே இல்லாத அற்பசிவன் எதிர்ப்பட்ட விஷயங்களில் வலியபற்றை யுடையதாதல் என்பதாம்.

## எறும்பிற்குக் கொட்டாங் கச்சித்தண்ணீர் சமுத்திரம்

### கலி நிலைத்துறை.

எறும்பிற் குச்சிரட் டைப்புனல் சாகர மென்ற
உறும்பொய்த் தேகம்யா னெனுமபி மானமே வுயிர்க்குப்
பிறங்கற் போன்றமெய்ப் பரத்திலோ ரணுவெனப் பெயரும்
வெறும்பற் றாகிய மாயைநீப் பருந்துயர் விளைவே (23)

எறும்பிற்கு - எறும்புக்கு, சிரட்டைப்புனல் - கொட்டாங் கச்சித் தண்ணீர், சாகரம் - சமுத்திரம், என்றல் - என்பது, உறும் - பொருந்திய, பொய்த்தேகம் - பொய்யான சரீரமே, யானெனும் - நானென்னும், அபிமானம் மேவு - அபிமானத்தை யடைந்த, உயிர்க்கு - ஜீவனுக்கு, பிறங்கல் போன்ற - மலைக்கு நிகராகிய, மெய்ப்பரத்தில் - சத்தியமான பிரமத்தில், ஓர் அணு என - ஒரு அணுவைப்போல, பெயரும் - விளங்குகின்ற, வெறும்பற்று - பொய்ப்பொருள், ஆகியமாயை - ஆன மாயாசக்தி, நீப்பரும் - கடக்க முடியாத, துயர் - துன்பம், விளைவு - உண்டாக்கும் காரணம் எனலாம் (ஏ, அசை).

எறும்புக்குக் கொட்டாங்கச்சித் தண்ணீர் சமுத்திரம் என்பது பொருந்திய பொய்யான சரீரமே நானென்னும் அபிமானத்தை யடைந்த ஜீவனுக்கு மலைக்கு நிகராகிய சத்தியமான பிரமத்தில் ஒரு அணுவைப்போல விளங்குகின்ற பொய்ப்பொருள் ஆன மாயாசத்தி கடக்க முடியாத துன்பம் உண்டாக்கும் காரணம் எனலாம்.

## ஊமைக்கு உளறுவாய் சண்டப்பிரசண்டன்
## வெண்பா.

உரைவிண்ட மூகைக் குளறுவாய் சண்டப்
பிரசண்ட னென்பதுமெய்ப் பிம்ப—சொரூபந்
தனையொழிந்தே நெஞ்சந் தனிற்சிதா பாசன்
புனையறிவா மென்றுசொலும் பொய் (24)

உரை - பேச்சு, விண்ட - இல்லாத, மூகைக்கு - ஊமைக்கு, உளறுவாய் - உளறுவாயன், சண்டப்பிரசண்டனென்பது, மெய் - உண்மையான சாக்ஷியாகிய, பிம்பசொரூபந்தனை - பிம்பசொரூபத்தை, ஒழிந்து (ஏ) - விட்டு, நெஞ்சந்தனில், - மனதைப் பார்க்கினும் அதனிடத்தில் தோற்றுகிற, சிதாபாசன் - சித்தைப் போன்றவனாகிய ஜீவனை, புனை - சிறப்பான, அறிவாம் - சித்து ரூபியாம், என்று சொலும் - எனச் சொல்லுகின்ற, பொய் - பொய்யான பாவனை எனலாம் (ஏ, அசை).

பேச்சு இல்லாத ஊமைக்கு உளறுவாயன் சண்டப்பிரசண்டன் என்பது உண்மையான சாஷியாகிய பிம்பசொரூபத்தை விட்டு மனதைப் பார்க்கினும் அதனிடத்தில் தோற்றுகிற சித்தைப் போன்றவனாகிய ஜீவனைச் சிறப்பான சித்து ரூபியாம் எனச்சொல்லுகின்ற பொய்யான பாவனை எனலாம்

## நகமும் சதையும் போல

### துரும்பு தூணகுமா

நகமுஞ் சதையு நவின்மனத்தி னேடே
தகவின் சிதாபாசன் றனுந்—செகமேற்
றுரும்புதூ ணமோ துளங்கிடுமா பாசன்
பெரும்பிரம மாவனோ பின் (25)

(2) நகமும் சதையும், என்பது, நவில் - சொல்லப்படு கிற, மனத்தினேடு (ஏ) - மனமும், தகவின் - குணத்தை யுடைய, சிதாபாசன் - சீவனும் எனலாம், (1) தான் - தனது சங்கற்பம், ஆம் - ஆகிய, செகமேல் - உலகத்தில், (3) துரும்பு தூணமோ, எனல், துளங்கிடும் - சலிக்கின்ற, ஆபா சன் - சிதாபாசன், (5) பெரும்பிரமம் - பரிபூரணமான பிர மம், ஆவனோ - ஆகான் என்பதாம் (4) பின் - பிம்ப சொரூப மாக (ஏ, அசை)

தனது சங்கற்பமாகிய உலகத்தில் நகமும் சதையும் என்பது சொல்லப்படுகிற மனமும் குணத்தையுடைய சீவ னும் எனலாம். துரும்பு தூணமோ எனல் சலிக்கின்ற சிதா பாசன் பிம்ப சொரூபமாகப் பரிபூரணமான பிரமம் ஆகான் என்பதாம்.

## சிறியார் செய்து பெரியார் மேல் சேர்த்தல்

சிறியோர்தாஞ் செய்து பெரியார்மேற் சேர்த்தல்
செறியூன்மெய் யிந்தியங்கள் சிந்தை—பிறியாத
சுத்தாபோத் தாவியற்கை காணுமா ரோபத்தாற்
சித்தாய வான்மாவிற் றேர் (26)

(1) சிறியோர் (தாம்) செய்து பெரியார் மேல் சேர்த்தல், எனல், செறியூன் - பொருந்திய மாமிசமயமாகிய, மெய் - சரீரம் இந்தியங்கள் - இந்திரியங்கள், சிந்தை - மனது ஆகிய இவற்றை, பிறியாத - நீங்காத, கத்தா - செய்கிறவன், போத்தா - அனுபவிக்கிறவன் என்னும், இயற்கை - தன்மைகள், (4) காணும் - தோற்றும், (3) ஆரோபத்தால் - கற்பனையாக, (2) சித்தாய - சுத்தஞான சொரூபமாகிய, ஆன்மாவில் - ஆத்மாவினிடத்தில், (5) தேர் - இதனைத் தெரிந்துகொள் என்பதாம் (தாம், சாரியை).

சிறியோர் செய்து பெரியார் மேல் சேர்த்தல் எனல், பொருந்திய மாமிசமயமாகிய சரீரம் இந்திரியங்கள் மனது ஆகிய இவற்றை நீங்காத, செய்கிறவன் அனுபவிக்கிறவன் என்னும் தன்மைகள் சுத்த ஞான சொரூபமாகிய ஆத்மாவினிடத்தில் கற்பனையாகத் தோற்றும் இதனைத் தெரிந்துகொள் என்பதாம்.

**கண்ணாடி நிழற்பணம் கடனுக்கு உதவுமா**

கஞ்சனநீ ழற்பொன் கடனுக் குதவுங்கொல்
நெஞ்சத் தெழுமகந்தை நீள்பிரமத்—தெஞ்சா
தயிக்கியமா மோவவ் வகங்கரத்தின் சான்றாய்த்
தியக்கமில்கூ டத்தனலா தே (27)

(1) கஞ்சன நீழல் - கண்ணாடியிற் சாயையாகிய, பொன் - திரவியம், கடனுக்கு உதவுங் கொல் - கடனுக்கு உதவுமோ எனல், (4) நெஞ்சத்து எழும் - மனதிற்றோன்றும், அகந்தை - அகங்கார விருத்தியானது, (2) நீள்பிரமத்து - பரிபூரணப் பிரமத்தோடு, (5) எஞ்சாது - குறைவின்றி, அயிக்கியம்

ஆமோ, - ஏகத்தன்மை யடையுமோ, என்பதாம், (3) அவ்வகங் கரத்தின் - அந்த அகங்காரத்தின், சான்றாய் - சாக்ஷியாகி, நிபக்கம் இல் - சலனமற்ற, கூடத்தன் - கூடஸ்த சொரூபம், அலாது - ஏகத்தன்மை உறுவதன்றி, (ஏ. அசை)

கண்ணாடியிற் சாயையாகிய திரவியம் கடனுக்கு உதவுமோ எனல், பரிபூரணப் பிரமத்தோடு அந்த அகங்காரத்தின் சாக்ஷியாகிச் சலனமற்ற கூடஸ்த சொரூபம் ஏகத்தன்மை யுறுவதன்றி மனதிற்றோன்றும் அகங்கார விருத்தியானது குறைவின்றி ஏகத்தன்மை யடையுமோ என்பதாம்.

## தொத்திற்கு வந்தவன் துரைத்தனம் செய்வானு

தொத்திற்கு வந்தோன் றுரைத்தனஞ்செய் வான்
தத்தி விடயந் தமைச்சுட்டும்—புத்தி [கொலோ
பிரமத் தபேதமாம் பெற்றியதோ வாங்குத்
திரமுற்ற சாட்சியலா தே (28)

(1) தொத்திற்கு வந்தோன் - அடிமையாக வந்தவன், துரைத்தனம் - அதிகாரம், செய்வான் கொல் - செய்வானோ (ஓ) எனல், (3) தத்தி - தாவி, விடயந்தமை - சப்தாதி விஷயங்களை, சுட்டும் - குறித்துச் செல்லுகின்ற, புத்தி - புத்தியானது, பிரமத்து - பரமாத்மாவில், அபேதம் - ஏகத்தன்மை, ஆம் - அடைகிற, பெற்றியதோ (ஆங்கு) - பெருமையுடையதோ எனலாம் (2) திரமுற்ற - நிலையுடைய, சாட்சி அலாது - சாட்சியானது ஏகத்தன்மை யுறுவதன்றி (ஓ, ஆங்கு, ஏ, அசைகள்).

அடிமையாக வந்தவன் அதிகாரம் செய்வானோ எனல், நிலையுடைய சாக்ஷியானது ஏகத்தன்மை யுறுவதன்றித் தாவிச்

சப்தாதி விடயங்களைக் குறித்துச் செல்லுகின்ற புத்தியானது பரமாத்மாவில் ஏகத்தன்மை யடைகிற பெருமை யுடையதோ என்பதாம்.

## பூனை கண்ணைமூடினல் பூலோகமே இருண்டு போமா

### அறுசீர் விருத்தம்.

பூசை கண்ணை மூடிடிற் பூமி யந்த காரமோ
பாச மெய்யை யானெனும் பற்று யிர்ச்சு ழுத்தியான்
மூசு ஞால மோடதன் மூல மாயை தீர்வதோ
தேசின் ஞான நிட்டையிற் றேய்த லாவ தன்றியே (29)

(1) பூசை - பூனை, கண்ணை மூடிடில் - தனது கண்களை மூடிக்கொண்டால், பூமி - பூலோகமானது, அந்தகாரமோ - இருண்டு விடுமோ எனல், (4) பாசமெய்யை - ஆசை அல்லது மறைப்புக்குக் காரணமாகிய சரீரத்தை, யானெனும் பற்று - நானென்னும் அபிமானமுடைய, உயிர்ச்சுழுத்தியால் - ஜீவனது நித்திரையினலேயே, (2) மூசு - மூடுகின்ற, ஞாலமோடு - உலகத்தோடு, அதன் மூலமாயை - அதன் காரணமாகிய மாயா சத்தியும், (5) தீர்வதோ - ஒழியுமா என்பதாம், (3) தேசின் - பிரகாசமுடைய, ஞான நிட்டையில் - அனுபவ ஞான நிட்டையினல், தேய்தல் - கெடுதல், ஆவதன்றி (ஏ)- அடைவ தல்லாமல், (ஏ, அசை).

பூனை தனது கண்களை மூடிக்கொண்டால் பூலோகமானது இருண்டு விடுமோ எனல், மூடுகின்ற உலகத்தோடு அதன் காரணமாகிய மாயா சத்தியும் பிரகாசமுடைய அனுபவ ஞான நிட்டையினல், கெடுதல் அடைவதல்லாமல் ஆசை

அல்லது மறைப்புக்குக் காரணமாகிய சரீரத்தை நானென்னும் அபிமானமுடைய ஜீவனது நித்திரையினாலேயே ஒழியுமா என்பதாம்.

## பொய் சொல்லுகிற வாய்க்குப் போசனம் கிடையாது.

கலி விருத்தம்.

நைசகத் திரளை நாளுமுண் டெனவே
றெய்துமிவ் வுடலை யானெனக் கருது
மைமனந் துரிய வாழ்வினை யடையா
பொய்நவில் வாய்க்குப் போனக மிலதே (30)

(2) நை - கெடுக்கின்ற, சகத்திரளை - உலகங்களின் கூட்டத்தை, நாளும் - எப்போதும், உண்டு என - இருக்கும் எனவும், வேறு - அன்னியமாக, எய்தும் - பொருந்துகின்ற, இவ்வுடலை - இச்சரீரத்தை, யானென - நானெனவும், கருதும் - நினைக்கும், மை - அஞ்ஞானத்தையுடைய, மனம் - மனமானது, துரிய வாழ்வினை - துரியானுபவ வாழ்வை, அடையா - அடையாது என்பதாம். (1) பொய் நவில் - பொய் சொல்லுகிற, வாய்க்கு, போனகம் இலது (ஏ) - போசனம் கிடையாது, எனல். (ஏ, அசை).

பொய் சொல்லுகிற வாய்க்குப் போசனம் கிடையாது எனல் கெடுக்கின்ற உலகங்களின் கூட்டத்தை எப்போதும் இருக்கும் எனவும் அன்னியமாகப் பொருந்துகின்ற இச்சரீரத்தை நானெனவும் நினைக்கும் அஞ்ஞானத்தையுடைய மனமானது துரியானுபவ வாழ்வை அடையாது என்பதாம்.

## நரிக்கு இடங்கொடுத்தால் கிடைக்கு இரண்டாடு கேட்கும்.

நைசி வைக்கிட நல்கிற் கிடைக்கிரு
மைகள் கேட்கு மனமொருக் காதுபோக்
கெய்த விட்டிடி னீரைம் பொறிவசத்
துய்வ றக்கவர்ந் தோர்வைச் சிதைக்குமால் (31)

(1) நை - கெடுக்கின்ற, சிவைக்கு - நரிக்கு, இடம் நல்கில் - இடம் கொடுத்தால், கிடைக்கு - ஒவ்வொரு கிடைக்கும், இருமைகள் - இரண்டு ஆடுகள், கேட்கும் எனல், மனம் ஒருக்காது - மனத்தை ஒரு வழிப்படுத்தாது, போக்கு - அதன் போக்கிலேயே, எய்த விட்டிடில் - போகவிட்டால் அது, (3) ஈரைம் பொறி - பத்து இந்திரியங்களின், வசத்து - வசமாக, (2) உய்வு அற - உய்யும் வழி நீங்கும்படி, (4) கவர்ந்து - இழுத்து, ஓர்வை - அறிவை, சிதைக்கும் (ஆல்) - ஒழிக்கும் என்பதாம். (ஆல் - அசை).

கெடுக்கின்ற நரிக்கு இடம் கொடுத்தால் ஒவ்வொரு கிடைக்கும் இரண்டு ஆடுகள் கேட்கும் எனல், மனத்தை ஒரு வழிப்படுத்தாது அதன் போக்கிலேயே போகவிட்டால் அது உய்யும் வழி நீங்கும்படி பத்து இந்திரியங்களின் வசமாக இழுத்து அறிவை ஒழிக்கும் என்பதாம். ஞானேந்திரியம் (5) காது, தோல், கண், நாவு, மூக்கு. கன்மேந்திரியம் (5) வாக்கு, கை, கால், நீர்த்துவாரம், மலத்துவாரம். (இந்திரியம் - பொறி) (விஷயம் - புலன்).

## பெண்களிருப்பிடம் பெரிய சண்டை.

### வெண்பா.

பெண்க ளுறையுள் பெருங்கலக காரணமாம்
புண்கொள்சங் கற்பமெனும் பூவையர்சூழ்—பண்பி
லிதயம் பிரபஞ்சத் தேதுபழிப் பந்த
மதுசே ருயிர்ப்புருடற் காம் (32)

பெண்கள் - ஸ்திரீகள், உறை உள் - இருக்கும் இடம், பெருங்கலக காரணம் ஆம் - பெருங்கலகத்திற்கு ஏதுவாகும் எனல், புண்கொள் - துன்பம் அடையும்படி செய்கிற, சங் கற்பமெனும் - பல எண்ணங்கள் என்கிற, பூவையர் சூழ் - பெண்கள் கூடிய, பண்பு இல் - குணமற்ற, இதயம் - இரு தயம், பிரபஞ்சத்து ஏது - பிரபஞ்சத்திற்குக்காரணமாம், பழிப்பந்தம் - அதனுல் வரும் பந்தமென்னும் பழிச்சொல், அது சேர் - அச்சங்கற்பமென்னும் ஸ்திரீயை அடைந்த, உயிர்ப்புருடற்கு ஆம் - சீவனுகிய புருடனுக்கு ஏற்படும் என்பதாம்.

ஸ்திரீகளிருக்கும் இடம் பெருங்கலகத்திற்கு ஏதுவா கும் எனல், துன்பம் அடையும்படி செய்கிற பல எண்ணங் கள் என்கிற பெண்கள் கூடிய குணமற்ற இருதயம் பிரபஞ் சத்திற்குக்காரணமாம். அதனுல் வரும் பந்தமென்னும் பழிச்சொல் அச்சங்கற்பமென்னும் ஸ்திரீயை யடைந்த சீவ னுகிய புருடனுக்கு ஏற்படும் என்பதாம்.

## உளவன் இல்லாத களவு இல்லை.

### வஞ்சித்துறை.

துளுமன தொன்றே
பளுமய லென்றோ
ருளவனை யன்றிக்
களவின ரின்றே (33)

(2) துளும் - துள்ளுகின்ற, மனது ஒன்றே - ஓர் மனமே, பளு - கடினமான, மயல் - மாயைக்குக்காரணம், என்று ஓர் - என்று தெரிந்துகொள் என்பதாம், (1) உளவனை அன்றி - உள்ளாள் இல்லாமல், களவினர் இன்று - களவு செய்பவர் இல்லை எனல், (ஏ, அசை) (துளும், இடைக்குறை).

உள்ளாளில்லாமல் களவு செய்பவர் இல்லை எனல், துள்ளுகின்ற ஓர் மனமே கடினமான மாயைக்குக் காரணம் என்று தெரிந்துகொள். என்பதாம்.

## முட்டிக்காற்கழுதை பட்டவர்த்தனக்குதிரையாமா.

### கலிநிலைத்துறை.

கட்டு மாசையான் ஞானநன் னெறிசெலக் கருதாத்
துட்ட மெய்யையா னென்றுறு நெஞ்சமே தூரிய
நிட்டை யாற்றிக மும்பர மாத்தும நிலை கொல்
முட்டு காற்கரம் பட்டவர்த் தனப்பரி யாமோ (34)

(2) கட்டும் ஆசையால் - பந்திக்கின்ற இச்சையினால், ஞான நல் நெறி - நல்ல ஞான மார்க்கத்தில், செலக்கருதா -

செல்லும்படி நினையாத, (4) துட்ட - துஷ்டத்தன்மையு டைய, (3) மெய்யையானென்று உறும் - சரீரத்தை நானென்று அபிமானிக்கும், (5) நெஞ்சம் - மனமானது, (ஏ) துரிய நிட்டையால் - துரியானுபவ நிட்டையினால், திகழும் - விளங்கும், பரமாத்தும - பரப்பிரம, நிலை கொல் - நிலைமை யாமோ, என்பதாம், (1) முட்டு கால் - முட்டுகின்ற காலை யுடைய, கரம் - கழுதை, பட்டவர்த்தனப்பரி - பட்டவர்த்த னக்குதிரை, ஆமோ - ஆகுமோ, எனல் (ஏ, அசை).

முட்டுகின்ற காலையுடைய கழுதை பட்டவர்த்தனக் குதிரை ஆகுமோ எனல், பந்திக்கின்ற இச்சையினால் நல்ல ஞான மார்க்கத்தில் செல்லும்படி நினையாத, சரீரத்தை நானென்று அபிமானிக்கும் துஷ்டத்தன்மையுடைய மன மானது துரியானுபவ நிட்டையினால் விளங்கும் பரப்பிரம நிலைமையாமோ என்பதாம். (துஷ்டத்தன்மை - இராசத தாமத குண சம்பந்தம் இது, செயற்கையினால் உண்டாகும்) (சத்துவ குணம் - மனதிற்கு இயற்கை).

## ஆலையில்லாவூருக்கு இலுப்பைப்பூச் சர்க்கரை.

### வெண்பா.

இயந்திரமி லூருக் கிருப்பைப்பூக் கன்னல்
வியந்த நிதித்தியினை மேவிப் - பயன்கொள்
விதியிலர்க்குப் புன்மை விடயானு போகங்
கதியிதனாற் றுன்பக் கடல் (35)

இயந்திரம் இல் - ஆலை இல்லாத, ஊருக்கு, இருப் பைப்பூ - இலுப்பைப்புட்பம், கன்னல் - சர்க்கரை போலாம்,

எனல். வியந்த - புகழப்பட்ட, நிதித்தியினை - தியானத்தை, மேவி - அடைந்து, பயன் கொள் - (அதன் முடிவாகிய பிரம சமாதிப் பிரயோசனத்தை யடைகின்ற, விதியிலர்க்கு - பாக்கியமில்லாதவர்களுக்கு, புன்மை - ஈனமான, விடயானுபோகம் - விடயானுபவமே, கதி - கதியாம், இதனுல் துன்பக்கடல் - இதனுல் கடல் போன்ற துன்பமுண்டாகும் என்பதாம் (பாக்கியம் - புண்ணிய பரிபாகம்).

ஆலை இல்லாத ஊருக்கு இலுப்பைப்பூச் சர்க்கரை போலாம் எனல். புகழப்பட்ட தியானத்தை அடைந்து அதன் முடிவாகிய பிரமசமாதிப் பிரயோசனத்தை யடைகின்ற பாக்கியமில்லாதவர்களுக்கு ஈனமான விடயானுபவமே கதியாம் இதனுல் கடல் போன்ற துன்பமுண்டாகும் என்பதாம்.

## குருட்டுக் கொக்குக்கு உட்குளமே சாட்சி

உலோசனமில் கொக்கென்ன வுட்குளமே சான்றும்
நலோய்சத் துவவிருத்தி ஞானம்—நிலாவுகிலாச்
சித்தத் தினர்தாந் தெரிவைமயல் பூமியுட
னத்தத் துழல்வா ரறி. (36)

உலோசனம் இல் கொக்கு என்ன - குருட்டுக்கொக்கு என்பதற்கு, உட்குளமே சான்றும் - உட்குளமே சாட்சியாம், எனல், நலோய் - நல்லோனே, சத்துவவிருத்தி - சாத்விகசித்தமாகிய, ஞானம், நிலாவுகிலா - விளங்காத, சித்தத்தினர் - மனதையுடையவர், (தாம்) தெரிவைமயல் - பெண்இச்சை, பூமியுடன் - மண்இச்சையோடு, அத்தத்து - பொன் இச்சையிலும், உழல்வார் - மயங்குவார், அறி - இதைத்தெரிந்து

கொள் என்பதாம். (உலோசனம் - கண்) (தாம் - சாரியை) (நலோய், இடைக்குறை)

குருட்டுக்கொக்கு என்பதற்கு உட்குளமே சாட்சியாம் எனல், நல்லோனே சாத்வீக சித்தமாகிய ஞானம் விளங்காத மனதையுடையவர் பெண்இச்சை மண்இச்சையோடு பொன் இச்சையினும் மயங்குவார் இதைத் தெரிந்துகொள் என்பதாம். (குருட்டுக்கொக்கு - மங்கல்நிறமான கொக்கு).

## காக்கைக்குத் தன்குஞ்சு பொன்குஞ்சு

### கலிவிருத்தம்.

நடிக்கு மெய்ப்பர ஞானம் விரும்பிடும்
படிக்கு வாரார் படர்கற் பனைப்பொருள்
பிடிக்கு மாற்றிற் பெரிது மகிழ்ந்திடல்
கொடிக்குத் தன்னது குஞ்சுபொற் குஞ்சரோ. (37)

(2) நடிக்கும் - உலகினர்போல நடித்தற்கேதுவாகிய, மெய்ப்பரஞானம் - உண்மையாய் மேலான அனுபவ ஞானத்தை, விரும்பிடும்-அடைதற்கு இச்சிக்கின்ற, படிக்கு-முமூட்சுத்தன்மைக்கு, வாரார் - வராத கர்மிகள், படர் - தங்கள் மனதிற் பிரீதியாய் நிச்சயிக்கின்ற, கற்பனைப்பொருள் - கற்பித வஸ்துக்களை, பிடிக்கும் ஆற்றில் - பற்றும் வகையில், பெரிது மகிழ்ந்திடல் - மிகவும் சந்தோஷித்தலாம். (1) கொடிக்கு - காக்கைக்கு, தன்னது குஞ்சு - தன்குஞ்சு, பொற்குஞ்சு (அரோ) -பொன்குஞ்சு, எனல். (அரோ, அசை).

காக்கைக்குத் தன்குஞ்சு பொன்குஞ்சு எனல், உலகினர் போல நடித்தற்கேதுவாகிய உண்மையாய் மேலான அனுபவ ஞானத்தை அடைதற்கு இச்சிக்கின்ற முமூட்சுத் தன்மைக்கு வராத கர்மிகள் தங்கள் மனதிற் பிரீதியாய் நிச்சயிக்கின்ற கற்பித வஸ்துக்களைப் பற்றும்வகையில் மிகவும் சந்தோஷித்தலாம்,

## சுண்டைக்காய் காற்பணம் சுமைகூலி முக்காற்பணம்

### வெண்பா.

சுண்டைக்காய் காற்பொன் சுமைகூலி முக்காற்பொன்
கண்டமயக் கச்சுகஞ்செய் காலையினு—மண்டுதுய
ராகும் விடயநசை யாலறிவோர் பாகமதன்
போகமுற முப்பாகம் போம். (38)

சுண்டைக்காய், காற்பொன் - காற்பணம், சுமைகூலி, முக்காற்பொன் - முக்காற்பணம் எனல், கண்டமயக்கச்சுகம்- சிறிதாகி மயக்கத்திற்கேதுவாகிய சுகத்தை, செய்காலையினும்- தருகின்ற காலத்திலும், மண்டுதுயராகும் - பெருந்துன்பத்திற்குக்காரணமாகிற, விடயநசையால் - விஷயத்தை இச்சித்தலால், அறிவு, ஓர்பாகம் - காற்பாகமும், அதன்போகமுற - அவ்விஷயத்தை அனுபவித்தலால், முக்காற்பாகம் போம் - முக்காற்பாகமும் கெடும் என்பதாம்.

சுண்டைக்காய் காற்பணம் சுமைகூலி முக்காற்பணம், எனல், சிறிதாகி மயக்கத்திற்கேதுவாகிய சுகத்தைத் தருகின்ற காலத்திலும் பெருந்துன்பத்திற்குக் காரணமாகிற விஷயத்தை இச்சித்தலால் அறிவு காற்பாகமும் அவ்விஷயத்தை அனுபவித்தலால் முக்காற்பாகமும் கெடும் என்பதாம்.

## காணிஇலாபம் கோடி நட்டம்

### அறுசீர் விருத்தம்.

காணியிலா பங்கோடி நட்டமெனல் விடயத்திற்
கலத்த லோடும்
பேணுறுசாத் தீகவிருத் தியிற்பிரம சுகலேசப்
பிரதி விம்பம்
பூணுமெனி னும்பிரமா னந்தசமுத் திரமூழ்கும்
போத மார்க்கம்
வீணின்மறைந் தொழியுமவா வினையன்றோ ஞானத்தின்
விரோதிதானே (39)

(1) காணிஇலாபம் கோடிநட்டம் எனல், விடயத்திற் கலத்தலோடும் - பிரியமான விஷயத்தை அனுபவிக்கும்போது, பேணுறு - போற்றத்தக்க, சாத்தீகவிருத்தியில் - இரசோகுணம் அற்றுத் தோன்றும் சத்துவவிருத்தியில், பிரமசுக - பிரமானந்தத்தின், லேசப்பிரதிவிம்பம் - மிகவும் சிறிய பாகத்தின் சாயையானது, பூணுமெனினும் - அடையப்படும் ஆயினும், பிரமானந்த சமுத்திரம் - பிரமசுகக் கடலில், மூழ்கும் போதமார்க்கம் - முழுகும்படிசெய்யும் ஞானநெறி, வீணின்- வீணுக, மறைந்தொழியும் - கெட்டுவிடும். (3) அவாவினை - இச்சையும் கர்மமும், அன்றோ - அல்லவா என்பதாம், (2) ஞானத்தின் விரோதி - ஞானத்திற்கு விரோதம். (தான், ஏ, அசைகள்).

காணி இலாபம் கோடிநட்டம் எனல் பிரியமான விஷயத்தை அனுபவிக்கும்போது போற்றத்தக்க இரசோகுணம்

அற்றுத்தோன்றும் சத்துவவிருத்தியில் பிரமானந்தத்தின் மிகவும் சிறிய பாகத்தின் சாயையானது அடையப்படும் ஆயி னும் பிரமசுகக்கடலில் முழுகும்படிசெய்யும் ஞானநெறி வீணாகக் கெட்டுவிடும். ஞானத்திற்கு விரோதம் இச்சையும் கர்மமும் அல்லவா என்பதாம்.

## மலை கல்லி எலி பிடித்தல்.

### வெண்பா.

காமியகன் மத்தைநெடுங் காலம் விதிமுறையாற்
றாமியற்றி னெண்ணந் தனதுபல—மாமிடைந்து
புல்லுகனா வொத்தழியும் பொன்னா டுறுதன்மலை
கல்லி யெலிகவர்தல் காண். (40)

(2) காமிய கன்மத்தை - பலனை இச்சித்துச்செய்யும் கர் மத்தை, நெடுங்காலம், விதிமுறையால் - நியதிப்படி, (தாம்) இயற்றின் - செய்துவந்தால், என்ணந்தனது - தனது கற்பனை யின், பலனா - பிரயோசனமாக, மிடைந்து - பொருந்தி, புல்லு - தோற்றப்படுகிற, கனாவொத்து - சொப்பனம்போல, அழியும் - கெடும், பொன்னாடு - சொர்க்கலோகத்தை, உறுதல் - அடைதலாம், (1) மலைகல்லி, எலிகவர்தல் (காண்) - எலிபிடித் தல் எனல். (தாம், சாரியை) (காண், முன்னிலையசை)

மலைகல்லி எலிபிடித்தல் எனல், பலனை இச்சித்துச்செய் யும் கர்மத்தை நெடுங்காலம் நியதிப்படி செய்துவந்தால் தனது கற்பனையின் பிரயோசனமாகப் பொருந்தித், தோற்றப்படுகிற சொப்பனம்போலக் கெடும் சொர்க்கலோகத்தை அடைத லாம்.

## எரிகிற கொள்ளிகளில் எந்தக்கொள்ளி நல்ல கொள்ளி.

எரியு ஞெகிழிகளி னெஞ்ஞெகிழி நன்றும்
விரியுணர்வைப் போக்கும் விடயத்—திரளவற்றி
னெவ்விடயஞ் சாந்திதனை யீயு நிருவிடய
செவ்வியதா ஞானமலா தே. (41)

(1) எரியும் ஞெகிழிகளின் - எரிகின்ற கொள்ளிகளில், எஞ்ஞெகிழி - எந்தக்கொள்ளி, நன்றும் - நல்லதாகும் எனல், (3) விரியுணர்வை - விசாலமான அறிவை, போக்கும் - கெடுக்கின்ற, விடயத்திரள் அவற்றின் - விஷயக்கூட்டங்களில், எவ்விடயம் - எந்த விஷயம், சாந்திதனையீயும் - சாந்தியைக்கொடுக்கும், என்பதாம். (2) நிருவிடய - விஷயமாகாத, செவ்வியது - சிறப்பை யுடையதாகின்ற, ஞானம் அலாது - (ஏ) ஞானம் அல்லாமல். (ஏ, அசை)

எரிகின்ற கொள்ளிகளில் எந்தக்கொள்ளி நல்லதாகும் எனல், விஷயமாகாத சிறப்பையுடையதாகின்ற ஞானம் அல்லாமல் விசாலமான அறிவைக்கெடுக்கின்ற விஷயக்கூட்டங்களில் எந்த விஷயம் சாந்தியைக் கொடுக்கும் என்பதாம்.

## வாதம் கெடுத்தது பாதி வண்ணான் கெடுத்தது பாதி.

### அறுசீர் விருத்தம்.

வாதங் கெடுத்தது பாதி வண்ணான் கெடுத்தது பாதி
நீதங் கடைந்தநெஞ் சோடு சென்றே யொழிந்துமோர் பாகம்
பேதம் படர்ந்திடு மிச்சை பின்று தெழுங்கரு மத்தே
போதந் திழந்துமோர் பாகம் பொல்லா ரொருங்குணர் வற்றார்

(1) வாதம் கெடுத்தது பாதி வண்ணான் கெடுத்தது பாதி. எனல், (3) தீது - தீமை, (அங்கு) அடைந்தநெஞ்சோடு - பொருந்தியமனதுடன், சென்று - கூடி (ஏ) (6) ஒழிந்தும் - கெட்டும், (5) ஓர்பாகம் - அரைப்பாகம், (7) பேதம், படர்ந்திடும் - செய்யும், இச்சை - ஆசை, பின்றாது - குறையாமல், எழும் கருமத்து - வளர்கின்ற கர்மமார்க்கத்தில், (ஏ) போதந்து - சென்று, (9) இழந்தும் - கெட்டும், (8) ஓர்பாகம் - அரைப் பாகம், (2) பொல்லார் - தீயோர், (10) ஒருங்கு - முழுமையும், (4) உணர்வு - அறிவு, (11) அற்றார் - இழந்தார், என்பதாம், (ஏ, வ, அசைகள்) (அங்கு, ஆங்கு என்னும் அசையின் முதற் குறுக்கம்)

வாதங் கெடுத்தது பாதி வண்ணான் கெடுத்தது பாதி எனல், தீயோர், தீமை பொருந்திய மனதுடன் கூடி அறிவு அரைப்பாகம் கெட்டும் பேதம் செய்யும் ஆசை குறையாமல் வளர்கின்ற கர்மமார்க்கத்தில் சென்று அரைப்பாகம் கெட்டும் முழுமையும் இழந்தார் என்பதாம்.

## ஆம் ஆம் விலாங்கு அல்ல அல்ல பாம்பு.

### வெண்பா.

ஆமாம் விலாங்குகா ணன்றன்று சர்ப்பமே
சேமானு போகஞ் செயவுலகம்—பாமானவோ
மென்றுழந்தோ னேபருவத் திவ்வுலகு தோற்றமியா
னின்றுணர்மெய் யின்பமெனு நேர்ந்து (43)

ஆம் ஆம் விலாங்கு, காண் - பார், அன்று அன்று - அல்ல அல்ல, சர்ப்பமே - பாம்பே எனல், சேம அனுபோகம் - சுக

அநுபவம், செய - அடைய, உலகம் - சகத்தை, யாம் ஆள்வோம் - நாம் காப்போம், என்று - என, உழந்தோனே - உழன்றவனே, பருவத்து - முத்திபெறும் பக்குவத்தில், இவ்வுலகு - இந்தச்சகம், தோற்றம் - கற்பனையெனத்தெளிந்து, யான் - நானே, நின்று - நிலைத்து, உணர் - அறிகின்ற, மெய்இன்பம் - சத்தியமான ஆனந்த சொரூபி, எனும் நேர்ந்து - என்று அநுபவமாயுணர்வான் என்பதாம்

ஆம் ஆம் விலாங்கு பார் அல்ல அல்ல பாம்பே எனல், சுக அநுபவம் அடையச் சகத்தை நாம் காப்போம் என உழன்றவனே முத்திபெறும் பக்குவத்தில் இந்தச்சகம் கற்பனையெனத்தெளிந்து நானே நிலைத்து அறிகின்ற சத்தியமான ஆனந்த சொரூபி என்று அநுபவமாயுணர்வான் என்பதாம்.

## ஆம் ஆம் பாம்பு அல்ல அல்ல விலாங்கு.

ஆமா மரவேயன் றன்று விலாங்கேகாண்
யாமா வதுசிவ னென்றிசைந்து—தாமாழ்கு
மன்னோர் விசாரவுணர் வான்மெய்ச் சிவமென்று
தன்னோர்வா ரேபருவத் தால் (44)

(1) ஆம் ஆம், அரவு - பாம்பு, (ஏ) அன்று அன்று - அல்ல அல்ல, விலாங்கு, (ஏ) காண் - பார் எனல், யாம் ஆவது - எங்கள் சொரூபமானது, சிவன் - அபிமானியாகிய உயிரே, என்று இசைந்து - என நிச்சயித்து, (தாம்) மாழ்கும் - உழலும், அன்னோர் - அத்தன்மையுடையவர், (3) விசாரவுணர்வால் - ஆராய்ச்சி ஞானத்தால் (5) மெய்ச்சிவம் என்று - உண்மையான சிவரூபமெ௭ன, (4) தன் - தன்னை (6) ஓர்வார் - அறிவார் என்பதாம் (ஏ) (2) பருவத்தால் - நிஷ்காம கர்மம் செய்தலால்

ஏற்படும் முமூட்சுப்பக்குவமடைந்தபின் (ஏ, ஏ, ஏ அசைகள்) (தாம் சாரியை.)

ஆம் ஆம் பாம்பு அல்ல அல்ல விலாங்கு பார் எனல், எங்கள் சொரூபமானது அபிமானியாகிய உயிரே என நிச்சயித்து உழலும் அத்தன்மையுடையவர் நிஷ்காம கர்மம் செய்தலால் ஏற்படும் முமூட்சுப்பக்குவமடைந்தபின் ஆராய்ச்சி ஞானத்தால் தன்னை உண்மையான சிவசொரூபமென அறிவார் என்பதாம்.

## உப்பிருந்தாற் பருப்பிராது பருப்பிருந்தால் உப்பிராது.

### கலிநிலைத் துறை.

உப்பி ருந்திடிற் பருப்பிரா பருப்புறி னுப்பின்
றிப்பர் முத்திவேட் புறிற்பிற சாதன மியலா
வெய்ப்பின் மற்றசா தனமுறின் முத்திவேட் பிலதா
லொப்பு மீச்சுர கருணையாம் பாக்கிய முறூர்க்கே (45)

(1) உப்பு, இருந்திடில் - இருந்தால், பருப்பு, இரா - இராது, பருப்பு, உறின் - இருந்தால், உப்பு, இன்று - இராது எனல், இப்பர் - இவ்வுலகில், (3) முத்திவேட்பு - மோட்ச இச்சை, உறின் - இருந்தால், பிற - மற்ற, சாதனம், இயலா - இராது, எய்ப்பு - இளைத்தல், இல் - இல்லாத, மற்றசாதனம், உறின் - இருந்தால், முத்திவேட்பு - மோட்ச இச்சை, இலது - இராது என்பதாம் (ஆல்) (2) ஒப்பும் - சம்மதிக்கத்தக்க, ஈச்சுரகருணையாம் — ஈஸ்வரகிருபையாகிய, பாக்கியம் — புண்ணியப்பலன், உறூர்க்கு — இல்லாதவர்க்கு, (ஏ அசை) (ஆல், அசை) (இப்பர் — இம்பர் என்பதன் வலித்தல் விகாரம்)

உப்பு இருந்தால் பருப்பு இராது பருப்பு இருந்தால் உப்பு இராது எனல், இவ்வுலகில் சம்மதிக்கத்தக்க ஈஸ்வரகிருபையாகிய புண்ணியப்பலன் இல்லாதவர்க்கு மோட்ச இச்சை இருந்தால் மற்ற சாதனம் இராது. இளைத்தல் இல்லாத மற்ற சாதனம் இருந்தால் மோட்ச இச்சை இராது என்பதாம்.

## எல்லாம் இருக்கிறது பெட்டியிலே இலைக்கறி கடையச் சட்டி யில்லை.

### அறுசீர்விருத்தம்.

வில்லார் நித்தி யாநித்த விவேகம் வைராக் கியஞ்சாந்தம்
புல்லா நின்றும் வீட்டினவாப் பொருந்தா ரெங்ஙன் மனனமதின்
வல்லா ராகி வீடடைவர் மனன முமூட்சு செயலன்றோ
வெல்லா முளது பெட்டகத்தே யிலையூண் செய்யக் கலமிலதே

(4) வில் ஆர் - பிரகாசம் மிகுந்த, நித்தியாநித்தவிவேகம் - நித்திய அநித்திய ஆராய்ச்சி, வைராக்கியம் - இகபர போக இச்சையில்லாமை, சாந்தம் - மனோ நிக்கிரகம் இந்திரிய நிக்கிரகம் ஒழிவு பொறுமை சமாதானம் நம்பிக்கை என்னுமிவைகள், புல்லாநின்றும் - பொருந்தியும், வீட்டின் - மோட்சத்தின், அவா - ஆசை, பொருந்தார் - அடையாதவர், எங்ஙனம் - எப்படி, மனனம் அதின் - ஆன்மாவைச்சிந்தித்தலில், வல்லார் ஆகி - வல்லவராய், வீடு அடைவர் - முத்தியைப் பெறுவர், மனனம் - சிந்தனையானது, முமூட்சு - மோட்ச இச்சையுடையவனது, செயல் அன்றோ - செய்கையல்லவா என்பதாம், (2) எல்லாம் உளது - சகலசாமானுமிருக்கிறது, (1) பெட்டகத்து - பெட்டியில், (ஏ) (3) இலையூண் - கீரை

யுணவு, செய்ய - சமைக்க, கலம் இலது - பாத்திரமில்லை எனல், (சாந்தம் -சமம் தமம் உபரதிதி தீட்சை சமாதானம் சிரத்தை எனும் சமாதிசட்க சம்பத்தி) (சமம் - மனோநிக்கிரகம், தமம் -இந்திரிய நிக்கிரகம், உபரதி - ஒழிவு, திதீட்சை - பொறுமை, சிரத்தை - நம்பிக்கை) (ஏ, ஏ, அசைகள்)

பெட்டியில் சகலசாமானுமிருக்கிறது கீரையுணவு சமைக்கப் பாத்திரமில்லை எனல், பிரகாசமிருந்த நித்திய அநித்திய ஆராய்ச்சி, இகபரபோக இச்சையில்லாமை மனோ நிக்கிரகம் இந்திரிய நிக்கிரகம் ஒழிவு பொறுமை சமாதானம் நம்பிக்கை என்னுமிவைகள் பொருந்தியும் மோட்சத்தின் ஆசை அடையாதவர் எப்படி ஆன்மாவைச் சிந்தித்தலில் வல்லவராய் முத்தியைப்பெறுவர் சிந்தனையானது மோட்ச இச்சையுடையவனது செய்கையல்லவா என்பதாம்.

## நூற்றைக் கெடுத்தது குறுணி.

### வஞ்சிவிருத்தம்.

நூற்றைக் கெடுத்தது குறுணி
யாற்றற் குணத்திர ளதிக
மேற்றுப் பினர்ச்சில விழிவு
மூற்றத் துறிற்புக ழுளதோ (47)

நூற்றைக் கெடுத்தது குறுணி, எனல், ஆற்றல் - ஒருவன் ஞானசக்திக்குரிய, குணத்திரள் - குணங்களின் கூட்டம், அதிகம் - மிகுதியாய், ஏற்று - பெற்றும், பினர் - பின்பு, சில இழிவும் - சில ஈனகுணங்களும், ஊற்றத்து - திடமாக, உறின் - அடைந்தால், புகழ் உளதோ - அவனுக்குப்புகழ்ச்சி உண்டாகுமோ இல்லை இகழ்ச்சியே என்பதாம்.

நூற்றைக் கெடுத்தது குறுணி எனல், ஒருவன் ஞான சக்திக்குரிய குணங்களின் கூட்டம் மிகுதியாய்ப் பெற்றும் பின்பு சில ஈனகுணங்களும் திடமாக அடைந்தால் அவனுக்குப் புகழ்ச்சி உண்டாகுமோ இல்லை,இகழ்ச்சியே என்பதாம்.

## கல்லைக் குத்திக் கைநோவது ஏன்.

### வெண்பா.

தீவா சனைவசத்தே செல்லு முயிர்களிடத்
தோவா வுபேட்சை யுறாதுவெறுத்—தாவாதஞ்
சித்தத்தி லன்னார் செயிரேற் பதுகல்லைக்
குத்திக்கை நோவார் குணம். (48)

(2) தீவாசனை - தீயபழக்கங்களின், வசத்து - வசமாய், (ஏ) செல்லும், உயிர்களிடத்து - சீவர்களைக்காணின் அவர்களிடத்து, ஓவா - கெடாத, உபேட்சை - விருப்பு வெறுப்பு இல்லாத் தன்மையை, உறாது - அடையாமல், வெறுத்து - அந்தச் சீவர்களை வெறுத்து. ஆவா - ஆ ஆ, தம் சித்தத்தில் - தங்கள் இருதயத்தில், அன்னார் - அத்தீயோரது, செயிர் - குற்றத்தை, ஏற்பது-ஏற்றுக்கொள்வதாம், (1) கல்லைக்குத்திக் கைநோவார் குணம், எனல், (ஏ, அசை)

கல்லைக்குத்திக் கைநோவார் குணம் எனல், தீயபழக்கங்களின் வசமாய்ச்செல்லும் சீவர்களைக்காணின் அவர்களிடத்துக் கெடாத விருப்பு வெறுப்பு இல்லாத் தன்மையை அடையாமல் அந்தச் சீவர்களை வெறுத்து ஆ ஆ தங்கள் இருதயத்தில் அத்தீயோரது குற்றத்தை ஏற்றுக்கொள்வதாம்.

## இலங்கனம் பரம ஔஷதம்.

### கலிவிருத்தம்.

இலங்க னம்பர மௌடத மென்றல்
பலங்கு றைந்துவிட் சேபநோய் பாறப்
புலன்க ளின்வழிப் புகாவகை நிராசை
நலந்த னெஞ்சக நண்ணுவ தன்றே. (49)

இலங்கனம் - பட்டினி, பரம ஔடதம் - மேலான மருந்து, என்றல் - எனல், பலம் குறைந்து - வலிமை கெட்டு, விட்சேபநோய் - சஞ்சல நினைவுகளாகிய வியாதி, பாற - ஒழிய, புலன்களின் வழி - சத்தாதி விஷயங்களின் வசமாய், புகாவகை - செல்லாதபடி, நிராசை நலம் - இச்சையில்லாமையெனும் நல்ல குணமானது, தன் நெஞ்சம் - தனது மனதை, நண்ணுவது - அடைவதாம். (அன்று, ஏ, அசைகள்)

பட்டினி மேலானமருந்து எனல், வலிமைகெட்டுச்சஞ்சல நினைவுகளாகிய வியாதி ஒழியச் சத்தாதி விஷயங்களின் வசமாய்ச்செல்லாதபடி இச்சையில்லாமையெனும் நல்ல குணமானது தனது மனதை அடைவதாம்.

## உண்ணுமல் ஊரெல்லாம் சுற்றினுலும் உடுக்காமல் ஒரு வீடும் போகலாகாது.

### கொச்சகக்கலிப்பா.

உண்ணுதூர் சுற்றிடினு முடுக்காம லொருவீடு
நண்ணுதே யருட்குருவான் ஞானநிலை யுணராமற்
கண்ணுய பலநூல்கள் கண்டிடினு மடக்கமுளத்
தண்ணுது பரஞானி யகமடைத லழகன்றே. (50)

(1) உண்ணாது - உண்ணாமல், ஊர்சுற்றிடினும் - ஊரைச் சுற்றினாலும், உடுக்காமல், ஒரு வீடும் நண்ணாதே - ஒரு வீட்டிற்கும் போகாதே எனல், அருட்குருவால் - கிருபையுடைய குருவினால், ஞானநிலையுணராமல் - ஞான நிலைமையை அறிந்து அநுபவியாமல், கண் ஆய - விவேகத்திற்குக் காரணமாகிய, பல நூல்கள் - பல சாஸ்திரங்களை, கண்டிடினும் - ஆராய்ந்தாலும், (3) அடக்கம், (2) உளத்து - மனதில், (4) அண்ணாது - இல்லாமல், பரஞானி - மேலான ஞானியின், அகம் - இடம், அடைதல் - செல்லுதல், அழகு, அன்று - அல்ல. (ஏ, அசை)

உண்ணாமல் ஊரைச்சுற்றினாலும் உடுக்காமல் ஒரு வீட்டிற்கும் போகாதே எனல், கிருபையுடைய குருவினால் ஞான நிலைமையை அறிந்து அநுபவியாமல் விவேகத்திற்குக் காரணமாகிய பல சாஸ்திரங்களை ஆராய்ந்தாலும் மனதில் அடக்கம் இல்லாமல் மேலான ஞானியின் இடம் செல்லுதல் அழகு அல்ல என்பதாம்.

## விளையும் பயிர் முளையில் தெரியும்.

### வஞ்சித்துறை.

விளைநற் பயிரோ<br>
முளையிற் றெரியும்<br>
வளமுத் திமையே<br>
வுளமற் புதமே (51)

விளை - விளைகின்ற, நற்பயிரோ - நல்ல பயிரானது, முளையில் தெரியும், எனல், வளம் - மகாமகிமையுடைய, முத்தியை, மேவு உளம் - அடையும் மனம், அற்புதமே - முதலிலேயே அபுரூபமாகிய குணங்களையுடையதாயிருக்கும் என்பதாம்.

விளைகின்ற நல்ல பயிரானது முளையில் தெரியும் எனல், மகாமகிமையுடைய முத்தியை அடையும் மனம் முதலிலேயே அபுரூபமாகிய குணங்களையுடையதாயிருக்கும் என்பதாம்.

## தானடங்கத் தனது குலமடங்கும்.

### வெண்பா.

தானடங்குங் காலைத் தனது குலமடங்கும்
பீனமனஞ் சாந்தி பெறுமாகின்—ஞான
கருமவகை யிந்தியங்கள் காயம் பிராணன்
சருவமுமே சாந்தியுறுந் தான் (52)

தான் அடங்கும், காலை - காலத்தில், தனது குலம் அடங்கும், எனல், பீனமனம் - விரிகின்ற மனது, சாந்தி, பெறும் ஆகின் - அடையுமானல், ஞான கருமவகை யிந்திரியங்கள் - ஞானேந்திரிய கர்மேந்திரியங்களும், காயம் - சரீரம், பிராணன் - பிராணவாயுவென்னும், சருவமும் - சகலமும், (ஏ) சாந்தி, உறும் - அடையும் என்பதாம், (தான் சாரியை) (ஏ, அசை)

தான் அடங்கும் காலத்தில் தனது குலம் அடங்கும் எனல், விரிகின்ற மனது சாந்தியடையுமானல் ஞானேந்திரிய கர்மேந்திரியங்களும் சரீரம் பிராணவாயு வென்னும் சகலமும் சாந்தியடையும் என்பதாம்.

## முன்கை நீண்டால் முழங்கை நீளும்.

### கலிவிருத்தம்.

தன்கருத்துத் தனித்து நிகழ்வுற
நன்குணர்ந்திடின் ஞான சுகமதா

யுன்சொ ரூப முனக்கு விளங்குறு
முன்கை நீளின் முழங்கையு நீளுமால் (53)

(2) தன் கருத்து - தனது மனம், தனித்து - சங்கற்ப மற்று, நிகழ்வுற - விளங்க, நன்கு - நன்றாக, உணர்ந்திடின் - விசாரித்தால், ஞானசுகம் அது ஆம் - ஞானனந்தமாகிய அந்தப் பிரமமாகும், உன் சொரூபம் - உனது சுய வடிவம், உனக்கு விளங்குறும் - தானுக விளங்கும், என்பதாம், (1) முன்கை, நீளின் - நீண்டால், முழங்கையும் நீளும், எனல் (ஆல், அசை)

முன்கை நீண்டால் முழங்கையும் நீளும் எனல், தனது மனம் சங்கற்பமற்று விளங்க நன்றாக விசாரித்தால் ஞானனந்த மாகிய அந்தப்பிரமமாகும் உனது சுயவடிவம் தானுக விளங் கும் என்பதாம்.

## வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கலைதல்.

### வெண்பா.

ஏற்றநவ நீத மிருந்தும்பின் னெய்க்கலைவார்
தோற்றி மனமிருந்துந் தூயறிஞர்—பாற்றங்கி
யாவற் சலன மழியவிசா ரஞ்செய்யா
தோவற்ற ஞானம்வேட் போர் (54)

ஏற்ற - தகுந்த, நவநீதம் - வெண்ணெய், இருந்தும், பின்- மறுபடியும், நெய்க்கு அலைவார், எனல். தோற்றி - விளங்கி, மனம் இருந்தும், தூய் அறிஞர்பால் - பரிசுத்த ஞானிகளிடம், தங்கி - சகவாசஞ்செய்து, ஆவல் - இச்சையும், சலனம் - சஞ் சலமும், அழிய - கெட, விசாரஞ்செய்யாது - விசாரித்தறியா

ம், ஓவு அற்ற - முடிவில்லாத, ஞானம், வேட்போர் - விரும்
போவார் என்பதாம்.

தகுந்த வெண்ணெய் இருந்தும் மறுபடியும் நெய்க்கு
லைவார் எனல், விளங்கி மனம் இருந்தும்பரிசுத்த ஞானிகளி
ம் சகவாசஞ்செய்து இச்சையும் சஞ்சலமும் கெட விசாரித்
பியாமல் முடிவில்லாத ஞானம் விரும்புவோர் என்பதாம்.

## இல்லாதது பிறவாது அள்ளாதது குறையாது

### கலிவிருத்தம்.

இல்லாதது பிறவா தள்ளாதது குறையா
தெல்லார்சம யத்தோ டெந்நூலினும் வீடொன்
றல்லாதிலை யதைமூ டஞ்ஞானமு மிதயத்
தொல்லாமல்வி சாரித் தோய்வித்தல தோயா. (55)

(1) இல்லாதது பிறவாது அள்ளாதது குறையாது, எனல்,
லார் சமயத்தோடு எந்நூலினும் - எல்லாருடைய சமயங்க
லும் எந்தச்சாஸ்திரத்திலும், வீடு - ஏற்கப்பட்ட மோக்ஷம்,
று அல்லாது இலை - ஒன்றைத்தவிர இல்லை, அதை -
தனை, மூடு - மறைக்கின்ற, அஞ்ஞானமும், (3) இதயத்து -
தில், ஒல்லாமல் - பொருந்தாமல், (2) விசாரித்து - ஆராய்
செய்து, (4) ஓய்வித்து அலது - ஒழியச்செய்தாலல்லாமல்,
ா - கெடாது என்பதாம்.

இல்லாதது பிறவாது அள்ளாதது குறையாது எனல்,
லாருடைய சமயங்களிலும் எந்தச்சாஸ்திரத்திலும் ஏற்கப்
ட மோட்சம் ஒன்றைத்தவிர இல்லை அதனை மறைக்கின்ற

அஞ்ஞானமும் ஆராய்ச்சிசெய்து மனதில் பொருந்தாமல் ஒழி யச்செய்தாலல்லாமல் கெடாது என்பதாம்.

## காலுக்குத் தகுந்த செருப்பா செருப்புக்குத் தகுந்த காலா.

கொச்சகக்கலிப்பா.

காற்கிசையத் தொடுதோலோ கழறொடுதோற் கிசைகாலோ
மேற்பெரியோ ரனுபூதி வியன்சுருதி யந்தத்துக்
கேற்பநிகழ் யுத்தியெலா மெடுத்துபயோ கிப்பதலான்
மாற்படும்யுத் திகட்கிசைய மற்றவைதா மாகாவே (56)

காற்கு - காலுக்கு, இசைய - பொருந்த, தொடுதோலோ- செருப்பா, கழல் - கழலும், தொடுதோற்கு - செருப்புக்கு, *இசை - பொருந்த, காலோ - காலா எனல், மேல் - மேலான, பெரியோர், அனுபூதி - அனுபவத்துக்கும், வியன் - பெருமை யுடைய, சுருதியந்தத்துக்கு - வேதமுடிவுக்கும், ஏற்ப - பொ ருந்த, நிகழ்யுத்தியெலாம் - விளங்கும் யுத்திகளெல்லாம், எடுத்து உபயோகிப்பது, அலால் - அல்லாமல், மால்படும் - மயக்கஞ்செய்யும், யுக்திகட்கு இசைய - யுத்திகளுக்குப்பொ ருந்த, மற்றவை - மற்ற பெரியோரனுபவமும் வேதமுடிவும், (தாம்) ஆகா - உபயோகப்படுவனவல்ல என்பதாம், (ஏ, அசை) (தாம், சாரியை) (* இசைய என்பது இசையென விகாரப் பட்டது.)

காலுக்குப்பொருந்தச் செருப்பா கழலும் செருப்புக்குப் பொருந்தக் காலா எனல், மேலான பெரியோர் அனுபவத்துக் கும் பெருமையுடைய வேதமுடிவுக்கும் பொருந்த விளங்கும்

யுத்திகளெல்லாம் எடுத்து உபயோகிப்பது அல்லாமல் மயக்கஞ் செய்யும் யுத்திகளுக்குப்பொருந்த மற்ற பெரியோரனுபவமும் வேதமுடிவும் உபயோகிக்கப்படுவனவல்ல என்பதாம்.

## கெட்டவன் பட்டணஞ் சேரவேண்டும்.

### கலிவிருத்தம்.

கெட்டு ளோன்பட் டினம்புகல் கீழ்மையா
நட்ட மீயுமஞ் ஞான வசத்திடர்ப்
பட்ட யானெவ னுய்வனென் பானெறி
கிட்டு மாமறைக் கேள்வியி னிற்றலே (57)

கெட்டுளோன் - சம்பாத்தியமற்றவன், பட்டினம் புகல் - பட்டணஞ்சேரவேண்டும் எனல், கீழ்மையா - இழிவாக, நட்டம் ஈயும் - நஷ்டத்தைத்தரும், அஞ்ஞானவசத்து - அறியாமையின் வசமாய், இடர்ப்பட்டயான் - துன்பமடைந்த நான், எவன் - எப்படி, உய்வன் - உய்வேன், என்பான் - என்று யோசிப்பவன், நெறிகிட்டும் - வழிகிடைத்தற்கேதுவாகிய, மா - சிறப்பையுடைய, மறை - வேதாகமசாஸ்திரங்களின், கேள்வியில் - சிரவணத்தில், நிற்றல் - நிற்கக்கடவன் என்பதாம், (ஏ, அசை)

சம்பாத்தியமற்றவன் பட்டணஞ்சேரவேண்டும் எனல், இழிவாக நஷ்டத்தைத் தரும் அறியாமையின் வசமாய்த் துன்பமடைந்த நான் எப்படியுய்வேன் என்று யோசிப்பவன் வழிகிடைத்தற்கேதுவாகிய சிறப்பையுடைய வேதாகம சாஸ்திரங்களின் சிரவணத்தில் நிற்கக்கடவன் என்பதாம்.

## வீட்டுத் தீபம் விருந்தினர்க்குமுதவும்.

வீட்டிற் றீபம் விருந்தினர் கட்குமா
நாட்டு மோர்பர ஞானி விசாரமேய்
பீட்டு நூலி னுணர்ச்சி பினுநலம்
வேட்ட சாதக ருக்கும் விளக்கமே. (58)

வீட்டில் தீபம் - வீட்டிலுள்ள விளக்கு, விருந்தினர்கட்கும் ஆம் - புதிதாய் வந்தவர்களுக்கும் உபயோகமாம் எனல், நாட்டும் - ஆஸ்திகத்தை ஸ்தாபிக்கும், ஓர் - ஒரு, பரஞானி - மேலான ஞானவான், விசாரம் ஏய் -ஆராய்ச்சியாகப் பொருந்திய, பீட்டு - பெருமையுடைய, நூலின் உணர்ச்சி - சாஸ்திரத்தின் உணர்வு, பினும் - பிற்காலத்திலும், நலம் - நல்ல முத்தியை, வேட்ட - விரும்பிய, சாதகருக்கும் - அப்பியாசிகளுக்கும், விளக்கமே - அனுபவ விளக்கத்திற்குக் காரணமே என்பதாம்.

வீட்டிலுள்ள விளக்குப் புதிதாய் வந்தவர்களுக்கும் உபயோகமாம் எனல், ஆஸ்திகத்தை ஸ்தாபிக்கும் ஒரு மேலான ஞானவான் ஆராய்ச்சியாகப் பொருந்திய பெருமையுடைய சாஸ்திரத்தின் உணர்வு பிற்காலத்திலும் நல்ல முத்தியை விரும்பிய அப்பியாசிகளுக்கும் அனுபவவிளக்கத்திற்குக் காரணமே என்பதாம்.

## பந்திக்கு முந்து படைக்குப் பிந்து

பந்திக்கு முந்து படைக்குநீ பிந்து
விந்தையா ஞான விசாரத்திற் கான்றோர்
சந்தநற் சங்கந் தனைத்தேடாய் நெஞ்சே
தொந்தக்கன் மத்திற் றொடர்ந்து செல்லேலே (59)

(1) பந்திக்கு முந்து படைக்கு நீ பிந்து, எனல், (3) விந்தையாம் - ஆச்சரியமாகிய, ஞான விசாரத்திற்கு, ஆன்றோர்-அறிஞர்களுடைய, சந்தநற்சங்கந்தனை - குணமாகிய நல்ல சேர்க்கையை, தேடாய் - நாடுவாய், (2) நெஞ்சே - மனமே, (4) தொந்தக்கன்மத்தில் - பேதப்பற்றிற் கேதுவாகிய கர்மமார்க்கத்தில், தொடர்ந்து செல்லேல் - தொடர்ச்சியாய்ச்செல்லாதே என்பதாம். (ஏ, அசை)

பந்திக்கு முந்து படைக்கு நீ பிந்து எனல், மனமே, ஆச்சரியமாகிய ஞானவிசாரத்திற்கு அறிஞர்களுடைய குணமாகிய நல்ல சேர்க்கையை நாடுவாய் பேதப் பற்றிற்கேதுவாகிய கர்மமார்க்கத்தில் தொடர்ச்சியாய்ச்செல்லாதே என்பதாம்.

## எண்சாணுடலுக்குச் சிரசே பிரதானம்.

### வெண்பா.

எண்சா ணுடம்பிற் சிரசே பிரதானம்
பெண்சோரு மட்டப் பிரமாணத்—தொண்சத்தம்
போதநெறி யாமேற் புரியட் டகவுடலிற்
சோதிமனம் போம்பிரமத் துள். (60)

(1) எண்சாண் உடம்பில் சிரசே பிரதானம், எனல், பெண் - பேதைமை, சோரும் - தேய்தற்கேதுவாகிய, அட்டப்பிரமாணத்து - எட்டு அளவைகளில், ஒண் சத்தம் - விளக்கமாகிய சப்தப்பிரமாணமே, போதநெறியாம் - ஞானமார்க்கத்திற்குக் காரணமாம் என்பதாம். மேல் - மேலும், புரியட்டக உடலில் - புரியஷ்டக சரீரத்தில் ஒன்றுகும், சோதி - பிரகாசமாகிய சத்துவமான, மனம் - மனதே, (3) போம் - இலயமாகும் என்பதுமாம் (2) பிரமத்துள் - பிரம சொரூபத்தில்.

என்சாண் உடம்பில் சிரசே பிரதானம் எனல், பேதைமை தேய்தற்கேதுவாகிய எட்டு அளவைகளில் விளக்கமாகிய சப்தப்பிரமாணமே ஞானமார்க்கத்திற்குக் காரணமாம் என்பதாம் மேலும் புரியஷ்டக சரீரத்தில் ஒன்றுகும் பிரகாசமாகிய சத்துவமான மனமே பிரமசொரூபத்தில் இலயமாகும் என்பதுமாம்.

## கடுங்காற்று மழைகாட்டும் கடுநட்புப் பகைகாட்டும்.

### கொச்சகக்கலிப்பா.

கடுங்காற்று மழைகாட்டுங் கடுநட்புப் பகைகாட்டு
மொடுங்காதெப் பொருளுநனி யுணரும்விசா ரணைஞானத்
திடந்தோற்று விக்குமறை திகழ்தருசற் கருமங்க
ணெடுங்கால மிகப்புரியி னேருமுமுட் சுத்துவமே (61)

(1) கடுங்காற்று - பெருங்காற்று, மழைகாட்டும், கடுநட்பு - மிகவும் அதிகமான சிநேகம், பகைகாட்டும், எனல், ஒடுங்காது - ஐயமில்லாமல், எப்பொருளும் - எல்லா வஸ்துக்களையும், நனி - நன்றாக, உணரும் - அறியும், விசாரணை - ஆராய்ச்சி, ஞானத்திடம் - திடஞான அனுபவத்தை, தோற்றுவிக்கும் -உண்டாக்கும், மறை - வேதாகமங்களில், திகழ்தரு- விளங்குகின்ற, சற்கருமங்கள் - புண்ணியகர்மங்களை, நெடுங்காலம் - நீண்டகாலம், மிகப்புரியின் - அதிகமாய்ச் செய்து வந்தால், (3) நேரும் - உண்டாகும், என்பதாம், (2) முமுட்சுத்துவம் - கர்மத்தைவெறுத்து மோட்சத்தை விரும்புந் தன்மை. (ஏ, அசை)

பெருங்காற்று மழைகாட்டும் மிகவும் அதிகமான சிநேகம் பகைகாட்டும் எனல், ஐயமில்லாமல் எல்லா வஸ்துக்களை

யும் நன்றாக அறியும் ஆராய்ச்சி திடஞான அனுபவத்தை உண்டாக்கும் வேதாகமங்களில் விளங்குகின்ற புண்ணியகர்மங்களை நீண்டகாலம் அதிகமாய்ச்செய்துவந்தால் கர்மத்தை வெறுத்து மோட்சத்தை விரும்புந்தன்மை உண்டாகும் என்பதாம்.

## தீராத விதிக்குத் தெய்வமே கதி.

வெண்பா

தீராப் பொறியதற்குத் தெய்வந்தா னேகதியா
மோராக்கன் மம்பத்தி யோகத்தா—னேராய்
முடியா வழக்குக்கண் முற்றுமுயர் ஞான
மடியாச் சமாதான மாம். (62)

தீராப்பொறி அதற்கு - தீராதவிதிக்கு, தெய்வந்தானே- தெய்வமே, கதியாம், எனல், ஓரா - விசாரியாத, கன்மம் பத்தி யோகத்தால் - கர்மத்தாலும் பக்திமார்க்கத்தாலும் யோகநெறியாலும், நேராய் - ஒழுங்காய், முடியா - தீர்மானிக்கப்படாத, வழக்குக்கள், முற்றும் - எல்லாம், உயர்ஞானம் அடியா - மேலான ஞானவிசாரத்தின் ஆரம்பத்திலேயே, சமாதானம் ஆம், என்பதாம்.

தீராதவிதிக்குத்தெய்வமே கதியாம் எனல், விசாரியாத கர்மத்தாலும் பக்திமார்க்கத்தாலும் யோகநெறியாலும் ஒழுங்காய்த் தீர்மானிக்கப்படாத வழக்குக்கள் எல்லாம் மேலான ஞானவிசாரத்தின் ஆரம்பத்திலேயே சமாதானமாம் என்பதாம்.

## கன்னனுக்கும் குயவனுக்குஞ் சன்மப்பகை.

### பத்தும் பதனம்.

கன்னனுக் குங்கும்ப காரற்குஞ் சன்மமூரண்
மன்னய ஞான மயற்கன்மந்—துன்னைமை
பத்தும் பதனமிரு பண்பிந் தியங்கள்செனுந்
தத்தம் விடயத் தடை. (63)

கன்னனுக்கும், கும்பகாரற்கும் - குயவனுக்கும், சன்மமூரண் - சன்மப்பகை எனல், மன் ஆய - அரசனைப்போல்வதாகிய, ஞானம், மயற்கன்மம் - மயக்கத்தைத்தரும் கர்மம் எனும் இரண்டும், துன்னைமை - ஒன்றுக்கொன்று விரோதத்தால் கூடாத தன்மையுடையதாகும் என்பதாம், பத்தும் பதனம், எனல், இருபண்பு - இரண்டு தன்மையுடைய, இந்தியங்கள் - கர்மேந்திரியங்களையும் ஞானேந்திரியங்களையும், செனும் - செல்லப்படுகின்ற, தத்தம் - அவை அவைகளின், விடயத்தடை - விஷயங்களினின்றுந் தடுக்குஞ்செயலையாம்.

கன்னனுக்கும் குயவனுக்கும் சன்மப்பகை எனல், அரசனைப் போல்வதாகிய ஞானம், மயக்கத்தைத்தரும் கர்மம் எனும் இரண்டும் ஒன்றுக்கொன்று விரோதத்தால் கூடாத தன்மையுடையதாகும் என்பதாம்.

பத்தும் பதனம் எனல், இரண்டு தன்மையுடைய கர்மேந்திரியங்களையும் ஞானேந்திரியங்களையும் செல்லப்படுகின்ற அவை அவைகளின் விஷயங்களினின்றுந் தடுக்குஞ்செயலையாம்.

## துடைப்பத்துக்குப் பட்டுக்குஞ்சமா.

மெய்ஞ்ஞானப் பூணிற்கே மேயதலாற் கன்மத்திற்
கெஞ்ஞான்றுங் கண்டனையொன் றில்லாதே—யிஞ்ஞாலத்
தோதலுறு சித்தாந்த வொப்புரவு சார்வதுவோ
சோதினிக்குப் பட்டின்குச் சோ. (64)

(5) மெய்ஞ்ஞானப்பூணிற்கே - உண்மையான ஞான மென்னும் ஆபரணத்திற்கே, மேயது - பொருந்தியது, அலால்- அல்லாமல், கன்மத்திற்கு - கன்மமார்க்கத்திற்கும், (3) எஞ் ஞான்றும் - எப்போதும், கண்டனையொன்று - கண்டிக்கப்ப டுஞ்செயல் ஒன்று, இல்லாது - இல்லாமல், (ஏ) (2) இஞ்ஞா லத்து - இவ்வுலகில், (4) ஓதலுறு - சொல்லப்படுகின்ற, சித் தாந்த ஒப்புரவு - சித்தாந்த பக்ஷமென்னும் நியமமான அழகும், (6) சார்வதுவோ - பொருந்துவதோ இல்லை எனலாம், (1) சோ தினிக்கு - துடைப்பத்திற்கு, பட்டின் குச்சோ - பட்டுக்குஞ் சமா, என்பது,

துடைப்பத்திற்குப் பட்டுக்குஞ்சமா என்பது, இவ்வுல கில் எப்போதும் கண்டிக்கப்படுஞ்செயலொன்று இல்லாமல் சொல்லப்படுகின்ற சித்தாந்த பக்ஷமென்னும் நியமமான அழ கும் உண்மையான ஞானமென்னும் ஆபரணத்திற்கே பொருந் தியது அல்லாமல் கன்மமார்க்கத்திற்கும் பொருந்துவதோ இல் லையெனலாம்.

## எருத்துநோய் காக்கை அறியுமா.

### கலிவிருத்தம்.

பரிவுறு சிந்தை பரமசாந் திமைத்தான்
விரவுமுன் மூமூட்சு வெந்துயர் மிகவு
மருவினு மாயா வாசனை யொடுங்கா
வெருதுநோய் காக மிவணறி யாதே (65)

(3) பரிவு உறு - அன்புமிகுந்த, சிந்தை - மனதில், பரம- மேலான, சாந்தியை - உபசாந்தத்தை, (தான்) விரவுமுன் - அடைவதன் முன்னே, (2) முமூட்சு, (4) வெந்துயர் - கொடிய துன்பங்கள், மிகவும் மருவினும் - மிகப்பொருந்தினும், மாயாவாசனை - மாயையின் வாசனைசக்திகள், ஒடுங்கா - அடங்காமல் எழும் எனலாம் (1) எருதுநோய் - எருத்தின் வலியை, காகம் - காக்கை, இவண் - இங்கே, அறியாது, என்பது. (ஏ, அசை) (தான், சாரியை) (எருது, இடைக்குறை).

எருத்தின் வலியைக் காக்கை இங்கே அறியாது என்பது, முமூட்சு அன்புமிகுந்த மனதில் மேலான உபசாந்தத்தை அடைவதன் முன்னே கொடிய துன்பங்கள் மிகப்பொருந்தினும் மாயையின் வாசனைசக்திகள் அடங்காமல் எழும் எனலாம்.

## சுமப்பவனே காவடிப்பாரம் அறிவான்.

### வெண்பா.

பரிப்பவனே காவடியின் பார மறிவா
னுரைத்தவெளி மைய லொருவா—றிரித்ததனாற்
பன்னு முமூட்சுத்தன் பாற்றோன் றுடலுலகை
யின்னலுரு வென்றுணர்வா னே. (66)

பரிப்பவனே -சுமப்பவனே, காவடியின் பாரம் அறிவான், என்பது, உரைத்த - சொல்லப்பட்ட, வெளிமையல் - வெளிமயக்கத்தை, ஒருவாறு, இரித்ததனால் - நீக்கியதால், பன்னு - பொருந்திய, முமூட்சு, தன்பால் - தன்னிடத்து, தோன்று - தோற்றமான, உடல் உலகை - சரீரத்தையும் சகத்தையும், இன்னல் உரு - துன்பவடிவம், என்று, உணர்வான் - அறிவான் எனலாம். (ஏ, அசை)

சுமப்பவனே காவடியின் பாரம் அறிவான் என்பது, சொல்லப்பட்ட வெளிமயக்கத்தை ஒருவாறு நீக்கியதால், பொருந்திய முமுட்சுத் தன்னிடத்துத்தோற்றமான சரீரத்தையும் சகத்தையும் துன்பவடிவம் என்று அறிவான் எனலாம்.

## தவளை தண்ணீர்க்கும் ஓணன் மேட்டுக்கும் இழுத்தல்.

### கலிவிருத்தம்.

தேரை நீரினுக் கோதி திடர்க்குற
லேரு றுஞ்சுப விச்சைநற் செந்நெறிக்
கீர நெஞ்சை யிழிந்தமுன் வாசனை
நேருந் தீய நெறிக்கட் கவர்தலே. (67)

(1) தேரை - தவளை, நீரினுக்கு - தண்ணீர்க்கும், ஓதி - ஓணன், திடர்க்கு - மேட்டுக்கும், உறல் - இழுத்தல் என்பது, (3) ஏர் உறும் - அழகுபொருந்திய, சுப இச்சை - மங்களமான மோட்ச விருப்பமானது, நற்செந்நெறிக்கு - மிகவும் நன்மையாகிய மார்க்கத்திற்கு, ஈர - இழுக்க, (2) நெஞ்சை - மனதை, (4) இழிந்த - இழிவான, முன்வாசனை - பூர்வ சன்மப் பழக்கங்களானவை, நேரும் - பொருந்திய, தீயநெறிக்கண் - தீயமார்க்கத்திற்கு, கவர்தல் - இழுத்தல் எனலாம். (ஏ, அசை)

தவளை தண்ணீர்க்கும் ஓணன் மேட்டுக்கும் இழுத்தல் என்பது, மனதை அழகு பொருந்திய மங்களமான மோட்ச விருப்பமானது மிகவும் நன்மையாகிய மார்க்கத்திற்கு இழுக்க இழிவான பூர்வசன்மப்பழக்கங்களானவை பொருந்திய தீய மார்க்கத்திற்கு இழுத்தல் எனலாம்.

## வெறுநாய் சந்தைக்குப்போய் வெள்ளிக்கோலடியுண்டது.

### அறுசீர்விருத்தம்.

உடையா ரிலாநாய் சந்தைபுகி னுண்ணுந் துலைக்கோன்
மொத்தெங்கு
முடியாப் பரானு பூதியுறா முத்தி வேட்கை
யுள்ளந்தான்
விடலா விவகா ரங்களுறின் மேவு போகத்
தாலிடரே
படுமாற் பிரம பாவனையிற் பயிலாத் தெளிவில்
பார்வையினே (68)

(1) உடையார் இலா - உடையவரில்லாத, நாய், சந்தை புகின் - சந்தையிற்போனால், (3) உண்ணுந் துலைக்கோல் மொத்து - துலாக்கோலால் அடியுண்ணும் எனல், (2) எங்கும், (4) முடியா - முடிவற்ற, பர அனுபூதி உறா - பிரமானுபவம் பறாத, முத்திவேட்கை - மோட்ச இச்சையுடைய, உள்ளம் - மனமானது, (தான்) (6) விடலா - விடாத, விவகாரங்கள், உறின் - பொருந்திடின், மேவு - ஏற்படுகின்ற, போகத்தால் - விஷயானுபவத்தல், இடரே - துன்பமே, படும் - அடையும் என்பதாம், (ஆல்) (5) பிரமபாவனையில், பயிலா - சேராத, தெளிவுஇல் - தெளிவற்ற, பார்வையின் - நோக்கத்தினால், (ஏ, அசை) (தான், சாரியை) (ஆல், அசை)

உடையவரில்லாத நாய் சந்தையிற்போனால் எங்கும் துலாக்கோலால் அடியுண்ணும் எனல், முடிவற்ற, பிரமானுபவம் பெறாத மோட்ச இச்சையுடைய மனமானது பிரம

பாவனையிற்சேராத தெளிவற்ற நோக்கத்தினால் விடாத விவகாரங்கள் பொருந்திடின் ஏற்படுகின்ற விஷயானுபவத்தால் துன்பமே அடையும் என்பதாம்.

## உரலுக்கு ஒருபக்கம் இடி, மத்தளத்திற்கு இருபக்கம் இடி.

### கட்டளைக்கலித்துறை.

துரிசுற்ற பெத்தர்க் கறியாமை யால்வருந் துன்பமென்றுந்
திரமுத்தி தன்னை விழைந்தவர்க் குண்மை திகழ்வளவும்
வருமிட் டளமறி யாமையி னாற்குறை வாமறிவா
லுரலுக் கொருபான் முழாவிற் கிருபா லுளவிடியே (69)

(2) துரிசு உற்ற - குற்றம் பொருந்திய, பெத்தர்க்கு - மாயையாற் கட்டுப்பட்டவர்களுக்கு, (4) அறியாமையால், (6) வரும், (5) துன்பம், (3) என்றும் - எப்போதும், (7) திரமுத்தி தன்னை - நிலையான மோட்சத்தை, விழைந்தவர்க்கு - விரும்பினோர்க்கு, உண்மை, திகழ்வு அளவும் - விளங்குமட்டும், (10) வரும், என்பதாம், (9) இட்டளம் - துன்பம், (8) அறியாமையினால் - அறியாமையாலும், குறைவாம் அறிவால் - குறைந்த அறிவினாலும், (1) உரலுக்கு, ஒருபால் - ஒருபக்கமும், முழாவிற்கு - மத்தளத்திற்கு, இருபால் - இருபக்கமும், உளஇடி - இடிகள் உள்ளன எனல், (ஏ, அசை).

உரலுக்கு ஒருபக்கமும், மத்தளத்திற்கு இருபக்கமும் இடிகள் உள்ளன எனல், குற்றம் பொருந்திய மாயையாற் கட்டுப்பட்டவர்களுக்கு எப்போதும் அறியாமையால் துன்பம் வரும், நிலையான மோட்சத்தை விரும்பினோர்க்கு உண்மை

விளங்குமட்டும் அறியாமையாலும் குறைந்த அறிவினலும் துன்பம் வரும் என்பதாம்.

## கோல்லைக்குப் பல்லி குடிக்குச் சகுனி.

### கலிவிருத்தம்.

நல்ல நகருக்கு நாத்திகர் கேடுசெய்
வல்லர் மனதிக்கு மைக்கற் பனைவழிச்
செல்ல விடுதல் சிதைக்கு மறிவெலாங்
கொல்லைக்குப் பல்லி குடிக்குச் சகுனியே (70)

(2) நல்ல, நகருக்கு - பட்டணத்திற்கு, நாத்திகர் - நாஸ்திகர், கேடு, செய் - செய்ய, வல்லர் - வல்லவர்கள், மனதிக்கு - மனமுதலானவைகளுக்கு, மை - குற்றமான, கற்பனைவழி - கற்பனைகளில், செல்லவிடுதல் - செல்லவிடுதலானது, (4) சிதைக்கும் - கெடுக்கும் எனவாம், (3) அறிவு - நல்ல உணர்ச்சி, எலாம் - முழுமையும், (1) கொல்லைக்கு - தோட்டத்திற்கு, பல்லி - பல்லியெனும் செடிகளும், குடிக்கு - கௌரவ குலத்திற்கு, சகுனி - சகுனியென்பவனும், கெடுதிக்கேதுவாவர் என்பது. (ஏ, அசை) (செய்ய என்பது செய் என்று விகாரப்பட்டது).

தோட்டத்திற்குப் பல்லி யெனும் செடிகளும் கௌரவ குலத்திற்குச் சகுனியென்பவனும் கெடுதிக்கேதுவாவர் என்பது, நல்ல பட்டணத்திற்கு நாஸ்திகர் கேடுசெய்ய வல்லவர்கள், மனமுதலானவைகளுக்குக் குற்றமான கற்பனைகளில் செல்லவிடுதலானது நல்ல உணர்ச்சி முழுமையும் கெடுக்கும் எனவாம்.

## அடுக்கும் அருமை உடைக்கிற பூனையறியுமா.

### கட்டளைக்கலித்துறை.

அடுக்கு மருமை யுடைக்குமார்ச் சால மறிவதிலை
எடுக்கு மறிஞரைச் சார்ந்து மனத்தை யிழுத்துமொருப்
படுக்குந் தெளிவை யிழிவா சனையாம் பசாசுகளே
கெடுக்கு மதனாற் றிடவா சனைநனி கிட்டுகவே (71)

அடுக்கும் அருமை, உடைக்கும் மார்ச்சாலம் - உடைக்கிற பூனை, அறிவதிலை - அறியாது எனல், எடுக்கும் - பந்தத்தினின்று கரையேற்றும், அரிஞரைச்சார்ந்தும், மனத்தை, இழுத்தும் - விஷயங்களிலிருந்து திருப்பியும், ஒருப்படுக்கும் - ஏகாக்கிரப்படுத்தும், தெளிவை - தேர்ச்சியை, இழி - இழிவான, வாசனையாம் - பழக்கங்களாகிற, பசாசுகள், (ஏ) கெடுக்கும், அதனால் - ஆதலால், திடவாசனை - திடமான நல்ல வாசனையை, நனிகிட்டுக (ஏ) - உறுதியாக அடையவேண்டும் என்பதாம் (ஏ, ஏ, அசைகள்).

அடுக்கும் அருமை உடைக்கிற பூனை அறியாது எனல், பந்தத்தில் நின்று கரையேற்றும் அறிஞரைச்சார்ந்தும் மனத்தை விஷயங்களிலிருந்து திருப்பியும் ஏகாக்கிரப்படுத்தும் தேர்ச்சியை இழிவான பழக்கங்களாகிற பசாசுகள் கெடுக்கும் ஆதலால் திடமான நல்லவாசனையை உறுதியாக அடையவேண்டும் என்பதாம்.

## புலி பசித்தாலும் புல்லைத்தின்னுமா.

### கலிவிருத்தம்.

வலிமு முட்சுக்கள் வல்லையின் முத்தியாம்
பலசு கத்தைப் பதிபந்த மொன்றிமே
விலர்க ளேனு மிடையார் விடயமால்
புலிப சிப்பினும் புற்கறி யாவரோ (72)

(2) வலி - வல்லமையுடைய, முமுட்சுக்கள், (4) வல்லையின் - சீக்கிரத்தில், முத்தியாம் - மோட்சமென்கிற, பலசுகத்தை - பிரயோசனமான ஆனந்தத்தை, (3) பதிபந்தம் - பிரதிபந்தத்தை, ஒன்றி - அடைந்து, (5) மேவிலர்களேனும் - பொருந்தார்களாயினும், (7) இடையார் - சேரார்கள் எனலாம், (6) விடயமால் - விஷயஇச்சையை, (1) புலி, பசிப்பினும் - பசித்தாலும், புல் - புல்லை, கறியா - தின்னாது என்பது. (அரோ, அசை)

புலி பசித்தாலும் புல்லைத்தின்னாது என்பது, வல்லமையுடைய முமுட்சுக்கள் பிரதிபந்தத்தை அடைந்து, சீக்கிரத்தில், மோட்சமென்கிற பிரயோசனமான ஆனந்தத்தைப் பொருந்தார்களாயினும் விஷயஇச்சையைச் சேரார்கள் எனலாம்.

## அழுதாலும் பிள்ளையை அவளே பெறவேண்டும்.

### வெண்பா.

அழுதாலுஞ் சேயை யவளே பயப்பண்
முழுவாசை யுற்று முமுட்சுப்—பழகித்
தனதிடத்து நின்றே சதானந்த ஞான
வனுபவத்தை யுற்றிடுவ னல் (73)

(1) அழுதாலும், சேயை - பிள்ளையை, அவளே, பயப்பள் - பெறுவாள், (எனல்), (3) முழுவாதை - துன்பமெல்லாம், உற்று - அடைந்து, (2) முமூட்சு, (4) பழகி - அப்பியாசித்து, தனதிடத்து நின்றே சதானந்த ஞான அனுபவத்தை, உற்றிடுவன் - பொருந்துவான் (என்பதாம்). (ஆல், அசை).

அழுதாலும் பிள்ளையை அவளே பெறுவாள் எனல் முமூட்சுத், துன்பமெல்லாம் அடைந்து அப்பியாசித்துத்தனதிடத்து நின்றே சதானந்த ஞான அனுபவத்தைப் பொருந்துவான் என்பதாம்.

## காலிற் சுற்றிய பாம்பு கடியாமல் விடாது.

### கலிநிலைத்துறை.

காலிற் சுற்றிய கட்செவி கடித்திடா தொழியா
சாலச் சிந்தையி னெழுந்தொழி யாதுள தகைமை
மேலைத் தத்துவ முத்திவேட் பாரியன் மெய்ந்நூன்
மூலத் தாற்பர விசாரஞா னந்தரு முறையே (74)

(1) காலிற் சுற்றிய, கட்செவி - பாம்பு, கடித்திடாது ஒழியாது - கடியாமற்போகாது (எனல்), சால - நிறைய, சிந்தையின் - மனதில், எழுந்து - உண்டாகி, ஒழியாது உள - நீங்காதிருக்கிற, தகைமை - பெருமை பொருந்திய, மேலை - மேலான, தத்துவமுத்தி - உண்மையாகிய மோட்சத்தின், வேட்பு - இச்சையானது, ஆரியன் - குரு, மெய்ந்நூல் - மெய்யான சாஸ்திரங்கள், மூலத்தால் - காரணமாக, (3) பர -

சிரேஷ்டமாகிய, விசார ஞானம் தரும் - விசார ஞானத்தைக் கொடுக்கும் (என்பதாம்), (2) முறையே - கிரமமாய்.

காலிற் சுற்றிய பாம்பு கடியாமற் போகாது எனல் நிறைய மனதில் உண்டாகி நீங்காதிருக்கிற பெருமை பொருந்திய மேலான உண்மையாகிய மோட்சத்தின் இச்சையானது குரு மெய்யான சாஸ்திரங்கள் காரணமாகக் கிரமமாய்ச் சிரேஷ்டமாகிய விசார ஞானத்தைக் கொடுக்கும் என்பதாம்.

## நாள் செய்வது நல்லவர் செய்யார்.

### வஞ்சி விருத்தம்.

நாள்செய்வது நல்லவர் செய்யார்
சூழ்வெந்துயர் முச்சக மென்றுண்
மீள்போதினின் மேவும்வி சாரக்
கோள்போல்வகொ டார்நிலை மேலோர் (75)

(1) நாள் செய்வது நல்லவர் செய்யார் (எனல்), (3) சூழ் - சூழ்கின்ற, வெந்துயர் - கொடிய துன்பத்திற்கேதுவே, (2) முச்சகம் - மூன்று உலகமும், (4) என்று - எனத்தெரிந்து, உள் - மனது, மீள்போதினில் - மீளுங்காலத்தில், மேவும் - உண்டாகிற, விசாரக்கோள் - விசாரத்தின் கொள்கை, போல்வ - போல்வதாகிய தீவிரத்தை, (6) கொடார், (5) நிலை மேலோர் - நிலைமையுடைய பெரியோரும்.

நாள் செய்வது நல்லவர் செய்யார் எனல் மூன்று உலகமும் சூழ்கின்ற கொடிய துன்பத்திற்கேதுவே எனத்தெரிந்து மனது மீளுங்காலத்தில் உண்டாகிற விசாரத்தின்

கொள்கை போல்வதாகிய தீவிரத்தை நிலைமையுடைய பெரியோரும் கொடார் என்பதாம்.

## சிரிக்கப்பேசுகிறவர் கெடுப்பார் அழப்பேசுகிறவர் வாழ்விப்பார்.

### கலி நிலைத் துறை.

நகச்சொல் வார்கெடுப் பாரழச் சொல்பவர் நன்கே
மிகச்செய் வார்விட யஞ்சுக மெனத்தெரி விக்குஞ்
சகத்துப் பந்தமும் விடயம்யா வையுமிடர் தாஞ
நிகழ்த்து ஞான்றுமுத் தியுந்தரு மேதுவா நினைவார் (76)

நகச்சொல்வார் - சிரிக்கப்பேசுகிறவர், கெடுப்பார், அழ, சொல்பவர் - பேசுகிறவர், நன்கே - நன்மையே, மிக - மிகவுண்டாகும்படி, செய்வார், (எனல்), விடயம் - சப்தாதி விஷயங்களை, சுகமென, தெரிவிக்கும் - காட்டுகின்ற, சகத்து - உலகமானது, பந்தமும் - பந்தத்தையும், விடயம் யாவையும் - விஷயங்களையெல்லாம், இடர் - துன்பமயம், (தான்), ஆ - ஆக, நிகழ்த்து - தெரிவிக்கின்ற, ஞான்று - காலம், முத்தியும் - மோட்சத்தையும், தரும் ஏது ஆ - கொடுக்கும் காரணமாக, நினைவார் - பெரியோர் நிச்சயிப்பார் (என்பதாம்). (தான், சாரியை).

சிரிக்கப்பேசுகிறவர் கெடுப்பார் அழப்பேசுகிறவர் நன்மையே மிகவுண்டாகும்படி செய்வார் எனல் சப்தாதி விஷயங்களை சுகமெனக் காட்டுகின்ற உலகமானது பந்தத்தையும், விஷயங்களையெல்லாம் துன்பமயமாகத் தெரிவிக்கின்ற காலம் மோட்சத்தையும் கொடுக்கும் காரணமாகப் பெரியோர் நிச்சயிப்பார் என்பதாம்.

## உற்றது சொன்னால் அற்றது பொருந்தும்.

கலித்துறை.

அற்றமின் முத்தி விருப்பினர் தன்னுடை யனுபூதி
முற்றும றைப்பற வாரியன் முன்சொலின் முறையாக
நிற்றலில் கற்பித பேதம றச்சிவ நிலைபெற்றா
ருற்றது ரைத்திடி னற்றதி சைந்திடு முலகிற்கே (77)

(3) அற்றம் இல் - சோர்வில்லாத, முத்தி விருப்பினர் - முமுட்சுக்கள், தன்னுடை அனுபூதி - தனது அனுபவம், முற்றும் - எல்லாம், மறைப்பற - மறையாமல், ஆரியன் முன் - குரு சந்நிதியில், சொலின் - சொல்லிக்கொண்டால், முறையாக - கிரமமாக, நிற்றல் இல் - நிலையில்லாத, கற்பித - பொய்யாகிய, பேதம், அற - நீங்க, சிவநிலை - சிவானுபூதி நிலைமையை, பெற்றார் - அடைந்தவராவர் (என்பதாம்), (1) உற்றது, உரைத்திடின் - சொன்னால், அற்றது, இசைந்திடும் - பொருந்தும், எனல்), (2) உலகிற்கு - உலகத்தில். (ஏ, அசை).

உற்றது சொன்னால் அற்றது பொருந்தும் எனல் உலகத்தில் சோர்வில்லாத முமுட்சுக்கள் தனது அனுபவம் எல்லாம் மறையாமல் குரு சந்நிதியில் சொல்லிக்கொண்டால் கிரமமாக நிலையில்லாத பொய்யாகிய பேதம் நீங்கச்சிவானுபூதி நிலைமையை அடைந்தவராவர் என்பதாம்.

### இதுவுமது.

பற்றுமு டம்பக மன்றெதி ரிப்பிர பஞ்சம் பொய்
கெற்றென விங்ஙன்வி ளக்கிவி ளங்கிய சித்தேயான்
எற்றைய மென்றுள மெண்ணிடி னப்பொரு ளினிதோன்றும்
உற்றது ரைத்திடி னற்றதி சைந்திடு முலகிற்கே (78)

(3) பற்றும் - பற்றியிருக்கிற, உடம்பு, அகம் அன்று - நானல்ல, எதிர் - தோற்றுகிற, இப்பிரபஞ்சம், பொய் என்று, தெற்றென - தெளிவாக, இங்ஙன் - இப்படி, விளக்கி - தெரிவித்து, (5) விளங்கிய - தானும் விளங்கிக்கொண்டிருக்கிற, சித்தே - ஞான சொரூபமே, யான் - நான், (4) எற்றையும் - சந்ததம், (6) என்று - என, உளம் எண்ணிடில் - மனதிற் பாவித்தால், அப்பொருள் - அந்தப்பிரமம், இனிது - நன்றாக, ஒன்று ஆம் - வேறென்பதின்றிப் பாவித்தவனது ஏக சொரூபமாகவே விளங்கும் என்பதாம், (1) உற்றது, உரைத்திடின் - சொன்னால், அற்றது, இசைந்திடும் - பொருந்தும் எனல், (2) உலகிற்கு - உலகத்தில், (ஏ, அசை).

உற்றது சொன்னால் அற்றது பொருந்தும் எனல் உலகத்தில் பற்றியிருக்கிற உடம்பு நானல்ல, தோற்றுகிற இப்பிரபஞ்சம் பொய்யென்று தெளிவாக இப்படித் தெரிவித்துச் சந்ததம் தானும் விளங்கிக்கொண்டிருக்கிற ஞான சொரூபமே நான் என மனதிற்பாவித்தால் அந்தப்பிரமம் நன்றாக வேறென்பதின்றிப் பாவித்தவனது ஏக சொரூபமாகவே விளங்கும் என்பதாம்.

## மனம் போலும் மாங்கல்யம்.

### வெண்பா.

யாவ னொருவ னிதயநிலை யெவ்வணமா
மோவறுமவ் வண்ண முபதேச—மீவன்
புனைந்தா ரியனுருவம் பூரணனுங் கின்பா
மனம்போலு மங்கலநாண் மன் (79)

(2) யாவன் ஒருவன் - ஒருவனுடைய, இதய நிலை - மனோ நிச்சயம், எவ்வணம் ஆம் - எவ்விதம் இருக்குமோ, ஓவு அறும் - தளர்வு அற்ற, அவ்வண்ணம் - அவ்விதமே, (6) உபதேசம், ஈவன் - செய்தருளுவன், (5) புனைந்து - பூண்டு, (4) ஆரியன் உருவம் - குரு வடிவம், (3) பூரணன் - பரிபூரணனாகிய ஈசன், (7) ஆங்கு - அப்போது, இன்பு ஆம் - ஆனந்தம் விளங்கும், என்பதாம், (1) மனம் போலும், மங்கல நாண் - மாங்கல்யம் எனல், (மன், அசை).

மனம் போலும் மாங்கல்யம் எனல் ஒருவனுடைய மனோ நிச்சயம் எவ்விதம் இருக்குமோ தளர்வற்ற அவ்விதமே பரிபூரணனாகிய ஈசன் குரு வடிவம் பூண்டு உபதேசம் செய்தருளுவன் அப்போது ஆனந்தம் விளங்கும் என்பதாம்.

## விளக்கிருக்கத் தீத்தேடல்.

விளக்கிருக்கத் தீத்தேடன் மெய்ஞ்ஞா னியைக்கண்
டுளத்துணர்ந்துஞ் சத்துவமா யொன்றித்—துளக்கில்
விருத்தியைக்கொண் டெய்தாது வேறு வகையா
லருத்தியொடு தெய்வந்தே டல் (80)

விளக்கிருக்கத் தீத்தேடல் எனல், மெய்ஞ்ஞானியைக் கண்டு, உளத்து - மனதில், உணர்ந்தும், சத்துவமாய் - சாந்தமாய், ஒன்றி - ஏகாக்கிரமாகி, துளக்கு இல் - சலனமற்ற, விருத்தியைக்கொண்டு, எய்தாது - அடையாமல், வேறு வகையால், அருத்தியொடு - பிரியத்துடன், தெய்வந்தேடல் - தெய்வத்தைத்தேடுதலாம். (சலனம் - அசைவு). (விருத்தி - நினைவு).

விளக்கிருக்கத் தீத்தேடல் எனல் மெய்ஞ்ஞானியைக் கண்டு மனதில் உணர்ந்தும் சாந்தமாய் ஏகாக்கிரமாகிச் சலன மற்ற விருத்தியைக்கொண்டு அடையாமல் வேறு வகையால் பிரியத்துடன் தெய்வத்தைத் தேடுதலாம்.

## புலியடியா விடினும் கிலியடிக்கும்.

### கலி விருத்தம்.

திலக வாரியன் சீடனுண் மையலை
நலிவு செய்கில னாகினு நம்பினேன்
மலமொ ழிந்திடு மற்றவ னன்பினாற்
புலிகொ லாவிடி னுங்கிலி கொல்லுமே (81)

(2) திலக ஆரியன் - சிரேஷ்டமான குரு, சீடன் - மாணாக்கனது, உள்மையலை - மனோ மயக்கத்தை, நலிவு செய்கிலனாகினும் - கெடுக்காவிடினும், (4) நம்பினேன் - விசுவாசித்த மாணாக்கனது, மலம் ஒழிந்திடும் - அஞ்ஞானம் நீங்கும் என்பதாம், (3) மற்று, அவன் அன்பினால் - அவனுடைய பக்தியினால், (1) புலி, கொலாவிடினும் - கொல்லாவிட்டாலும், கிலி - பயமே, கொல்லும், எனல். (ஏ, அசை). (மற்று, அசை).

புலி கொல்லாவிடினும் பயமே கொல்லும் எனல் சிரேஷ்டமான குரு, மாணாக்கனது மனோ மயக்கத்தைக் கெடுக்காவிடினும் அவனுடைய பக்தியினால் விசுவாசித்த மாணாக்கனது அஞ்ஞானம் நீங்கும் என்பதாம்.

## வயித்தியனுக்குக் கொடுப்பதை வாணியனுக்குக்கெ

### வெண்பா.

*அதிட்ட பலதாதா வாமீசன் றொண்டின்*
*மதிக்கிற் றிருட்டபல வள்ளற்—பதிக்குச்செய்*
*யேவலுயர் வன்னோன்மெய் யின்னோன் மருத்துவனுக்*
*கீவதனை வாணியனுக் கீ*

(3) அதிட்ட - பிரத்தியட்சமாகாத கர்மங்களின், தாதா - பிரயோசனத்தைக் கொடுப்பவன், ஆம் ஈச ஆகிய ஈஸ்வரனுடைய, தொண்டின் - திருப்பணியை (2) மதிக்கின் - ஆராயுமிடத்து, (4) திருட்ட - பிரத்தி மாகிய, பல வள்ளல் - பிரயோசனத்தைத் தாராளமாய்க்கொ ப்பவனை, பதிக்கு - குருவுக்கு, செய் - செய்கிற, ஏ பணிவிடையே, உயர்வு - சிறந்ததாகும், அன்னோன் - வீஸ்வரனது, மெய் - அருள் மூர்த்தமே, இன்னோன் குருவாதலால் என்பதாம், (1) மருத்துவனுக்கு - வயித்தி க்கு, ஈவதனை - கொடுப்பதை, வாணியனுக்கு, ஈ - கெ எனல்.

வயித்தியனுக்குக் கொடுப்பதை வாணியனுக்குக்கெ எனல் ஆராயுமிடத்துப் பிரத்தியட்சமாகாத கர்மங்களின் யோசனத்தைக் கொடுப்பவனாகிய ஈஸ்வரனுடைய திரு ணியைவிடப் பிரத்தியட்சமாகிய பிரயோசனத்தைத் தா மாய்க் கொடுப்பவனை குருவுக்குச் செய்கிற பணிவிடை சிறந்ததாகும் அவ்வீஸ்வரனது அருள் மூர்த்தமே இவ வாதலால் என்பதாம்.

## அளவுக்கு மீறினல் அமிர்தமும் நஞ்சாம்.

அளவின் மிகுந்தா லமுதமுநஞ் சாதல்
தெளிக குளிர்காய்வார் தீயி—னுளியுறல்போ
லெண்குருவை யன்பச்சத் தெய்தல் சரணச்சப்
பண்பிலதே னண்பரிது பார் (83)

(1) அளவில் மிகுந்தால் அமுதமும் நஞ்சு, ஆதல் - ஆகுமென்பது, (6) தெளிக - தேர்ந்துகொள்ளக் கடவர் எனலாம், (2) குளிர் காய்வார், தீயின் உளி - அக்கினியிடத்து, உறல் போல் - நெருங்காமலும் நீங்காமலும் இருத்தல்போல, எண் - தியானிக்கத்தக்க, குருவை, அன்பு - பிரீதியோடும், அச்சத்து - பயத்தோடும், (4) எய்தல் - அடையவேண்டும், (3) சரண் - அடைக்கலமாக, (5) அச்சப் பண்பு இலதேல் - அஞ்சுகிற குணமில்லாவிடில், நண்பு - அக்குருவின் நட்பு, அரிது - கிடையாது என்று, பார் - இவ்வுலகினர். (பார் - ஆகுபெயர்).

அளவில் மிகுந்தால் அமுதமும் நஞ்சு ஆகுமென்பது குளிர் காய்வார் அக்கினியினிடத்து நெருங்காமலும் நீங்காமலும் இருத்தல் போலத் தியானிக்கத்தக்க குருவைப்பிரீதியோடும் பயத்தோடும் அடைக்கலமாக அடையவேண்டும். அஞ்சுகிற குணமில்லாவிடில் அக்குருவின் நட்புக்கிடையாது என்று இவ்வுலகினர் தேர்ந்துகொள்ளக்கடவர் எனலாம்.

## கோவில் விளங்கக் குடி விளங்கும்.

கோவில் விளங்கக் குடிவிளங்கு மென்றிடலோ
பூவிற் பரஞானி பூசனையோ—டேவல்
புரிவார் கரணமெலாம் பொங்குபுனி தத்தாற்
பிரியாநல் லின்பம் பெறல் (84)

கோவில் விளங்கக் குடிவிளங்கும், என்றிடலோ - என்பதோ, பூவில் - பூமியில், பரஞானி - அனுபவ ஞானியினுடைய திருமேனியின், பூசனையோடு, ஏவல், புரிவார் - செய்பவர், கரணமெலாம் - அந்தக் கரணமெல்லாம், பொங்கு - மிகுந்த, புனிதத்தால் - பரிசுத்தத்தால், பிரியா - நீங்காத, நல் இன்பம் பெறல் - மேலான ஆனந்தம் அடைதல்எனலாம்.

கோவில் விளங்கக் குடிவிளங்கும் என்பதோ பூமியில் அனுபவ ஞானியினுடைய திருமேனியின் பூசனையோடு ஏவல் செய்பவர் அந்தக்கரணமெல்லாம் மிகுந்த பரிசுத்தத்தால் நீங்காத மேலான ஆனந்தமடைதல் எனலாம்.

## பழம் புண்ணுளி முழு வைத்தியன்.

பகர்பழம்புண் ணுளிமுழுப் பண்டிதனே மாயைச்
சகமொருங்கு மென்றுமிடர் தானென்—றகமுணர்ந்து
முன்னர்விசா ரம்பின் முதிர்ந்துதனைக் கண்டோனே
மன்னிறையாய்த் தேற்றுமதன் மாய்வு (85)

(1) பகர் - சொல்லப்படுகிற, பழம் புண்ணுளி, முழுப் பண்டிதன் - முழுவைத்தியன் எனல், (ஏ), மாயைச்சகம் ஒருங்கும் - மாயை மயமாகிய உலகமெல்லாம், என்றும் - எப்போதும், இடர்தானென்று - துன்பமேயென, (3) அகம் - உள்ளத்தில், உணர்ந்து, (2) முன்னர் - முன்னே, (5) விசாரம் - ஆராய்ச்சி, (4) பின் - பின்னே, (6) முதிர்ந்து - திடப்பட்டு, தனைக்கண்டோனே - தன்னையுணர்ந்தவனே, மன் - மேலான, இறையாய் - குருவாகி, (8) தேற்றும் - தெரிவிப்பான் என்பதாம், (7) அதன் - அம்மாயாமயமாகிய உலகத்துன்பத்தின், மாய்வு - ஒழிவு. (ஏ, அசை).

சொல்லப்படுகிற பழம்புண்ணுளி முழுவைத்தியன் எனல் மாயை மயமாகிய உலகமெல்லாம் எப்போதும் துன்பமேயென முன்னே உள்ளத்தில் உணர்ந்து பின்னே ஆராய்ச்சி திடப் படுத் தன்னையுணர்ந்தவனே மேலான குருவாகி அம்மாயா மயமாகிய உலகத்துன்பத்தின் ஒழிவு தெரிவிப்பான் என்ப தாம்.

## சுண்ணும்பிலிருக்கிறது சூக்ஷமம்.

### கட்டளைக்கலித்துறை.

சுண்ணத்தின் மேயது சூக்கங் குருவின் சொலான்மவுன
மெண்ணத் துகிற்குநெய்ச் சிக்குத் தமமா சிராசதம்போய்
வண்ணத் தவளநற் சாந்த மிகநூல் வழிவெற்றிலை
திண்ணத்தன் றுட்பாகு சேர்ந்தனு பூதிச் சிவப்புறவே (86)

(2) சுண்ணத்தின் - சுண்ணும்பில், மேயது - இருக்கி றது, சூக்கம் - சூக்ஷமம் எனல், குருவின், சொலால் - வாக்கி னுல், மவுனம் - மௌனநிலை என்பதாம், (1) எண்ணத்துகி ற்கு - மனமென்னும் வஸ்திரத்திற்கு, நெய்ச்சிக்குத் தமம் - தமோ குணமாகிய நெய்ச்சிக்கும், மாசு இராசதம் - இராசத குணமான அழுக்கும், போய் - நீங்கி, வண்ணத்தவள நற்சாந் தம் - நல்ல சாத்துவீக குணமாகிய வெண்மை நிறம், மிக - அதிகமாகவும், நூல்வழி - சாஸ்திர மார்க்கமான, வெற்றிலை - வெற்றிலையும், திண்ண - திடமாகிய, தன்தாள் - தனது முய ற்சியான, பாகு - பாக்கும், சேர்ந்து, அனுபூதி - அனுபவ மென்னும், சிவப்பு உற - சிவப்பு நிறமுண்டாகவும் எதுவாத லால். (ஏ, அசை).

மனமென்னும் வஸ்திரத்திற்குத் தமோ குணமாகிய
ப்பிச்சிக்கும் இராசத குணமாகிய அழுக்கும் நீங்கி நல்ல
சாத்துவிக குணமாகிய வெண்மை நிறமதிகமாகவும் சாஸ்திர
மார்க்கமான வெற்றிலையும் திடமாகிய தனது முயற்சியாணை
பாக்கும் சேர்த்து அநுபவமென்னும் சிவப்பு நிறமுண்டாக
அவதாரத்தால் சுண்ணாம்பில் இருக்கிறது சூக்ஷமம் எனல்
குருவின் வாக்கினால் மௌனநிலை என்பதாம்.

## உப்பிட்டவரை யுள்ளமட்டும் நினைக்கவேண்டும்.

### கலிவிருத்தம்.

செப்பக் கேயுப தேசத் துனையளித்
தொப்பத் தன்னை யுணர்த்தும் பரன்கணே
துப்புற் றேவுந் துணையும் விருத்திசே
ருப்பிட் டாரை யுளவரை யுள்கவே (87)

(2) செப்பத்து - நடு நிலையின் (ஏ), உபதேசத்து - உபதேசத்தால், உனை - உன்னை, அளித்து - அநுபவமாகத்தெரிவித்து, ஒப்ப - உன்னைத்தவிர அன்னியமன்றென ஒப்பும்படி, தன்னை - பிரமமாகிய தன்னை, உணர்த்தும் - அறிவிக்கும், பரன்கண் (ஏ) - குருவினிடத்து, துப்பு உற்று - திடமாய், ஏவும் - அடைந்தும், துணையும் - அளவும், விருத்திசேர் - விருத்தியடையச் சேர்ப்பாய் என்பதாம், (1) உப்பு இட்டாரை - உப்பிட்டவரை, உளவரை - உள்ளமட்டும், உள்க - நினைக்கவேண்டும் எனல். (ஏ, அசை). (ஏ, அசை). (ஏ, அசை).

உப்பிட்டவரை யுள்ளமட்டும் நினைக்கவேண்டும் எனல் நடு நிலையின் உபதேசத்தால் உன்னை அநுபவமாகத் தெரிவி

த்து உன்னைத்தவிர அன்னியமன்றென ஒப்பும்படி பிரமமாகிய தன்னை அறிவிக்கும் குருவினிடத்துத் திடமாய் அடங்குமள வும் விருத்தியைச்சேர்ப்பாய் என்பதாம். (விருத்தி-நினைவு).

## குட்டிச்சுவரில் முட்ட வெள்ளெழுத்தா.

### வெண்பா.

இடிசுவரின் முட்டச்சா ளேசுரமோ பல்காற்
படியின்மிசை மாய்வுற்றுப் பாழாங்—தடியுடலைத்
தானென்று நம்பத் தகுமூ டமுமுளதோ
வேனிந்த மோகமனத் தே (88)

(1) இடிசுவரில் - குட்டிச்சுவரில், முட்ட, சாளேசு ரமோ - வெள்ளெழுத்தா எனல், பல்கால் - பிறந்த பல கால மும், படியின்மிசை - பூமியின்மேல், மாய்வுற்று - மரணமடை ந்து, பாழ் ஆம் - கெட்டு மண்ணாகிற, தடியுடலை - கட்டை போன்று மாமிச மயமாகிய தேகத்தை, தானென்று, நம்பத் தகும் - நம்பத்தகுந்த, மூடமும் - அறியாமையும், உளதோ - இருக்கிறதா, (4) ஏன் - எதற்கு என்பதாம், (3) இந்த மோகம் - இம்மயக்கம், (2) மனத்து - மனதில். (ஏ, அசை).

குட்டிச்சுவரில் முட்ட வெள்ளெழுத்தா எனல் பிறந்த பல காலமும் பூமியின்மேல் மரணமடைந்து கெட்டு மண்ணா கிற கட்டைபோன்று மாமிச மயமாகிய தேகத்தைத் தானெ ன்று நம்பத்தகுந்த அறியாமையு மிருக்கிறதா மனதில் இம் மயக்கம் எதற்கு என்பதாம்.

## அண்டத்திலுள்ளது பிண்டத்திலும்.

### கலித்துறை.

பண்டைத் தற்பிர மத்திய னித்திய பரிசுத்தா
கண்டச் சத்திய சிற்சுக பூரண கனமேதான்
றெண்டற் றுத்திக ழுந்தனி யான்மசொ ரூபங்கா
ணண்டத் துற்றது பிண்டத் தும்மென லறிவீரே (89)

(2) பண்டை - அநாதியான, தற்பிரமத்து - தற்பத இலட்சியார்த்தமாகிய பிரமத்தின், இயல் - இலட்சணமான, நித்திய பரிசுத்த, அகண்ட - பின்னமற்ற, சத்திய, சிற்சுக - ஞானானந்த, பூரண கனமே - பரிபூரணப் பிழம்பே, (தான்) தொண்டு அற்று - ஏவப்படுதலின்றி, திகழும் - விளங்கும், தனி - ஒப்பற்ற, ஆன்ம சொரூபம், எனலாம், (காண்) (1) அண்டத்து உற்றது - அண்டத்திலுள்ளது, பிண்டத்தும் - பிண்டத்திலும், எனல் - என்பது, (3) அறிவீர் - இதையுணருங்கள், (ஏ, அசை). (தான், சாரியை). (பிண்டம் - சரீரம்). (பிழம்பு - தனிக்கட்டி). (காண், முன்னிலையசை)

அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் என்பது அநாதியான தற்பத இலட்சியார்த்தமாகிய பிரமத்தின் இலட்சணமான நித்திய பரிசுத்த பின்னமற்ற சத்திய ஞானானந்த பரிபூரணப் பிழம்பே ஏவப்படுதலின்றி விளங்கும் ஒப்பற்ற ஆன்ம சொரூபம் எனலாம் இதை யுணருங்கள்.

## தேரை கடிக்குமா செட்டி படை வெட்டுமா.

### வெண்பா.

தேரை கறிப்பதுவோ செட்டிபடை வெட்டுங்கொ
லோருமிடத் தின்றி யொழியவித்தை—யீருவதோ
தோற்றமா மாயைத் தொகுகா ரியங்களிட
ராற்றிடுமோ சான்ற யதை (90)

(1) தேரை - தவளை, கறிப்பதுவோ - கடிக்குமோ, செட்டி படை - செட்டிகள் கூட்டமாகிய சேனை, வெட்டுங்கொல் - வெட்டுமா எனல், ஓரும் இடத்து - விசாரிக்கும்போது, இன்றி ஒழி - இல்லாமற் கெடுகின்ற, அவித்தை - அஞ்ஞானமானது, ஈருவதோ - ஆன்மாவையழிக்குமா, தோற்றமாம் மாயை - கண்ணுடிப்பிரதி பிம்பம் போலத் தோற்ற மாத்திரமான மாயையின், தொகு - கூட்டமாகிய, காரியங்கள், (3) இடர் ஆற்றிடுமோ - துன்பஞ்செய்யுமா என்பதாம், (2) சான்று - சாட்சி, ஆபதை - ஆன கூடஸ்த ஆத்மாவை.

தவளை கடிக்குமோ செட்டிகள் கூட்டமாகிய சேனை வெட்டுமா எனல் விசாரிக்கும்போது இல்லாமற் கெடுகின்ற அஞ்ஞானமானது ஆன்மாவை யழிக்குமா கண்ணுடிப்பிரதி பிம்பம்போலத் தோற்றமாத்திரமான மாயையின் கூட்டமாகிய காரியங்கள் சாட்சியான கூடஸ்த ஆத்மாவைத் துன்பஞ் செய்யுமா என்பதாம்.

## தாயைப்போலப்பிள்ளை நூலைப்போலச்சேலை.

தாயைப்போ லும்பிள்ளை தந்துவைப்போ லுஞ்சேலை
மாயைச்சான் றாமீசன் வாய்மையெனக்—காயத்திற்
சான்றே யுயிருண்மை சார்மாயை போற்சகமுந்
தான்றோரி னில்லாத தாம் (91)

(2) தாயை, போலும் - ஒத்திருக்கும், (1) பிள்ளை, (4) தந்துவை - நூலை, போலும் - ஒத்திருக்கும் எனல், (3) சேலை, (6) மாயைச்சான்று ஆம் - மாயையின் சாட்சியாகும், (5) ஈசன் வாய்மை - ஈஸ்வரனது உண்மை வடிவம், (7) என -

அதுபோல, (9) காயத்தில் - சரீரத்தில், சான்றே - அஞ்ஞானத்தின் சாட்சியே, (8) உயிருண்மை - சீவனுடைய யதார்த்த சொரூபம், (11) சார் - காரணமாகப் பொருந்திய, மாயைபோல் - மாயை போல, சகமும் - பிரபஞ்சமும், (தான்) (10) தேரின் - ஆராயுமிடத்து, (12) இல்லாததாம் என்பதாம் - (தான், சாரியை)

பிள்ளை தாயை ஒத்திருக்கும் சேலை நூலை ஒத்திருக்கும் எனல் ஈஸ்வரனது உண்மை வடிவம் மாயையின் சாட்சியாகும் அதுபோலச் சீவனுடைய யதார்த்த சொரூபம் சரீரத்தில் அஞ்ஞானத்தின் சாட்சியே, ஆராயுமிடத்துக் காரணமாகப் பொருந்திய மாயைபோலப் பிரபஞ்சமும் இல்லாததாம், என்பதாம்.

## மன்னவனெப்படி, மன்னுயிரப்படி.

### கலிவிருத்தம்.

அரச னெவ்வகை பிரசைக ளவ்வா
றிரவி லேகனு மீசுர னுயர்சித்
துருவ மாதல்போ லுயிர்வகை சித்தே
கருது சிந்தொடு கால்பல வும்போல் (92)

அரசன், எவ்வகை - எப்படியோ, பிரசைகள் - குடிகள், அவ்வாறு - அப்படியே எனல், இரவு இல் - வேண்டுவதும் அஞ்ஞான இருளும் இல்லாத, ஏகனும் ஈசுரன், உயர் சித்து உருவம் - மேலான ஞான சொரூபம், ஆதல் போல் - ஆவது போல, உயிர் வகை - எல்லாச் சீவர்களும், சித்தே - ஞான சொரூபமே, இது, கருது - நினைக்கின்ற, சிந்து ஒடு - நதியும், கால் பலவும் - அதிற் பிரிந்தோடும் பல வாய்க் கால்களும், போல் - போலும் என்பதாம்.

அரசன் எப்படியோ குடிகள் அப்படியே எனல் வேண்டுவதும் அஞ்ஞான இருளுமில்லாத ஏகனுமீசுரன் மேலான ஞான சொரூபமாவதுபோல எல்லாச் சீவர்களும் ஞான சொரூபமே, இது நினைக்கின்ற நதியும் அதிற்பிரிந்தோடும் பல வாய்க்கால்களும் போலும் என்பதாம்.

## திண்ணையைத் தேள்கோட்ட, மிடாவில் நெறிகட்ட.

### வெண்பா.

வேதிகையைத்தேள் கொட்ட மிடாவினெறி கட்டவென
லோதிடன்மட் டேதேகத் தோடுபொறி—யாதிசட
மான்மா விலட்சணஞா னனந்த மெய்மாயை
பான்மாழ்க லுட்பிரமை பாழ் (93)

வேதிகை-திண்ணையை, தேள்கொட்ட, மிடாவில் நெறிகட்ட (எனல்), ஓதிடல் மட்டே - சொல்மாத்திரமே, தேகத்தோடு, பொறியாதி - இந்திரியமுதலாகப் பிராணன் அந்தக்கரணம் அவித்தை யனைத்தும், சடம் - அறிவில்லாதன, ஆன்மா - சாட்சியாகிய கூடஸ்தர், விலட்சண - சுட்டுதலற்ற விசேஷ, ஞான ஆனந்த, மெய்-சத்திய சொரூபமாம், மாயைபால் - மாயையினிடத்து, மாழ்கல் - மயங்கிவருந்தல், உள்பிரமை - மனப்பிராந்தியாகிய, பாழ் - பொய்யே, என்பதாம்.

திண்ணையைத் தேள்கொட்ட மிடாவில் நெறிகட்டவெனல் சொல்மாத்திரமே, தேகத்தோடு இந்திரிய முதலாகப்பிராணன் அந்தக்கரணம் அவித்தையனைத்தும் அறிவில்லாதன, சாட்சியாகிய கூடஸ்தர் சுட்டுதலற்ற விசேஷ ஞான ஆனந்த சத்திய சொரூபமாம், மாயையினிடத்து மயங்கி வருந்தல் மனப்பிராந்தியாகிய பொய்யே என்பதாம்.

## உள்ளக் கருத்து வள்ளலுக்குத் தெரியும்.

### வஞ்சித்துறை.

விள்ளிற் பசுக்கண்மெய்
நள்ளுற்ற தச்சிவத்
துள்ளக்க ருத்தது
வள்ளற்கு ணர்ச்சியே (94)

(2) விள்ளில் - சொல்லுமிடத்து, பசுக்கள் - சீவர்களின், மெய் - உண்மை வடிவம், (4) நள் உற்றது - ஏகத்தன்மையைப் பொருந்தியது, என்பதாம் (3) அச்சிவத்து - அந்த மங்கள சொரூபமாகிய பிரமத்தில், (1) உள்ளக்கருத்து (அது), வள்ளற்கு உணர்ச்சி - வள்ளலுக்குத்தெரியும் (எனல்) (ஏ, அசை) (அது, சொல்லுருபு).

உள்ளக்கருத்து வள்ளலுக்குத் தெரியும் எனல் சொல்லுமிடத்துச் சீவர்களின் உண்மை வடிவம் அந்த மங்கள சொரூபமாகிய பிரமத்தில் ஏகத்தன்மையைப் பொருந்தியது என்பதாம்.

## சத்திரத்துச் சாப்பாட்டுக்கு ஒருவன் உத்தரவென்ன.

### வெண்பா.

சத்திரத்தா னுக்கொருவன் றன்னுத் தரமென்றே
வத்துவதாஞ் சர்வான் மசொருப—சுத்தப்
பிரமானு பூதி பெறக்கடையென் றன்னுட்
டிரமா விசாரஞ் செயின் (95)

(1) சத்திரத்து, ஊணுக்கு - சாப்பாட்டுக்கு, ஒருவன் (தன்) - ஒருவனுடைய, உத்தரம் - உத்தரவு, என் (ஒ) - என்ன என்பது, (3) வத்து அது ஆம் - அத்தற்பதார்த்தமாகிய, சர்வ ஆன்மக - சகலமூர்த்தானை, சொருப - சொரூபமாம், சுத்தப்பிரமானுபூதி பெறத்தடை, என் - என்ன எனலாம், (2) தன்றுள் - தனக்குள்ளாக, திரமா - திடமாக, விசாரஞ் செயின் - ஆராய்ச்சி செய்தால், (தன், சாரியை) (ஒ, இடைச்சொல்).

சத்திரத்துச் சாப்பாட்டுக்கு ஒருவனுடைய உத்தரவு என்ன என்பது தனக்குள்ளாகத் திடமாக ஆராய்ச்சி செய்தால் அத்தற்பதார்த்தமாகிய சகலமூர்த்தானை சொரூபமாம் சுத்தப்பிரமானுபூதி பெறத் தடை என்ன எனலாம்.

## சூட்சத்திலிருக்கிறது மோட்சம்.

## வஞ்சி விருத்தம்.

சூக்க மென்றது மோக்கமே
போக்கு சிந்தனை நீக்கிவா
ளாக்கி டந்திடின் வீக்கமில்
பாக்கி யம்பர நோக்கமே (96)

(2) சூக்கம் என்றது - சூட்சமத்திலிருக்கிறது என்பது, (1) மோக்கம் - மோட்சம், (ஏ), (3) போக்கு - ஒழிக்கத்தக்க, சிந்தனை நீக்கி - சங்கற்பத்தை யொழித்து, வாளா - சும்மா, கிடந்திடின் - இருந்தால், வீக்கம் இல் - கட்டில்லாத, பாக்கியம் - பாக்கியமான, பரநோக்கம் - பிரமானுபவ விளக்கமுண்டாம் எனலாம். (ஏ, அசை). (ஏ, அசை).

மோட்சம் சூட்சுமத்திலிருக்கிறது என்பது ஒழிக்கத் தக்க சங்கற்பத்தை யொழித்துச் சும்மா இருந்தால் கட்டில்லாத பாக்கியமான பிரமானுபவ விளக்கமுண்டாம் எனலாம்.

## காக்கையேறப் பனம்பழம் விழுந்தது.

### கலிவிருத்தம்.

மோக்கமே விரும்பினோன் முகங்கண் டாரியன்
சாக்கிநீ யுடன்முதற் சகத்து வேறெனும்
வாக்கினா லசங்கசின் மாத்தி ரன்னவன்
காக்கையே றப்பனங் கனிவி ழுந்ததே (97)

(3) மோக்கமே - முத்தியையே, விரும்பினோன் - இச்சித்தவனுடைய, முகம் கண்டு - முகத்தைப்பார்த்து, (2) ஆரியன் - குருவானவர், (4) சாக்கி நீ - நீ சாட்சியான கூடஸ்தன், உடல் முதல் - சரீரம் முதலாகிய, சகத்து - பிரபஞ்சமெல்லாம், வேறு எனும், வாக்கினால் - உபதேசத்தால், (6) அசங்கசின் மாத்திரன் - எதனுடனும் சம்பந்தமில்லாத ஞான சொரூபமாய் விளங்குவன் எனலாம், (5) அவன் - அப்பக்குவி, (1) காக்கையேற, பனங்கனி - பனம்பழம், விழுந்தது, என்பது (ஏ, அசை).

காக்கையேறப் பனம்பழம் விழுந்தது என்பது குருவானவர் முத்தியையே இச்சித்தவனுடைய முகத்தைப்பார்த்து நீ சாட்சியான கூடஸ்தன் சரீரம் முதலாகிய பிரபஞ்சமெல்லாம் வேறு எனும் உபதேசத்தால் அப்பக்குவி எதனுடனும் சம்பந்தமில்லாத ஞான சொரூபமாய் விளங்குவன் எனலாம்.

## சட்டி சுட்டது கை விட்டது.

### வஞ்சி விருத்தம்.

உடம்பைத் துயருரு வென்றுண
ரிடம்பெற் றதையக மென்றிட
லொடும்பற் றினையுள மற்றது
கடஞ்சுட் டதுகரம் விட்டதே (98)

(3) உடம்பை, துயர் உரு - துக்க சொரூபம், என்று, உணர் இடம் பெற்று - அறிகின்ற பக்குவத்தை யடைந்து, அதை - அவ்வுடலை, அகம் என்றிடலொடும் - நானென்னும் அகங்காரத்தோடும், பற்றினை - எனதென்னும் மமதையை யும். (2) உளம் - மனதானது, (4) அற்றது - விட்டது என லாம், (1) கடம் - சட்டி, சுட்டது, கை விட்டது என்பது. (ஏ, அசை).

சட்டி சுட்டது கைவிட்டது என்பது மனதானது உடம்பைத் துக்க சொரூபமென்று அறிகின்ற பக்குவத்தை யடைந்து அவ்வுடலை நானென்னும் அகங்காரத்தோடும் எனதென்னும் மமதையையும் விட்டது எனலாம்.

## அப்பம் எப்படிச் செய்ததோ அதற்குள் தித்திப்பை எப்படி நுழைத்ததோ.

### அறுசீர் விருத்தம்.

அப்ப மெப்படி செய்தா ரங்கெ வண்சுவை பெய்தா
ரிப்ப தத்துரை போதத் தேது வாமுயர் வேதஞ்
செப்பு மாறெவன் முன்னே சிற்ப ரன்பொரு ளொன்னே
வைப்பி னுற்றதெ னுந்தேர் வான்மு மூட்சுவி யந்தே (99)

(1) அப்பம் எப்படி செய்தார், அங்கு - அதற்குள், (3) எவண் - எப்படி, (2) சுவை - தித்திப்பை, (4) பெய்தார் - நுழைத்தார், இப்பதத்து உரை - என்னும் இவ்வாக்கியத்தின் பொருள், (10) போதத்து ஏது ஆம் - ஞானத்தின் காரணமாகிய, உயர் - மேலான, வேதம் - வேதத்தை, செப்பும் ஆறு - சொல்லிய விதம், எவன் - எப்படியோ, (9) முன் - முன்பு, (ஏ), (8) சிற்பரன் - ஞான சிரேஷ்டனாகிய ஈசன், (11) பொருள் - அதில் அர்த்தமானது, (13) என்னே - எப்படியோ, (12) வைப்பின் - பொக்கிஷத்தைப்போல, உற்றது - பொருந்தியது, (14) எனும் - என்று நினைவான், என்பதாம் (6) தேர்வால் - தேர்ச்சியால், (5) முமுட்சு - முமுட்சு வானவன், (7) வியந்து - ஆச்சரியப்பட்டு. (ஏ, அசை). (ஏ, அசை).

அப்பம் எப்படிச் செய்தார் அதற்குள் தித்திப்பை எப்படி நுழைத்தார் என்னும் இவ்வாக்கியத்தின் பொருள் முமுட்சு வானவன் தேர்ச்சியால் ஆச்சரியப்பட்டு ஞான சிரேஷ்டனாகிய ஈசன் முன்பு ஞானத்தின் காரணமாகிய மேலான வேதத்தைச் சொல்லிய விதம் எப்படியோ அதில் அர்த்தமானது பொக்கிஷத்தைப்போலப் பொருந்தியது எப்படியோ என்று நினைவான் என்பதாம்.

## துள்ளுகிற மாடு பொதி சுமக்கும்.

### கலிவிருத்தம்.

விள்ளு மிச்சகத் துன்பென விட்டணித்
தள்ளு மாறு தயங்கும் விவேகிதன்
னுள்ள மேயுல கென்றறிந் தோய்ந்துயுந்
துள்ளு மேறு பொதியைச் சுமக்குமால் (100)

(3) வின்னும் - பிரிவு படும், இச்சகம் - இவ்வுலகம், துன்பு என - துக்கத்திற்கு ஏதுவென்று, (2) வீடு எணி - மோட்சத்தைக்கருதி, (4) தள்ளும் ஆறு - அதை நீக்கும்படி, தயங்கும் - வருந்துகிற, விவேகி, . தன் உள்ளமே - தனது நினைவே, உலகு - உலகம், என்றறிந்து, ஒய்ந்து - அடங்கி, உய்யும் - உய்வான் எனலாம், (1) துன்னும், ஏறு - மாடு, பொதியைச் சுமக்கும் என்பது. (ஆல், அசை).

துன்னும் மாடு பொதியைச் சுமக்கும் என்பது மோட்சத்தைக்கருதிப் பிரிவுபடுமிவ்வுலகந் துக்கத்திற்கு ஏதுவென்று அதை நீக்கும்படி வருந்துகிற விவேகி தனது நினைவே உலகம் என்றறிந்து அடங்கி உய்வான் எனலாம்.

## அழுத பிள்ளை சிரிக்கும் வளர்த்த கடாக் கையிற் பாய்தல்.

### வெண்பா.

விழுமுமுட் சுத்தானே வீட்டின்ப மெய்த
லழுதசே யேமகிழ்வ தாங்குப்—பழகி
வளர்த்தகடாக் கைபாய்தன் மன்னுமனு பூதி
கிளத்தெனக்கா ணூர்குருவின் கேள் (101)

(2) விழுமுமுட்சுத்தானே - மிகவுந்துன்பம் அடைந்த முமுட்சுவே, வீட்டின்பம் எய்தல் - மோட்ச சுகத்தைப்பெறுதல் என்பதாம், (1) அழுத, சேயே - பிள்ளையே, மகிழ்வது - சிரிப்பது எனல், (ஆங்கு), (3) பழகி வளர்த்த கடா, கைபாய்தல் - கையிற் பாய்தல் என்பது, மன்னும் - நிலைத்த, அனுபூதி - அனுபவத்தை, கிளத்து என - சொல்வாயென, (5)

காணார் - தனைத்தவிர அறியமாட்டார் எனலாம். (4) குரு வின் கேள் - குருவின் பக்தியையும். (ஆங்கு, அசை).

அழுத பிள்ளையே சிரிப்பது எனல் மிகவுந் துன்பம் அடைந்த முமூட்சுவே மோட்ச சுகத்தைப்பெறுதல் என்ப தாம். பழகி வளர்த்த கடாக் கையிற் பாய்தல் என்பது நிலை த்த அனுபவத்தைச் சொல்வாயெனக் குருவின் பக்தியையுந் தனைத்தவிர அறியமாட்டார் எனலாம்.

## யதார்த்தவாதி பலர்க்கும் விரோதி.

### கலிவிருத்தம்.

பதார்த்த சோதனை பண்ணிய ஞானிதான்
சதாத்தெ ளிந்து சருவமு மின்றெனு
மதாற்ச கத்தி னனேகர் முரண்கொள
லெதார்த்த வாதி பலர்க்கும் விரோதியே (102)

(2) பதார்த்த சோதனை - தத்துவ ஆராய்ச்சி, பண்ணிய ஞானி, (தான்), சதாத்தெளிந்து - எப்போதும் சிரவண மன னத்தால் தெளிவு பெற்று, சருவமும் இன்று - சகம் எல்லா மில்லை, எனும் அதால் - என்னும் அங்கிச்சயத்தைச் சொல்ல நேரில், சகத்தின் அநேகர், முரண் கொளல் - சம்மதியாது மாறுபடுவர் என்பதாம், (1) எதார்த்தவாதி பலர்க்கும் விரோதி (ஏ) எனல். (தான். ஏ. அசைகள்).

எதார்த்தவாதி பலர்க்கும் விரோதி எனல் தத்துவ ஆரா ய்ச்சி பண்ணிய ஞானி எப்போதும் சிரவண மனனத்தால் தெளிவு பெற்று சகம் எல்லாமில்லை என்னும் அங்கிச்சயத்

தைச் சொல்ல நேரில் சகத்தின் அநேகர் சம்மதியாது மாறு படுவர் என்பதாம்.

## பாத்திரமறிந்து பிச்சையிடு கோத்திரமறிந்து பெண்ணைக்கொடு.

### அறுசீர் விருத்தம்.

பாத்திரமோர்ந் தையமிடல் கோத்திரமோர்ந் தேபெண்ணைப்
பரிந்து நல்கல்
தீத்தொழில்கட் கஞ்சியடைந் தோர்க்கினிய நன்னெறியைத்
தெருட்டல் செய்வார்
மீத்திகழ்புண் ணியபாவஞ் சமமாக்கண் டுயர்வீடே
விழைமு முட்சுக்
கேத்தரிய பரப்ரன்ம ஞானநிலை தனைத்தெளிவித்
திடுவர் மேலோர் (103)

(1) பாத்திரம், ஓர்ந்து ஐயம் இடல் - அறிந்து பிச்சை யிடுதல், கோத்திரம், ஓர்ந்து - அறிந்து, (ஏ), பெண்ணை, பரி ந்து - அன்புடன், நல்கல் - கொடுத்தல், என்பது, (3) தீத் தொழில்கட்கு அஞ்சி - பாபஞ் செய்தற்குப் பயந்து, அடைந் தோர்க்கு - தன்னை யடைந்தவர்க்கு, இனிய நல் நெறியை - சுகமாகிய நல்ல புண்ணியச் செயல்களை, தெருட்டல் செய் வார் - தெளியும்படி சொல்வார், மீ - மேலாக, திகழ் - விளங் குகிற, புண்ணிய பாவம் - புண்ணிய கர்மத்தையும் பாபகர்மத் தையும், சமமாக்கண்டு - சமமாகப்பார்த்து, உயர் வீடே - சிறந்த மோட்சத்தையே, விழை - இச்சிக்கின்ற, முமுட்சு க்கு - முமுட்சுவுக்கு, ஏத்த அரிய - புகழ்தற்கு அருமையான,

பரம - சிரேஷ்டமாகிய, ஆன்ம ஞான நிலைதனை - ஆத்மாவின் ஞான நிலைமையை, தெளிவித்திடுவர் - தேறும்படி அறிவிப்பர் எனலாம். (2) மேலோர் - பெரியோர். (ஏ, அசை).

பாத்திரமறிந்து பிச்சையிடுதல் கோத்திரமறிந்து பெண்ணை அன்புடன் கொடுத்தல் என்பது பெரியோர் பாபஞ் செய்தற்குப் பயந்து தன்னையடைந்தவர்க்குச் சுகமாகிய நல்ல புண்ணியச் செயல்களைத் தெளியும்படி சொல்வார், மேலாக விளங்குகிற புண்ணிய கர்மத்தையும் பாபகர்மத்தையும் சடமாகப் பார்த்துச் சிறந்த மோட்சத்தையே இச்சிக்கின்ற முமூட்சுவுக்குப் புகழ்தற்கு அருமையான சிரேஷ்டமாகிய ஆத்மாவின் ஞான நிலைமையைத் தேறும்படி அறிவிப்பர் எனலாம்.

## வழியிற்கண்ட குதிரைக்கு வைக்கோற்புரியே கடிவாளம்.

கிழமைப் பரஞா னத்துணர்வு கிடைத்துச்
சீவன் முத்திநெறி
யுழியுற் றோர்தாந் தமையடைந்தோ ருளத்தின்
மெய்ந்நூ லுணர்ச்சியெனும்
விழியைக் கொடுத்துக் கிரமத்தான் மேலா
நிலையை யுறச்செய்வர்
வழியிற் கண்ட குதிரைக்கு வைக்கோற்
புரியே கவினமரோ (104)

(2) கிழமை - உரிமையாகிய, பரஞானத்து உணர்வு - மேலான ஞான அனுபவம், கிடைத்து - பெற்று, சீவன் முத்தி, நெறி உழி உற்றோர் - மார்க்கத்தினிடத்துப் பொருந்

தினோர், (தாம்), தமையடைந்தோர் - தம்மை அடுத்தவரது, உளத்தின் - மனதில், மெய்ந்நூல் - உண்மையான ஞான சாஸ்திரத்தின், உணர்ச்சியெனும் விழியைக்கொடுத்து, கிரமத்தால் - முறையாக, மேலாம் நிலையை - மேலான அனுபவ நிலைமையை, உறச்செய்வர் - அடையும்படி செய்வார் என்பதாம், (1) வழியிற்கண்ட குதிரைக்கு வைக்கோற்புரியே, கலினம் - கடிவாளம் எனல். (அரோ அசை). (தாம், சொல் லுருபு).

வழியிற்கண்ட குதிரைக்கு வைக்கோற்புரியே கடிவாளம் எனல் உரிமையாகிய மேலான ஞான அனுபவம் பெற்றுச் சீவன்முத்தி மார்க்கத்தினிடத்துப் பொருந்தினோர் தம்மை அடுத்தவரது மனதில் உண்மையான ஞான சாஸ்திரத்தின் உணர்ச்சியெனும் விழியைக் கொடுத்து முறையாக மேலான அனுபவ நிலைமையை அடையும்படி செய்வார் என்பதாம்.

## வெறுங்காதுக்கு வெள்ளோலைமேல்.

### வெண்பா.

அனுபவஞா னத்தை யடையா தவாளா
நினைவுறவி னான்மா நிலையை—யினிமை
செறிந்துபரோட் சத்தேனுந் தேர்தல் கடனும்
வெறுஞ்செவியின் வெள்ளோலை மேல் (105)

(2) அனுபவ ஞானத்தை யடையாது, வாளா நினைவு உறவின் - வீணான சங்கற்பங்களைச் செய்வதைப் பார்க்கினும், ஆன்மா நிலையை - ஆத்மாவின் நிலைமையை, இனிமை செறிந்து - அன்பைப்பொருந்தி, பரோட்சத்தேனுந் தேர்தல் -

பரோட்சமாக வாயினும் அறிதல், கடனும் - கடமையாகும் என்பதாம், (1) வெறுஞ்செவியின் - வெறுங்காதைவிட, வெள்ளோலைமேல் எனல்.

வெறுங்காதைவிட வெள்ளோலைமேல் எனல் அனுபவ ஞானத்தை யடையாது வீணான சங்கற்பங்களைச் செய்வதைப் பார்க்கினும் ஆத்மாவின் நிலைமையை அன்பைப் பொருந்திப் பரோட்சமாகவாயினும் அறிதல் கடமையாகும் என்பதாம்.

இதுவுமது.

புலன்கற் பனையவித்தை போஞ்சிற் சொரூப
மிலங்கும் விசாரவலி யில்லார்—மலம்பின்
றெறும்பிரம ஆகாயத் தியானம் புரிதல்
வெறுஞ்செவியின் வெள்ளோலை மேல் (106)

(2) புலன் - சத்தாதி விஷயங்களும், கற்பனை - சங்கற்பங்களும், அவித்தை - அஞ்ஞானமும், போம் - அற்ற, சிற்சொரூபம் - ஞான சொரூபம், இலங்கும் - விளங்குதற்கேதுவான, விசாரவலியில்லார் - ஆராய்ச்சியில் வல்லமை யில்லாதவர், மலம் - அஞ்ஞானத்தை, பின் - பிற்காலத்தில், தெறும் - அழிக்கும், பிரம ஆகாய - ஞான ஆகாயமாகிய பிரமத்தின், தியானம், புரிதல் - செய்தல் என்பதாம், (1) வெறுஞ்செவியின் - வெறுங்காதைவிட, வெள்ளோலை மேல் எனல்.

வெறுங்காதைவிட வெள்ளோலைமேல் எனல் சத்தாதி விஷயங்களும் சங்கற்பங்களும் அஞ்ஞானமும் அற்ற ஞான சொரூபம் விளங்குதற்கேதுவான ஆராய்ச்சியில் வல்லமையில்லாதவர் அஞ்ஞானத்தைப் பிற்காலத்தில் அழிக்கும் ஞான ஆகாயமாகிய பிரமத்தின் தியானம் செய்தல் என்பதாம்.

## அடங்காத பாம்பிற்கு இராஜா மூங்கிற்றடி.

அடங்காத பாந்தட் கரசுவேய்த் தண்டே
திடஞ்சார் விசாரத்தாற் சித்த—மொடுங்கா
வதிகாரி பேதத் தவன்சிந்தை மாய்க்குங்
கதியாந் தியானயோ கம் (107)

(1) அடங்காத, பாந்தட்கு - பாம்புக்கு, அரசு - இராஜா, வேய்த்தண்டு - மூங்கிற்றடி, எனல், (ஏ) திடம், சார் - பொருந்திய, விசாரத்தால் - ஆராய்ச்சியால், சித்தமொடுங்கா - மனமடங்காத, அதிகாரி பேதத்தவன் - வேறு பக்குவமுடையவன், சிந்தை - இராசத தாமத நினைவுகளை, மாய்க்கும் - கெடுக்கிற, கதி - வழி, (3) ஆம் - ஆகும், என்பதாம், (2) தியானயோகம், (ஏ, அசை).

அடங்காத பாம்புக்கு இராஜா மூங்கிற்றடி எனல் திடப்பொருந்திய ஆராய்ச்சியால் மனமடங்காத வேறு பக்குவமுடையவன் இராசத தாமத நினைவுகளைக்கெடுக்கிற வழி தியானயோகமாகும் என்பதாம்.

## குழந்தையும் தெய்வமும் கொண்டாடுவார் பக்கம்.

குழந்தையுந் தெய்வமுங் கொண்டாடு வார்பா
லெழுந்த சகுணேச னேனுந்—தொழுந்தனிமைச்
சித்தேனும் பல்காற் றியானித் திடுமுளத்தே
யொத்தே விளங்குவதென் றோர். (108)

குழந்தையும் தெய்வமும் கொண்டாடுவார், பால் - பக்கம் எனல், எழுந்த - விளங்கிய, சகுணேசனேனும் - சகுணமூர்த்தியான ஈசனானாலும், தொழும் - *வணங்கத்தக்க,

தனிமை - ஏகமாகிய, சித்தேனும் - ஞானசொரூபமான நிர்க்குணப்பிரமமானாலும், பல்கால் - நெடுங்காலம், தியானித்திடும், உளத்து - உள்ளத்தில், (ஏ) ஒத்து - பேதமின்றி, (ஏ) விளங்குவது - பிரகாசிப்பதாம், என்று ஓர் - எனத்தெரிந்துகொள் என்பதாம். (*வணங்கல் - அடங்குதல்) (ஏ, ஏ, அசைகள்).

குழந்தையும் தெய்வமும் கொண்டாடுவார் பக்கம் எனல் விளங்கிய சகுணமூர்த்தியான ஈசனானாலும் வணங்கத்தக்க ஏகமாகிய ஞானசொரூபமான நிர்க்குணப் பிரமமானாலும் நெடுங்காலந் தியானித்திடும் உள்ளத்தில் பேதமின்றிப் பிரகாசிப்பதாம் எனத்தெரிந்துகொள் என்பதாம்.

## கடன் பட்டும் பட்டினி.

இயற்சிற் சொரூபந்தா மென்றறிய மாட்டா
ருயற்குத் தியானமுயல் வுற்றும்—அயற்கண்
ணுடன்பட்டே தெய்வநிலை யுற்றுணரார் தம்பாற்
கடன்பட்டும் பட்டினியே காண் (109)

(2) இயல் - சுபாவமாகிய, சிற்சொரூபம் - ஞான வடிவமான ஆன்மா, தாம் - தாமே, என்று, அறியமாட்டார் - விசாரத்தால் அறியச் சக்தியில்லாதவர், உயற்கு - உய்வதற்கு, தியானம், முயல்வு உற்றும் - செய்ய முயற்சித்தும், (4) அயற்கண் - அன்னியமாக, உடன்பட்டு - நிச்சயித்து, (ஏ), (3) தெய்வ நிலை - ஈசனது நிலையை, (6) உற்று உணரார் - பேதமின்றி ஏகமாய் அறியார் என்பதாம், (5) தம்பால் - தமதிடத்து, (1) கடன் பட்டும் பட்டினி (ஏ), எனல், (காண் - முன்னிலை யசை). (ஏ, ஏ, அசைகள்).

கடன் பட்டும் பட்டினி எனல் சுபாவமாகிய ஞான வடிவமான ஆன்மாத் தாமே என்று விசாரத்தால் அறியச்சக்தியில்லாதவர் உய்வதற்குத் தியானஞ்செய்ய முயற்சித்தும் ஈசனது நிலைமை அன்னியமாக நிச்சயித்துத் தமதிடத்துப் பேதமின்றி ஏகமாய் அறியார் என்பதாம்.

## குங்குமம் சுமக்கும் கழுதை.

### கலிவிருத்தம்.

கங்கின் ஞானக் கலைநெறி யுண்மையா
யிங்கு ணர்ந்து மிதய மொருக்கிவீ
டங்கு றார்முயன் றன்னியர்க் கோதுவார்
குங்கு மஞ்சுமக் கும்மொரு கோகுவே (110)

(3) கங்கு இல் - கரையில்லாத, ஞானக்கலை நெறி - ஞான சாஸ்திர மார்க்கத்தை, உண்மையாய், (2) இங்கு - இவ்வுலகில், (4) உணர்ந்தும் - அறிந்தும், இதயம் - மனதை, ஒருக்கி - ஒரு வழிப்படுத்தி, வீடு - மோட்சம், (அங்கு), உறார் - அடையாதவராகி, முயன்று - முயற்சித்து, அன்னியர்க்கு - பிறர்க்கு, ஓதுவார் - சொல்பவர் என்பதாம், (1) குங்குமஞ்சுமக்கும் ஒரு, கோகு - கர்த்தபம் எனல். (ஏ, அசை). (அங்கு - ஆங்கு என்னும் அசைச்சொல் முதல் குறுகி நின்றது).

குங்குமஞ்சுமக்கும் ஒரு கர்த்தபம் எனல் இவ்வுலகில் கரையில்லாத ஞான சாஸ்திர மார்க்கத்தை உண்மையாய் அறிந்தும் மனதை ஒரு வழிப்படுத்தி மோட்சம் அடையாதவராகி முயற்சித்துப் பிறர்க்குச் சொல்பவர் என்பதாம்.

## பொறுத்தார் பூமியாள்வார் பொங்கினார் காடாள்வார்.

### வெண்பா.

பொறுத்தார் புவியாள்வார் பொங்கினர்கா டாள்வார்
புறத்தே பொறிகரணம் போகா—தொறுத்தோர்மெய்ஞ்
ஞானசுக நேர்வார் நனிவா சனைவசத்தே
போனவர்வெம் மாயையினெய்ப் போர் (111)

பொறுத்தார், புவி - பூமி, ஆள்வார், பொங்கினர் காடாள்வார், எனல், புறத்து - வெளியில், (ஏ) பொறி - இந்திரியங்களும், கரணம் - அந்தக்கரணங்களும், போகாது - செல்லாமல், ஒறுத்தோர் - அடக்கினோர், மெய்ஞ்ஞான சுகம் - சச்சிதானந்த சொரூபப்பிரமம், நேர்வார் - ஆவார், நனி - மிகவும், வாசனை வசத்து, (ஏ), போனவர், வெம்மாயையின் - கொடிய மாயையில், எய்ப்போர் - வருந்துவோர், என்பதாம். (ஏ, ஏ, அசைகள்).

பொறுத்தார் பூமியாள்வார் பொங்கினர் காடாள்வார் எனல் வெளியில் இந்திரியங்களும் அந்தக்கரணங்களும் செல்லாமல் அடக்கினோர் சச்சிதானந்த சொரூபப் பிரமமாவார் மிகவும் வாசனை வசத்துப் போனவர் கொடிய மாயையில் வருந்துவோர் என்பதாம்.

## குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொள்ளல்.

குளிக்கப்போய்ச் சேறணிந்து கொள்ளலுயர் ஞான
மளிக்குஞ் சுருதிநெறி யண்மி—யுளத்திச்சை
நீக்கும் விசாரமிலார் நெஞ்சுபோ மாறொழுகித்
தாக்குபல வாசனைசேர்த் தல் (112)

குளிக்கப்போய்ச்சேறு, அணிந்து - பூசி, கொள்ளல், எனல், உயர் ஞானம் அளிக்கும் - மேலான ஞானத்தைத் தரும், சுருதி நெறி அண்மி - வேத மார்க்கத்தை யடுத்து, உளத்து - மனதில், இச்சை - ஆசையை, நீக்கும் விசாரம், இலார் - இல்லாதவர், நெஞ்சுபோம் ஆறு - மனம் போனவழி, ஒழுகி - நடந்து, தாக்கு - எதிர்கின்ற, பல வாசனை - பல வாசனைகளை, சேர்த்தல் - உண்டாக்கிக்கொள்ளுதல் என்பதாம்.

குளிக்கப்போய்ச்சேறு பூசிக்கொள்ளல் எனல் மேலான ஞானத்தைத் தரும் வேத மார்க்கத்தை யடுத்து மனதில் ஆசையை நீக்கும் விசாரமில்லாதவர் மனம்போன வழி நடந்து எதிர்கின்ற பல வாசனைகளை உண்டாக்கிக்கொள்ளுதல் என்பதாம்.

## குரங்கு கைக் கொள்ளி.

### வஞ்சித்துறை.

குரங்குகைக் கொள்ளி
யிரும்புலத் திச்சை
பொருந்துயிர்ப் புந்தி
தருஞ்சிதச் சார்பே (113)

குரங்குகைக் கொள்ளி, எனல், இரும்புலத்து - பெருந் துன்பத்திற்கேதுவாகிய சத்தாதி விஷயங்களில், இச்சை பொருந்து - ஆசை கொள்கின்ற, உயிர்ப்புந்தி - சீவனுடைய புத்திக்கு, தரும் - தெரிவிக்கின்ற, சிதச்சார்பு - ஞான சம்பந்த இரகசிய வாக்கியங்கள் என்பதாம். (ஏ, அசை). (இரும்புலம் - பெரிய விடயம்). (விடயம் - விஷயம் - புலன் - சத்த முதலிய ஐவகை). (சிதம் - ஞானம்). (சார்பு - சம்பந்தம்).

குரங்குகைக் கொள்ளி எனல் பெருந்துன்பத்திற்கேது வாகிய சத்தாதி விஷயங்களில் ஆசை கொள்கின்ற சீவனு டைய புத்திக்குத் தெரிவிக்கின்ற ஞான சம்பந்த இரகசிய வாக்கியங்கள் என்பதாம். (இதன் கருத்து தானுங்கெட்டுப் பிறரையுங் கெடுத்தலாம்).

## புலியைக்கண்டு நரி சூடு போட்டுக்கொள்ளல்.

### அறுசீர் விருத்தம்.

புலியைக் கண்டு நரிசூடு புனைந்து
கோடல் பரஞானி
பொலிமெய்க் கண்ணே மான்மதம்போற் பொருந்து
மூழின் செயனோக்கி
வலிதிற் காய மதியினர்தா மயலாய்
மற்றோர் வீரியத்தின்
கலிதத் தாகா மியவினையைக் கைக்கொண்
டழிவர் கயவரோ (114)

(1) புலியைக்கண்டு நரி சூடு, புனைந்து கோடல் - போட் டுக்கொள்ளல், எனல், பரஞானி - மேலான ஞானியின், பொலி - விளக்கமான, மெய்க்கண் - சரீரத்தில், (ஏ , மான்ம தம்போல் - கஸ்தூரி போல, பொருந்தும், ஊழின் செயல் நோக்கி - பிராரத்த கர்மத்தைப் பார்த்து, (3) வலிதில் - வேண்டுமென்று, (2) காயமதியினர் - தேகத்தில் அபிமான முடையோர், (தாம்), மயலாய் - மயங்கி, மற்றோர் - புனுகு பூனை சவ்வாதுபூனை கஸ்தூரிமான் என்பவைகளைத்தவிர மற்ற பிராணிகளின். வீரியத்தின் கலிதத்து - பிந்து வெளிப் படுதல் போன்ற, ஆகாமிய வினையை, (4) கைக்கொண்டு -

செய்து, அழிவர் - கெடுவார், கயவர் - அவர் மிகவும் ஈனர்கள் எனலாம். (ஏ, அசை). (தாம், சாரியை). (அரோ, அசை).

புலியைக்கண்டு நரி சூடு போட்டுக்கொள்ளல் எனல் மேலான ஞானியின் விளக்கமான சரீரத்தில் கஸ்தூரி போலப் பொருந்தும் பிராரத்த கர்மத்தைப் பார்த்து தேகத்தில் அபிமான முடையோர் மயங்கிப் புனுகுபூனை சவ்வாதுபூனை கஸ்தூரிமான் என்பவைகளைத்தவிர மற்ற பிராணிகளின் பிந்து வெளிப்படுதல் போன்ற ஆகாமிய வினையை வேண்டுமென்று செய்து கெடுவார் அவர் மிகவும் ஈனர்கள் என்பதாம்.

## குடிப்பது கூழாம் கோப்பளிப்பது பன்னீராம்.

### கலிவிருத்தம்.

குடிப்பது கூழே கொப்பளிப் பதுவோ
கடிப்பனி நீராங் கபடசித் தத்த
ரடிப்பது விடயத் தவாச்சமா தானங்
கொடுப்பதோ ஞான கோப்பிய மொழியே (115)

குடிப்பது கூழ், (ஏ), கொப்பளிப்பதுவோ, கடி - வாசனை பொருந்திய, பனி நீராம் எனல், கபட சித்தத்தர் - வஞ்சக மனதுடையோர், அடிப்பது, விடயத்து அவா - விடயங்களில் ஆசை, சமாதானங் கொடுப்பதோ, ஞான கோப்பிய மொழி - ஞான ரகசிய வாக்கியங்கள் என்பதாம், (ஏ, ஏ, அசைகள்).

குடிப்பது கூழ் கொப்பளிப்பதுவோ வாசனை பொருந்திய பனிநீராம் எனல் வஞ்சக மனதுடையோர் அடிப்பது

விடயங்களில் ஆசை, சமாதானங் கொடுப்பதோ ஞான ரகசிய வாக்கியங்கள் என்பதாம்.

## வேலையற்ற கோழி தோலின் முட்டையிட்டது.

### வஞ்சி விருத்தம்.

வேலை யற்ற குக்குடந்
தோலின் முட்டை யிட்டிடுஞ்
சால வும்வி சாரியா
னேனும் வாயின் ஞானமே (116)

(1) வேலையற்ற, குக்குடம் - கோழி, தோலின் முட்டை, இட்டு இடும் - இடும் எனல், சாலவும் - நன்றாக, விசாரியான் - விசாரியாதவன், (3) ஏனும் - அடைவான், (2) வாயின் ஞானம் - வாய் ஞானத்தை, (ஏ), (4) அனுபவ ஞானத்தை யடையான் என்பதாம். (இட்டு, இடு எனும் பகுதிப்பொருள் விகுதியின் விகாரம்). (ஏ, அசை).

வேலையற்ற கோழி தோலின் முட்டை இடும் எனல் நன்றாக விசாரியாதவன் வாய் ஞானத்தை அடைவான் அனுபவ ஞானத்தை யடையான் என்பதாம்.

## உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாமா.

### கொச்சகக்கலிப்பா.

வியந்திடவே துரியமுடன் மேலினும்வாய் ஞானத்தால்
வயங்கியிடுந் தேகாபி மானியுயர் பிரமமதாய்
நயந்துசிதா காயத்தே நண்ணுபர ஞானியல
னுயர்ந்துயர்ந்து பறந்திடினு மூர்க்குருவி பருந்தாமோ (117)

(2) வியந்திட - ஆச்சரியப்பட, (ஏ), துரியமுடன், மேலி னும் - துரியாதீதத்தைப்பற்றியும், வாய் ஞானத்தால் - பேசு கிற வாய் ஞானத்தால், வயங்கியிடும் - மேலாய் விளங்குகின்ற, தேக அபிமானி, உயர் பிரமம் (அது) ஆய் - சிரேஷ்டமான பிரம சொரூபமாக, நயந்து - மகிழ்ந்து, சித் ஆகாயத்து - ஞானாகாயத்தில், (ஏ), நண்ணு - நிலைக்கின்ற, பரஞானி அலன் - அனுபவ ஞானியாகான் எனலாம், (1) உயர்ந்து உயர்ந்து - உயர உயர, பறந்திடினும் - பறந்தாலும், ஊர்க்குருவி, பருந்து, ஆமோ - ஆகுமா, என்பது.

உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமா என்பது ஆச்சரியப்படத் துரியமுடன் துரியாதீதத்தைப்பற்றியும் பேசுகிற வாய் ஞானத்தால் மேலாய் விளங்குகின்ற தேக அபிமானி, சிரேஷ்டமான பிரம சொரூபமாக மகிழ்ந்து ஞானாகாயத்தில் நிலைக்கின்ற அனுபவ ஞானியாகான் எனலாம். (ஏ அசை). (அது, சொல்லுருபு). (ஏ, அசை).

## சும்மாகிடந்த தாரையை ஊதிக்கெடுத்தான்.

### அறுசீர் விருத்தம்.

கேளாதிருப்ப வதிகாரங் கிட்டார் பாற்போய் ஞானநிலைக்
காளா வீரென் றுபதேச மளித்தே கன்மம் பத்திநெறி
மூளா வகையும் யுத்திகொடு மோகிப் பித்துக் கெடுத்திடுதல்
வாளா கிடந்த தாரையினை வாய்வைத் தூதிக் கெடுத்ததுவே.

(2) கேளாது - கேளாமல், இருப்ப - இருக்க, அதிகாரம்- பக்குவம், கிட்டார்பால் - அடையாதவரிடத்தில், போய், ஞானநிலைக்கு, ஆள் ஆவீர் என்று - உரியவராகுங்களென்று, உப

தேசம், அளித்து - கொடுத்து (ஏ), கன்மம் - கர்மமார்க்கத்தி லும், பக்தி நெறி - பக்தி மார்க்கத்திலும், மூளாவகையும் - முயற்சித்துச் செல்லாதபடியும், யுக்திகொடு - யூகத்தைக் கொண்டு, மோகிப்பித்து - மயக்கி, கெடுத்திடுதல் - கெடுத்தல், என்பதாம், (1) வாளா - சும்மா, கிடந்த, தாரையினை - தாரையை, வாய்வைத்து - வாயில்வைத்து, ஊதிக்கெடுத்தது (ஏ), எனல். (ஏ, ஏ, அசைகள்)

சும்மா கிடந்த தாரையை வாயில்வைத்து ஊதிக்கெடுத்தது எனல் கேளாமல் இருக்கப் பக்குவம் அடையாதவரிடத்திற்போய் ஞான நிலைக்கு உரியவராகுங்களென்று உபதேசம் கொடுத்துக் கர்மமார்க்கத்திலும் பக்தி மார்க்கத்திலும் முயற்சித்துச் செல்லாதபடியும் யூகத்தைக்கொண்டு மயக்கிக் கெடுத்தல் என்பதாம்.

## கடைத் தேங்காயையெடுத்து வழிப்பிள்ளையார்க்கு உடைத்தல்.

### கட்டளைக் கலித்துறை.

கடைத்தெங்கக் காயை வழிப்பிள்ளை யார்க்குக் கதித்துடைத்த
லடுத்துக் குருபதந் தன்னபி மான மவற்களித்தல்
விடுத்துப் பருவமில் லார்தமை நோக்கியிம் மெய்க்குருவைப்
பிடித்துக் கதிபெறு வீரென் றவருளம் பேதிப்பதே (119)

(1) கடைத் தெங்கக்காயை - கடைத்தேங்காயையெடுத்து, வழி - வழியிலிருக்கிற, பிள்ளையார்க்கு, கதித்து - தைரியமாய், உடைத்தல், என்பது, (3) அடுத்து, (2) குருபதம் - குருவின் பாதத்தை, (4) தன் அபிமானம் - தனது அபிமான

வஸ்துக்களை, அவர்க்கு, அளித்தல் - கொடுக்கும் முறையை, விடுத்து - விட்டு, பருவம் இல்லார்தமை நோக்கி - பக்குவமில்லாதவரைப்பார்த்து, இம்மெய்க்குருவை, பிடித்து - பற்றி, கதிபெறுவீர் என்று - முத்தியடையுங்களென, அவர் உளம் - அவர்கள் மனதை, பேதிப்பது - கலங்கச்செய்தல், எனலாம். (வ, அசை).

கடைத் தேங்காயையெடுத்து வழியிலிருக்கிற பிள்ளையார்க்குத் தைரியமாய் உடைத்தல் என்பது குருவின் பாதத்தை அடுத்துத் தனது அபிமான வஸ்துக்களை அவர்க்குக் கொடுக்கும் முறையை விட்டுப் பக்குவமில்லாதவரைப்பார்த்து இம்மெய்க்குருவைப்பற்றி முத்தியடையுங்களென அவர்கள் மனதைக்கலங்கச்செய்தல் எனலாம்.

## அற்பருக்கு வாழ்வு வந்தால் அர்த்த ராத்திரியில் குடை பிடிப்பர்.

### கொச்சகக்கலிப்பா.

அற்பருக்கு வாழ்வுவரி லரையிரவிற் குடைகவிப்பர்
வற்புறுசற் குணமிலற்கு வண்மைமிகு குருநெறியாம்
விற்பனந்தான் விளங்கியிடின் மெய்ப்பரஞா னியர்முன்னுங்
கற்பெருமை யொடுஞான தந்திரங்கள் சாற்றுவனே (120)

அற்பருக்கு வாழ்வு, வரில் - வந்தால், அரையிரவில் - அர்த்தராத்திரியில், குடைகவிப்பர் - குடைபிடிப்பார், எனல், வற்புஉறு - உறுதிபெற்ற, சற்குணம், இலற்கு - இல்லாதவனுக்கு, வண்மை - தியாககுணம், மிகு - மிகுந்த, குருநெறியாம் - குருவின் மார்க்கமாகிய, விற்பனம் - உணர்வு, (தான்)

விளங்கிவிடின் - தோன்றினால், மெய் - உண்மையான, மா
னியர்முன்னும் - மேலாகிய ஞானிகள் முன்பும், தற்பெருமை
யொடு, ஞானதந்திரங்கள் - ஞான சாஸ்திர யுக்திகளை, சாற்
வன் - சொல்லிக்காட்டுவான், என்பதாம். (ஏ, அசை) (ஆ
சாரியை).

அற்பருக்கு வாழ்வு வந்தால் அர்த்தராத்திரியில் குடை
பிடிப்பார் எனல் உறுதிபெற்ற சற்குணமில்லாதவனுக்கு
தியாககுணம் மிகுந்த குருவின் மார்க்கமாகிய உணர்வு தோன்
றினால் உண்மையான மேலாகிய ஞானிகள் முன்பும் தற்பெ
மையொடு ஞான சாஸ்திர யுக்திகளைச் சொல்லிக்காட்டுவா
என்பதாம்.

## சிரிக்கிற பெண்ணையும் அழுகிற ஆணையும் நம்பலாகா

கலிநிலைத்துறை.

நகைக்கு மாதையு மிரங்குமா டவனையு நம்பார்
பகுப்பி னெய்திடுஞ் செயல்களிற் சமமறப் பட்ச
மிகுத்து றுஞ்சவி கற்பநிட் டனுமகிழ் விளங்கா
முகத்த னாநிரு விகற்பனும் பொய்மையின் முதிர்க்கோ

நகைக்கும் மாதையும்-சிரிக்கிற பெண்ணையும், இரங்கு
அழுகிற, ஆடவனையும் - ஆணையும், நம்பார் - நம்பமாட்ட
எனல், பகுப்பின் - பேதங்களாக, எய்திடும் - தோற்றுவ
செயல்களில் - காரியங்களில், சமம் - சமதிருஷ்டி அல்ல
உதாசீனம், அற - இன்றி, பட்சம் - பிரீதி அல்லது வெறுப
மிகுத்து உறும் - மிகச்செய்யும், சவிகற்ப நிட்டனும் - சம
ஞாத சமாதியுடையவனும், மகிழ் - மகிழ்ச்சி, விளங்க
தோன்றாத, முகத்தன் ஆம் - முகத்தினனாகிய, நிரு விக

னும் - அசம்பிரஞ்ஞாத சமாதியுடையவனும், பொய்மை யின் - பொய்ப்பாவனையில், முதிர்ந்தோர் - வல்லவர், என்ப தாம்.

சிரிக்கிற பெண்ணையும் அழுகிற ஆணையும் நம்பமாட்டார் எனல் பேதங்களாகத் தோற்றுகிற காரியங்களில் சம திருஷ்டி அல்லது உதாசீனமின்றிப் பிரீதி அல்லது வெறுப்பு மிகச்செ ய்யும் சம்பிரஞ்ஞாத சமாதியுடையவனும் மகிழ்ச்சி தோன்றாத முகத்தினனாகிய அசம்பிரஞ்ஞாத சமாதியுடையவனும் பொய் ப்பாவனையில் வல்லவர் என்பதாம்.

### ஊருக்கு ஒரு வேசி யாருக்கு வாழ்க்கைப்படுவள்.

கட்டளைக்கலித்துறை.

ஊருக் கொருகுளை யாருக்கு வாழ்க்கை யுறப்படுவ
ளோரனு போகமுந் தன்றுணை யின்றி யொளிர்வரிதாய்ச்
சாரு மனந்தான் சடத்திற் கலந்தாற் சடானுபவ
நேருறுஞ் சித்தொன் றிடிற்சித் தனுபூதி ஞேயமதே (122)

ஊருக்கு ஒரு, குளை - வேசி, யாருக்கு வாழ்க்கை, உறப்படுவள் - படுவாள் எனல், ஓர் அனுபோகமும் - ஒரு அனுபவமும், தன் துணை இன்றி - தனது சகாயமில்லாமல், ஒளிர்வு அரிதாய் - விளங்காதபடி, சாரும் மனம் - பொருந் திய மனமானது, தான் சடத்திற் கலந்தால், சட அனுபவம் - சடத்தின் அனுபவம், நேருறும் - உண்டாகும், சித்து ஒன் றிடில் - அறிவிற் கலந்தால், சித்து அனுபூதி - அறிவின் அனுபவம், ஞேயம் - விளக்கமாம் என்பதாம். (அது, சொல்லுருபு). (ஏ, அசை). (சடம் - அறிவற்றது).

ஊருக்கொருதேவசி யாருக்கு வாழ்க்கைப்படுவாள் எனல் ஒரு அனுபவமும் தனது சகாயமில்லாமல் விளங்காதபடி பொருந்திய மனமானது தான் சடத்திற் கலந்தால் சடத்தின் அனுபவம் உண்டாகும் அறிவிற் கலந்தால் அறிவின் அனுபவம் விளக்கமாம் என்பதாம்.

## இரண்டுபட்ட வூரில் குரங்குங் குடியிராது.

### அறுசீர் விருத்தம்.

இரண்டு பட்ட வூரி னிலேத குரங்கின் குடியுந்
திரண்ட வொருமை விடயச் செறிவி னன்றி யோர்காற்
புரண்ட பிறிவாம் விடயம் பொருந்த விச்சித் திடுங்கான்
முரண்ட மனது நிலேயா முடியா வனுபோ கந்தான் (123)

(1) இரண்டுபட்ட, ஊரின் - ஊரில், இலது (ஏ) குரங்கின் குடியும் - குரங்கும் குடியிராது எனல், (3) திரண்ட - கூடிய, ஒருமை - ஒரு, விடயச் செறிவின் - விஷயத்தின் சம்பந்தத்தால், அன்றி - அல்லாமல், (2) ஓர் கால் - ஒரே சமயத்தில், (4) புரண்ட - மாறுபட்ட, பிறிவு ஆம் விடயம் - வேறான விஷயம், பொருந்த - சம்பந்திக்க, இச்சித்திடுங்கால் - வேண்டினல், முரண்ட - பேதமான, மனது, நிலேயா - நிற்காது, (6) முடியா - முடிவு பெருது என்பதாம், (5) அனுபோகம் - அனுபவம், (தான், சாரியை). (ஏ, அசை).

இரண்டுபட்ட ஊரில் குரங்கும் குடியிராது எனல் ஒரே சமயத்தில் கூடிய ஒரு விஷயத்தின் சம்பந்தத்தால் அல்லாமல் மாறுபட்ட வேறான விஷயம் சம்பந்திக்க வேண்டினல் பேதமான மனது நிற்காது அனுபவம் முடிவு பெருது என்பதாம்.

## அறைகாத்தான் பெண் இழந்தான்.

### வெண்பா.

விசாரணையப் பியாச விவேகவினோ தத்தா
னிசாரவிட யத்தோடு நெஞ்சை—யுசாவி
முறைமீட்கா துள்வலித்த மூர்க்கர்மனம் பாழா
மறைகாத்தான் பெண்ணிழந்தா னால் (124)

(2) விசாரணை அப்பியாச விவேக, விநோதத்தால் - விநோதங்களால், நிசார - சாரமற்ற, விடயத்து ஓடும் - விஷயங்களிற் செல்லுகின்ற, நெஞ்சை - மனதை, உசாவி - அதன் விருத்திகளை நோக்கி, முறை - கிரமமாக, மீட்காது - வசப் படுத்தாமல், உள் - உள்ளேயே, வலித்த - பலவந்தமாக நிறு த்த முயற்சிக்கிற, மூர்க்கர் மனம், பாழ் ஆம் - சூன்ய நிலை மையை யடையும் என்பதாம், (1) அறை காத்தான் பெண் இழந்தான், எனல். (ஆல், அசை).

அறைகாத்தான் பெண் இழந்தான் எனல் விசாரணை அப்பியாச விவேக விநோதங்களால், சாரமற்ற விஷயங்களிற் செல்லுகின்ற மனதை அதன் விருத்திகளை நோக்கிக் கிரம மாக வசப்படுத்தாமல் உள்ளேயே பலவந்தமாக நிறுத்த முய ற்சிக்கிற மூர்க்கர் மனம் சூன்ய நிலைமையை யடையும் என்ப தாம்.

## இக்கரைக்கு அக்கரை பசப்பு.

### கலிவிருத்தம்.

தேர்பயிற் சியைவிடா திதத்திற் செய்மதி
சார்தரார் தன்னதா சாரத் திற்பிற
ரோர்கொளா சாரமே யினிதென் றுன்னுவா
ரோர்கரைக் கெதிர்கரை யுறுப சப்பரோ (125)

(2) தேர் - தேர்ந்த, பயிற்சியை - அப்பியாசத்தை, விடாது - விடாமல், இதத்தில் - பிரீதியாக, செய் - செய்கிற, மதி - புத்தியை, சார்தரார் - அடையாதவர், தன்னது ஆசாரத்தில் - தனது கொள்கையைவிட, பிறர் - மற்றவரது, ஏர்கொள் - அழகு பொருந்திய, ஆசாரமே - கொள்கையே, இனிது - நல்லது, என்று, உன்னுவார் - நினைப்பார் என்பதாம், (1) ஓர் கரைக்கு எதிர் கரை - ஒரு கரைக்கு எதிர்த்த கரை, உறு பசப்பு - மிகுந்த பச்சை எனல், (அரோ - அசை).

ஒரு கரைக்கு எதிர்த்த கரை மிகுந்த பச்சை எனல், தேர்ந்த அப்பியாசத்தை விடாமல் பிரீதியாகச் செய்கிற புத்தியை யடையாதவர் தனது கொள்கையைவிட, மற்றவரது அழகு பொருந்திய கொள்கையே நல்லது என்று நினைப்பார் என்பதாம்.

### வாய்த்தவிடும் போய் அடுப்பு நெருப்பும் அவிந்தது.

உவமைவாய்த் தவிடு மொழிந்தடுப் பனலு
மவியுநெஞ் சத்தி னயற்கரு மங்க
ளிவரஞா னப்பி யாசமுந் தொடங்கி
னவிலுமவ் வினையு ஞானமும் வீணே (126)

உவமை - கொவ்வைக்கனி முதலிய உவமானத்தையுடைய, வாய் - வாயிலுள்ள, தவிடும், ஒழிந்து - போய், அடுப்பு, அனலும் - நெருப்பும், அவியும், எனல், நெஞ்சத்தின் - மனதில், அயற் கருமங்கள் - அன்னியமான கருமங்களில் விருப்பம், இவர - இருக்க, ஞான அப்பியாசமும், தொடங்கின் - ஆரம்பித்தால், நவிலும் - சொல்லிய, அவ்வினையும் - அந்தக்கர்மமும், ஞானமும் வீணே, என்பதாம்.

ாவ்வைக்கனி முதலிய உவமானத்தையுடைய வாயி
தவிடும் போய் அடுப்பு நெருப்பும் அவியும் எனல், மன
ன்னியமான கருமங்களில் விருப்பமிருக்க ஞான அப்பி
ஆரம்பித்தால் சொல்லிய அந்தக் கர்மமும் ஞானமும்
என்பதாம்.

## கப்பல் விட்டுக் கெட்ட குடி கோட்டை நூற்றுப் பிழைக்குமா.

### அறுசீர் விருத்தம்.

விட்டுக் கெட்டகுடி கருதிற் கொட்டை நூற்றுறைத
சச்சி தானந்த சருவ பூர ஞான்மநிலை
ன் விசார மகன்றுபுலன் வழிபோய் மாயை வசமாய
மனது கன்மநெறி தொடர்ந்தே கவலுந்
தொழிலன்றே (127)

கப்பல் விட்டுக் கெட்டகுடி, (1) கருதில் - நினைக்கு
, (3) கொட்டை நூற்று, உறைதல் - பிழைத்தல்
தப்பு இல் - குற்றமில்லாத, சச்சிதானந்த, சருவ
ஞான்ம நிலை - சர்வ பரிபூரணமான ஆத்ம நிலைமையின்,
ன் - பொக்கிஷம் போன்ற, விசாரம், அகன்று - விசா
விட்டு, புலன் வழி போய் - சப்தாதி விஷயங்களிற்
மாயை வசம் ஆய - மாயையின் வசமாகிய, துப்பு
டமின்றிய, மனது, கன்ம நெறி - கர்ம மார்க்கத்தை,
ந்து, (ஏ), கவலுந் தொழில் - வருந்துஞ் செயல், என்
(அன்று, ஏ - அசைகள்). (ஏ, அசை).

னைக்குமிடத்துக் கப்பல் விட்டுக் கெட்டகுடி
ட நூற்றுப் பிழைத்தல் எனல், குற்றமில்லாத சச்சி

தானந்த சர்வ பரிபூரணமான ஆத்ம நிலைமையின் பொக்கிஷம் போன்ற விசாரணையை விட்டுச் சப்தாதி விஷயங்களிற் சென்று மாயையின் வசமாகிய திடமின்றிய மனது கர்ம மார்க்கத்தைத் தொடர்ந்து வருந்துஞ் செயல் என்பதாம்.

## உப்பில்லாதபண்டத்தைக் குப்பையில்போடவேண்டும்

### கலிவிருத்தம்.

உப்பில் பண்ட முகுத்திடல் குப்பையு
ளொப்பு மான்ம வுணர்ச்சி யுடன்படா
வெப்பில் பண்பு விவேக நெறியெலாஞ்
செப்பு மாயைத் திறத்திற் றெரிகவே (128)

(1) உப்பு இல் - உப்பில்லாத, பண்டம் - பதார்த்தத்தை, (3) உகுத்திடல் - போடவேண்டும் எனல், (2) குப்பையுள் - குப்பையில், (4) ஒப்பும் - யாவரும் தனது சொரூபமாக ஒப்பத்தகுந்த, ஆன்ம உணர்ச்சியுடன் - நான் நான் என்று விளங்கிக்கொண்டிருக்கும் ஆத்மாவின் அனுபவத்துடன், படா - சேராத, வெப்பு இல் - தாபமற்ற, பண்பு - குணம், விவேக நெறி, எலாம் - அனைத்தும், செப்பும் - சொல்லப்படுகின்ற, மாயைத் திறத்தில் - மாயையின் நிலைமையைப் பொருந்தியவை யென்று, தெரிக - தெரியக்கடவர் என்பதாம். (ஏ, அசை).

உப்பில்லாத பதார்த்தத்தைக் குப்பையில் போடவேண்டும் எனல், யாவரும் தனது சொரூபமாக ஒப்பத்தகுந்த நான் நான் என்று விளங்கிக்கொண்டிருக்கும் ஆத்மாவின் அனுபவத்துடன் சேராத தாபமற்ற குணம் விவேக நெறி யனைத்தும் சொல்லப்படுகின்ற மாயையின் நிலைமையைப் பொருந்தியவை யென்று தெரியக்கடவர் என்பதாம்.

## பெண்புத்தி பின்புத்தி.

### வெண்பா.

பெண்புத்தி பின்புத்தி பேசிற் பிரமமதா
நண்சச்சி தானந்த ஞானமிலார்—பண்பிற்
சகநெறிமா சித்திகலை சர்வவிதத் தானு
மிகுமறிவு மாமபர மே (129)

(2) பெண்புத்தி பின்புத்தி, எனல், (1) பேசில் - சொல் லுமிடத்து, (3) பிரமம் (அது) ஆ - பிரமமாக, நண் - விளங்கு கிற, சச்சிதானந்த, ஞானம் - உணர்ச்சி, இலார் - இல்லாத வர், பண்பின் - ஒழுக்கமுற்ற, சகநெறி - உலகநடை, மாசித்தி - மகாசித்தி, கலை - சாஸ்திரம் என்னும், சர்வவிதத் தானும், மிகும் - மேலாகும், அறிவும், (5) ஆம் - ஆகும், என்ப தாம், (4) அபரமே - அபரஞானமே. (அது, சொல்லுருபு)

சொல்லுமிடத்துப் பெண்புத்தி பின்புத்தி எனல், பிரம மாக விளங்குகிற சச்சிதானந்த உணர்ச்சி இல்லாதவர் ஒழுக்க முற்ற உலகநடை மகாசித்தி சாஸ்திரம் என்னும் சர்வவிதத் தானும் மேலாகுமறிவும் அபரஞானமே யாகும் என்பதாம்.

## வாய்பார்த்தவர் வாழ்விழந்தார்.

சுருதிபுரா ணாகமங்கள் சூழுமிதி காச
மிருதிகலை நூன்முழுதுண் மேலாம்—பொருள்சிவமென்
றுய்வாற்சிந் தைக்குளறி யார்பலநூல் வேட்டொழிவர்
வாய்பார்த்தார் வாழ்விழந்தார் மன் (130)

(2) சுருதி - வேதம், புராண ஆகமங்கள், சூழும் இதி காசம், மிருதி - தர்மசாஸ்திரங்கள், கலை - கலைஞானம், நூல் -

இன்னும் மற்ற சாஸ்திரங்கள், முழுது உள் - எல்லாவற்றுள்ளும், மேலாம்பொருள் - சொல்லப்பட்ட மேலானபொருள், சிவம் என்று, ஆய்வால் - ஆராய்ச்சியால், சிந்தைக்குள் - மனதினிடத்து, அறியார் - அறியாதவர், பலநூல் - பலசாஸ்திரங்களை, வேட்டு - விரும்பிக்கற்றுக்கொண்டு, ஒழிவர் - அனுபவநிலையை அடையார், என்பதாம், (1) வாய்பார்த்தார் வாழ்விழந்தார், எனல், (மன், அசை).

வாய்பார்த்தார் வாழ்விழந்தார் எனல், வேதம் புராணம் ஆகமங்கள் சூழும் இதிகாசம் தர்மசாஸ்திரங்கள் கலைஞானம் இன்னும் மற்ற சாஸ்திரங்கள் எல்லாவற்றுள்ளும் சொல்லப்பட்ட மேலானபொருள் சிவம்என்று ஆராய்ச்சியால் மனதினிடத்து அறியாதவர் பல சாஸ்திரங்களை விரும்பிக் கற்றுக்கொண்டு அனுபவநிலையை அடையார் என்பதாம்.

### வடையைத் தின்னச்சொன்னால் துளையை எண்ணிப்பார்க்கிறது.

### வஞ்சி விருத்தம்

வடைபுசியெ னிற்றுளைவ ழிக்கணக்
கிடுதல்சுரு திப்பொருளி னைக்களிப்
பொடுமனனி யென்னின்வரு பூருவ
வடைவின்முறை யாய்தல்குறை வையகோ (131)

(1) வடைபுசி எனில் - வடையைச்சாப்பிடு என்றால், துளைவழி - துவாரங்களை, கணக்கிடுதல் - எண்ணிப்பார்த்தல், எனல், சுருதிப்பொருளினை - வேதத்தின் சித்தாந்த அர்த்தத்தை, களிப்பொடு மனனி என்னின் - பிரீதியுடன் மனனஞ்செய்யென்றால், வரு - தொடர்ந்து வருகின்ற, பூருவ அடை-

வின் - பூருவபக்ஷத்தின், முறை - கிரமங்களை, ஆய்தல் - ஆராய்தலாம், (3) குறைவு - அதுமிகுந்த தப்பிதமாகும், என்பதாம், (2) ஐயகோ - ஐயோ.

வடையைச் சாப்பிடு என்றால் துவாரங்களை எண்ணிப் பார்த்தல் எனல், வேதத்தின் சித்தாந்த அர்த்தத்தைப் பிரீதியுடன் மனனஞ் செய்யென்றால் தொடர்ந்து வருகின்ற பூருவ பட்சத்தின் கிரமங்களை ஆராய்தலாம் ஐயோ அது மிகுந்த தப்பிதமாகும் என்பதாம்.

## அகல உழுவதைவிட ஆழ உழுதல் நல்லது.

### கலிவிருத்தம்

அகல வுழுதலி னாழ வுழுவது
தகுதி பலநெறி தாவு சிரவண
மிகலி னொருநெறி மேவி மனனமுண்
மகிழ வுறுவர்ச மாதி பெறுவரே (132)

அகல, உழுதலின் - உழுவதைப்பார்க்கினும், ஆழ உழுவது, தகுதி - நல்லது, எனல், பல, நெறி - மார்க்கங்களை, தாவு - பற்றிய, சிரவணம், மிகலின் - மிகச்செய்தலைவிட, ஒரு, நெறி - மார்க்கத்தை, மேவி - பற்றி, மனனம் - சிந்தித்தலை, உள்மகிழ - மனதிற் பிரீதியாய், உறுவர் - செய்வோர், சமாதிபெறுவர் - சமாதி சாட்சாத் காரங்களையும் அடைவார், என்பதாம், (ஏ, அசை)

அகல உழுவதைப்பார்க்கினும் ஆழ உழுவது நல்லது எனல், பல மார்க்கங்களைப்பற்றிய சிரவணம் மிகச்செய்தலைவிட ஒரு மார்க்கத்தைப் பற்றிச்சிந்தித்தலை மனதிற் பிரீதி

யாய்ச் செய்வோர் சமாதி சாட்சாத்காரங்களையும் அடைவார் என்பதாம்.

## பாரா உடைமை பாழ்.

### வஞ்சி விருத்தம்.

வேரா முயிரின் மெய்ம்மை
யோரார் பிரம மேனு
மோரா விடினெ னுண்டு
பாரா வுடைமை பாழே (133)

(2) வேராம் - காரணமாகிய, உயிரின் மெய்ம்மை - சீவனது யதார்த்த சொரூபம், ஏர் ஆர் - அழகு மிகுந்த, பிரமமேனும் - பிரமமே ஆனாலும், ஓராவிடின் - அனுபவமாயறியாவிடின், என் - என்ன பிரயோசனம், உண்டு, என்பதாம், (1) பாரா உடைமை பாழ், எனல், (ஏ, அசை).

பாரா உடைமை பாழ் எனல், காரணமாகிய சீவனது யதார்த்த சொரூபம் அழகு மிகுந்த பிரமமேயானாலும் அனுபவமாயறியாவிடின் என்ன பிரயோசனமுண்டு என்பதாம்.

## வெந்நீரால் வீடு வேகுமா.

நன்னேர் மைப்பர ஞானந்
தன்னான் மாயைத விர்ப்ப
ரைந்நா லோர்வின டங்கா
வெந்நீ ரான்மனை வேமோ (134)

(2) நல் நேர்மை - நல்ல சூட்சுமமாகிய, பரஞானந் தன்னால் - அபரோட்ச ஞானத்தால், மாயை தவிர்ப்பர் - மாயையை

ஒழிப்பார், ஐ - அழகிய, நூல் ஓர்வின் - சாஸ்திர ஆராய்ச்சி யால், அடங்கா - அது ஒழியாது என்பதாம், (1) வெந்நீ ரால், மனை வேமோ - வீடு வேகுமா எனல்.

வெந்நீரால் வீடு வேகுமா எனல், நல்ல சூட்சுமமாகிய அபரோட்ச ஞானத்தால் மாயையை ஒழிப்பார் அழகிய சாஸ் திர ஆராய்ச்சியால் அது ஒழியாது என்பதாம்.

## அரசமரத்தைச் சுற்றி வயிற்றைத் தடவிப்பார்த்தல்.

### கலிவிருத்தம்.

அரசு சுற்றி யகடு வருடுதல்
சொரூப ஞானநன் நூலினைத் தூலமாச்
சிரவ ணஞ்செய் துடனே திகழ்ந்தில
பரசு வானு பவக்குறி யென்னலே (135)

(1) அரசு - அரசமரத்தை, சுற்றி - சுற்றிவந்து, அகடு - வயிற்றை, வருடுதல் - தடவிப்பார்த்தல் எனல், சொருப ஞான - ஆத்ம சொரூப ஞானத்தைப்பற்றிய, நல் நூலினை - நல்ல சாஸ்திரத்தை, தூலமா - ஸ்தூலமாக, சிரவணஞ்செய்து, உடனே, (3) திகழ்ந்தில - விளங்கவில்லை, (2) பர - மேலான, சுவானுபவ, குறி - இலட்சணம், (4) என்னல் - என்பதாம், (ஏ, அசை).

அரசமரத்தைச் சுற்றிவந்து வயிற்றைத் தடவிப்பார்த் தல் எனல், ஆத்ம சொரூப ஞானத்தைப்பற்றிய நல்ல சாஸ் திரத்தை ஸ்தூலமாகச் சிரவணஞ்செய்து உடனே மேலான சுவானுபவ இலட்சணம் விளங்கவில்லை என்பதாம்.

## வெளுத்ததெல்லாம் பாலாகுமா.

### வெண்பா.

வெளுத்ததெலாம் பாலாமோ மெய்ப்படுசாத் தீக
வுளத்தினையல் லாற்றமசி னேடு—களித்த
விராசதமாம் பண்பொன் றிதயங்கண் ஞான
சொரூபமதா யாமோ சுகம் (136)

(1) வெளுத்ததெலாம் பாலாமோ, எனல், மெய்ப்படு - உண்மையைத் தருகிற, சாத்தீக உளத்தினை யல்லால் - சத்துவ மனத்தைத் தவிர, தமசினேடு - தாமத குணமும், களித்த - மதர்த்த, இராசதமாம் - இரஜசு என்கிற, பண்பு - குணமும், ஒன்று - பொருந்திய, இதயங்கள் - மனதுகள், ஞான சொரூபம் (அது) ஆய் - ஞான சொரூபமாகி, (3) ஆமோ - விளங்குமா என்பதாம், (2) சுகம் - ஆனந்தமாய். (அது, சொல் லுருபு).

வெளுத்ததெலாம் பாலாமோ எனல், உண்மையைத் தருகிற சத்துவ மனத்தைத் தவிரத் தாமத குணமும் மதர்த்த இரஜசு என்கிற குணமும் பொருந்திய மனதுகள் ஞான சொரூபமாகி ஆனந்தமாய் விளங்குமா என்பதாம்.

(இதுவுமது.)

தனிஞான சம்பந்த சாத்தீக மன்றிக்
கனயோகம் பத்தி கருமத்—தினையுற்ற
சத்துவமா காசிவத்தைச் சார்வான் வெளுத்ததெலாம்
ஒத்திடுபா லாமோ வுரை (137)

(3) தனி - ஒப்பற்ற, ஞான சம்பந்த, சாத்தீகம் அன்றி - சத்துவ விர்த்தியல்லாமல், கன - பாரமான, யோகம்பத்தி,

கருமத்தினை - கர்மங்களை, உற்ற - சம்பந்தித்த, சத்துவம் - சத்துவ விர்த்திகள், ஆகா - உபயோகப்படா என்பதாம், (2) சிவத்தைச் சார்வான் - மங்கள சொரூபமாகிய பிரமத்தில் ஐக்கியமாக, (1) வெளுத்ததெலாம், ஒத்திடு - பொருத்தமான, பால் ஆமோ, உரை - சொல் எனல்.

வெளுத்ததெலாம் பொருத்தமான பாலாமோ சொல் எனல், மங்கள சொரூபமாகிய பிரமத்தில் ஐக்கியமாக ஒப்பற்ற ஞான சம்பந்த சத்துவ விர்த்தியல்லாமல் பாரமான யோகம் பத்தி கர்மங்களைச் சம்பந்தித்த சத்துவ விர்த்திகள் உபயோகப்படா என்பதாம்.

## கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்.

### கலிவிருத்தம்.

கேணித் தேரைநாட் டின்வளங் கேட்பதென்
னீணி விர்த்தி நெறியி னுட் பார்வையோன்
வீ ணுறப்பிர விர்த்தி வெளிச்செயல்
பேண லென்கொல் பெரிது மொழித்தலே (138)

கேணித் தேரை - கிணற்றுத் தவளை, நாட்டின் வளம் கேட்பது, என் - எதற்கு எனல், நீள் - மேலான, நிவிர்த்தி, நெறியின் - மார்க்கத்தில், உள் பார்வையோன் - உள் நோக்கமுடையவன், வீண் உற - வீணாக, பிரவிர்த்தி - பிரவிர்த்தி மார்க்கத்தில், வெளிச்செயல் - வெளிக்காரியங்களை, பேணல் - கவனித்தல், என் - எதற்கு, (கொல்), பெரிதும் - நன்றாக, ஒழித்தல் - அதை விடக்கடவன் என்பதாம், (ஏ, அசை). (கொல், அசை).

கிணற்றுத் தவளை நாட்டின் வளங்கேட்பதெதற்கு எனல், மேலான நிவிர்த்தி மார்க்கத்தில் உள் நோக்கமுடையவன் வீணுகப் பிரவிர்த்தி மார்க்கத்தில் வெளிக்காரியங்களைக் கவனித்தல் எதற்கு, நன்ருக அதை விடக்கடவன் என்பதாம்.

## அறிந்தாலும் ஐந்துபேரைக் கேட்கவேண்டும்.

### வெண்பா.

அறிந்தாலு மைவரைக்கேட் பார்குருவின் வாக்கா
லிறங்கா வுணர்வுற்ரு ரேனுஞ்—செறிந்தே
சிரவணஞ்சிந் தித்த றெளிதல் சமாதி
வருசகச மும்பழகு வார் (139)

அறிந்தாலும், ஐவரை - ஐந்துபேரை, கேட்பார், எனல், குருவின் வாக்கால், இறங்கா - குறையாத, உணர்வு உற்ருரேனும் - ஞானத்தைப் பெற்ருராளுலும், செறிந்து - நன்ருக, (ஏ), சிரவணம், சிந்தித்தல் - மனனம், தெளிதல் - நிதித்தியாசனம், சமாதி, வரு - கிருத கிருத்தியத் தன்மையுண்டாகும், சகசமும் - சாட்சாத்காரமும், பழகுவார், என்பதாம். (கிருத கிருத்தியம் - செய்யவேண்டியதைச் செய்து முடித்தல்). (ஏ, அசை).

அறிந்தாலும் ஐந்துபேரைக் கேட்பார் எனல், குருவின் வாக்கால் குறையாத ஞானத்தைப் பெற்ருராளுலும் நன்ருகச் சிரவணம், மனனம், நிதித்தியாசனம், சமாதி, கிருத கிருத்தியத் தன்மையுண்டாகும் சாட்சாத்காரமும், பழகுவார் என்பதாம்.

## ஒரு புத்திரன் சந்ததி யல்ல ஒரு மரம் தோப்பல்ல

ஒருமகவு சந்ததியன் றோர்மரந்தோப் பாகா
திருதயத்து ளோர்கா லெழுந்த—பாவிருத்திப்
போதந் துரியானு பூதியோ சற்குணமொன்
றோதுஞ்சாத் திகமன தோ (140)

ஒருமகவு - ஒருகுழந்தை, சந்ததி, அன்று - அல்ல, ஓர் மரம் - ஒருவிருட்சம், தோப்பு, ஆகாது - அல்ல, எனல், இருதயத்துள் - மனதில், ஓர்கால் - ஒருதரம், எழுந்த - உண்டாகிய, பார - மேலான, விருத்திப்போதம் - விருத்தி ஞானமே, துரிய அனுபூதியோ - துரிய அனுபவமாகுமா, சற்குணம் ஒன்று - ஒரு நற்குணமே, ஓதும் - சொல்லப்படுகிற, சாத்தீக மனதோ - சத்துவமனமாகுமா, என்பதாம்.

ஒரு குழந்தை சந்ததியல்ல ஒரு விருட்சம் தோப்பு அல்ல எனல், மனதில் ஒருதரம் உண்டாகிய மேலான விருத்தி ஞானமே துரிய அனுபவமாகுமா, ஒரு நற்குணமே சொல்லப்படுகிற சத்துவமனமாகுமா என்பதாம்.

## சருகரிக்க நேரமல்லாமல் குளிர்காய நேரமில்லை

சருகரித்தற் கல்லாற் றழல்காயப் போதின்
றருமறைநூற் கேள்வி யனைத்து—மிருதயத்துள்
வாய்ந்துமப ரோட்சமாம் வண்ண மனனமதை
யேய்ந்திடவுட் பற்றுவிடா தே (141)

சருகு அரித்தற்கு, அல்லால் - அல்லாமல், தழல் - அக்கினியில், காய - குளிர்காய, போது இன்று - நேரமில்லை, எனல், அருமறை நூற் கேள்வி - அரிய வேதசாஸ்திரக்கேள்வி, அனை

த்தும் - எல்லாம், இருதயத்துள் வாய்ந்தும் - மனதிற் பொரு ந்தப்பெற்றும், அபரோட்சம் ஆம் வண்ணம் - அனுபவமாகும் படி, மனனம் (அது) ஐ - மனனத்தை, ஏய்ந்திட - செய்ய, உட்பற்று - உள்ளத்திலுள்ள இச்சை, விடாது - இடங்கொ டாது, என்பதாம், (ஏ, அசை) (அது, சொல்லுருபு)

சருகரித்தற் கல்லாமல் அக்கினியிற் குளிர்காய நேர மில்லை எனல், அரிய வேதசாஸ்திரக் கேள்வியெல்லாம் மனதிற் பொருந்தப்பெற்றும் அனுபவமாகும்படி மனனத்தைச் செய்ய உள்ளத்திலுள்ள இச்சை இடங்கொடாது என்பதாம்,

## மழைமுகங் காணுதபயிர் தாய்முகங் காணுத குழந்தை

மழைமுகங்கா ணுப்பயிர்தாய் மாமுகங்கா ணுச்சேய்
ஒழிவில் பரானுபவ யூக—மொழிகேளா
ஞானப்பி யாசியுள நண்பிரஞை பூரணநோக்
காணுக் குருதொடர்பில் லான் (142)

மழைமுகங்காணுப்பயிர், தாய் - தாயின், மாமுகம் - சிற ந்தமுகத்தை, காணுச்சேய் - காணுத குழந்தை, எனல், ஒழிவு இல் - ஒழியாத, பர அனுபவயூக மொழிகேளா - பிரமானு பவ யுக்திவார்த்தைகள் கேளாத, ஞான அப்பியாசி, உளம் நண் பிரஞை - மனதிற்பொருந்திய உணர்வு, பூரண நோக்கு ஆணு - பூரண திருஷ்டி நீங்காத, குரு தொடர்பு - குருவின் சம்பந்தம், இலான் - இல்லாதவன், என்பதாம்.

மழைமுகங் காணுப்பயிர்; தாயின் சிறந்த முகத்தைக் காணுத குழந்தை எனல், ஒழியாத பிரமானுபவ யுக்திவார்த் தைகள் கேளாத ஞான அப்பியாசி மனதிற்பொருந்திய உண

ர்வு; பூரண திருஷ்டி நீங்காத குருவின் சம்பந்தமில்லாதவன் என்பதாம்.

## கோபமில்லாத துரை சம்பளமில்லாத சேவகன்.

மேவுசின மற்றதுரை வேதனமில் சேவகர்செய்
யேவல் விராகவலி யின்றியவீட்—டாவலுளோ
னூக விவேகநெறி யொன்று மனாதிகளா
லாகும் விசாரவுணர் வாம் (143)

மேவுசினம் - அடையத்தக்க கோபம், அற்ற துரை - இல்லாத அதிகாரி, வேதனம் - சம்பளம், இல் - இல்லாத, சேவகர், செய் ஏவல் - செய்யும் ஏவல்வேலை, எனல், விராக வலி - வைராக்கிய திடம், இன்றிய - இல்லாத, வீட்டு ஆவல் உளோன் - மோட்சஇச்சை யுள்ளவன், ஊகவிவேகநெறி - யூகவிவேக மார்க்கம், ஒன்று - பொருந்தாத, மன ஆதிகளால் - மன முதலானவைகளால், ஆகும், விசாரவுணர்வு ஆம் - விசார ஞானம், என்பதாம்.

அடையத்தக்க கோபமில்லாத அதிகாரி; சம்பளமில்லாத சேவகர் செய்யும்வேலை எனல், வைராக்கிய திடமில்லாத மோட்சஇச்சையுள்ளவன்; யூகவிவேகமார்க்கம் பொருந்தாத மன முதலானவைகளாலாகும் விசாரஞானம் என்பதாம்.

## அறுக்கமாட்டாதவன் இடுப்பில் அறுபத்து நான்கு அரிவாள். வெறுங்கை முழம் போடுமா.

அறுக்கும்வன் மில்லாற் கறுபானுன் கிர்வாள்
பறக்கும் விசாரமிலான் பன்னூற்—பொறுப்ப
னுறுங்கொல் சிரவணமில் லோன்மனனந் தன்னை
வெறுங்கை முழமிடுமோ மேல் (144)

அறுக்கும், வன்பு இல்லாற்கு - வல்லமை யில்லாதவனிடத்தில், அறுபான் நான்கு - அறுபத்து நான்கு, ஈர்வான் - அரிவாள், எனல், பறக்கும் - வியாபிக்கும், விசாரமிலான் - ஆராய்ச்சி அற்றவன், பல்நூல் - பலசாஸ்திரங்களை, பொறுப்பன் - சுமப்பான், என்பதாம், (5) உறுங்கொல் - செய்வானு, என்பதாம், (4) சிரவண மில்லோன், மனனந்தன்னை - மனனத்தை, (1) வெறுங்கை, (3) முழம் இடுமோ - முழம்போடுமா, எனல், (2) மேல் - மேலு மேலும்.

அறுக்கும் வல்லமை யில்லாதவனிடத்தில் அறுபத்து நான்கு அரிவாள் எனல், வியாபிக்கும் ஆராய்ச்சி அற்றவன் பல சாஸ்திரங்களைச் சுமப்பான் என்பதாம். வெறுங்கை மேலு மேலும் முழம்போடுமா எனல், சிரவணமில்லோன் மனனத்தைச் செய்வானு என்பதாம்.

## எய்தவனிருக்க அம்பை நோவது.

### கலிவிருத்தம்.

கைதவ வவித்தையாங் கார ணங்கெடுத்
துய்தரா துடம்புட னுலகை யூழினை
வைதகோ வீணிலே வருந்து மாறுதா
னெய்தவ னிருக்கமற் றேவை நோவதே (145)

(2) கைதவ - வஞ்சகமான, அவித்தையாம் - அஞ்ஞானமாகிய, காரணங் கெடுத்து - மூலத்தை ஒழித்து, உய்தராது - உச்சீவிக்காமல், (4) உடம்பு உடன் - சரீரத்தையும், உலகை - உலகத்தையும், ஊழினை - விதியையும், வைது, (3) அகோ - ஆச்சரியம், (5) வீணில் - வீணுக, (ஏ), வருந்தும், ஆறு -

விதம் எனலாம், (தான்), (1) எய்தவனிருக்க, (மற்று), ஏவை - அம்பை, நோவது, என்பது, (ஏ அசை). (ஏ, அசை). (தான் - சாரியை). (மற்று, அசை).

எய்தவனிருக்க அம்பை நோவது என்பது, வஞ்சகமான அஞ்ஞானமாகிய மூலத்தை ஒழித்து உச்சீவிக்காமல் ஆச்சரியம்! சரீரத்தையும் உலகத்தையும் விதியையும் வைது வீணாக வருந்தும் விதம் எனலாம்.

## சிரித்தாயோ சீரைக் கெடுத்தாயோ.

### வெண்பா.

சிரித்தாயோ சீரைச் சிதைத்தாயோ வென்னல்
பரப்பாம் விடயமெதிர்ப் பட்டா—லுரத்தவற்றின்
மெய்த்ததனை யன்றி விசேடமாக் கண்டோனே
யுத்தமஞா னத்தையொழித் தோன் (146)

சிரித்தாயோ சீரைச் சிதைத்தாயோ என்னல், பரப்பு ஆம் - பலவிதமான, விடயம் - விஷயங்கள், எதிர்ப்பட்டால், உரத்து - மனதால், அவற்றின் - அவைகளில், மெய்த்த - உண்மைப் பொருளான, தனை அன்றி - ஆத்மாவைத் தவிர, விசேடமா - வேறே விசேஷமாக, கண்டோன் - பார்த்தவன், (ஏ), உத்தம ஞானத்தை, ஒழித்தோன் - கெடுத்தவன் என்பதாம். (ஏ, அசை).

சிரித்தாயோ சீரைச் சிதைத்தாயோ என்னல், பலவிதமான விஷயங்கள் எதிர்ப்பட்டால் மனதால் அவைகளில் உண்மைப் பொருளான ஆத்மாவைத் தவிர வேறே விசேஷமாகப் பார்த்தவன் உத்தம ஞானத்தைக் கெடுத்தவன் என்பதாம்.

## கல்யாணச் சந்தடியில் தாலிகட்ட மறந்தது.

### கலி நிலைத் துறை.

*தணிவில் சத்தியோ முத்திசா தனநர தனுவை*
*யணவி யும்பல வினையுநூற் பயில்வுமுற் றகத்தே*
*யிணைப ரானுசந் தானமா நிதித்தியற் றிழிவார்*
*மணமு ழக்கின்மாங் கல்லிய தாரண மறந்தார்* (147)

(2) தணிவு இல் - குறைவற்ற, சத்தியோ முத்தி சாதன, நர தனுவை - மனித சரீரத்தை, அணவியும் - அடைந்தும், பல வினையும் - பல கர்மங்களும், நூல் பயில்வும் - சாஸ்திரப் பழக்கமும், உற்று - பொருந்தி, அகத்து - மனதில், (ஏ), இணை - இசைகின்ற, பரஅனுசந்தானம் ஆம் - பிரம அப்பி யாசமாகிய, நிதித்தி - நிதித்தியாசனம், அற்று - அகன்று, இழிவார் - இழிவையுறுவார் என்பதாம், (1) மண முழக்கில் - கல்யாணச் சந்தடியில், மாங்கல்லியதாரணம் - தாலிகட்டு தலை, மறந்தார், எனல். (ஏ, அசை). (சத்தியோ முத்தி - இச்சரீ ரத்திலேயே முத்தி யடைதல்). (கிரம முத்தி - பிரமலோகம் போய் முத்தி யடைதல்).

கல்யாணச் சந்தடியில் தாலி கட்டுதலை மறந்தார் எனல், குறைவற்ற சத்தியோ முத்தி சாதன மனித சரீரத்தை யடைந்தும் பல கர்மங்களும் சாஸ்திரப் பழக்கமும் பொருந்தி மனதில் இசைகின்ற பிரம அப்பியாசமாகிய நிதித்தியாசனம் அகன்று இழிவை யுறுவார் என்பதாம்.

## அவலை நினைத்துக்கொண்டு உரலையிடித்தல்.

### வெண்பா.

*அவலை நினைத்துக்கொண் டாங்குரலைத் தானே*
*தவவிடித்த லுண்மையுப சாந்தி—யிவணுறுமென்*
*றுன்னிக் கலைமார்க்கத் தோவா துழந்திடுத*
*றன்னைக் குறிக்கொள்ளார் தாம்* (148)

(1) அவலை நினைத்துக்கொண்டு, (ஆங்கு), உரலை (தான், ஏ), தவ-மிக, இடித்தல், என்பது, (3) உண்மை - சத்தியமான, உபசாந்தி - உபசாந்தநிலை, இவண் - இதில், உறும் என்று - கிடைக்குமென, உன்னி - நினைத்து, கலைமார்க்கத்து - சாஸ்திர ஆராய்ச்சியில், ஓவாது - ஒழிவின்றி, உழந்திடுதல் - வருந்துதல், எனலாம். (2) தன்னை-ஆத்மாவை, குறிக்கொள்ளார் - கவனியாதவர், (தாம்), (ஆங்கு, அசை), (தான், சாரியை), (ஏ, அசை), (தாம், சாரியை).

அவலை நினைத்துக்கொண்டு உரலை மிகஇடித்தல் என்பது, ஆத்மாவைக் கவனியாதவர் சத்தியமான உபசாந்தநிலை இதில் கிடைக்குமென நினைத்துச் சாஸ்திர ஆராய்ச்சியில் ஒழிவின்றி வருந்துதல் எனலாம்.

## மாற்றைக் குறைத்தான் தட்டான் மதிப்பைக் கெடுத்தான் செட்டி.

### அறுசீர்விருத்தம்.

*மாற்றைக் குறைத்தான் றட்டான், மதிப்பை*
*யழித்தான் செட்டி*

யூற்றத் தொருவற் கவித்தை, யொழிவா
மெனினு மையந்
தோற்றப் பிரமக் குறிக, டொலையாய்
விபரீ தத்தாற்
பாற்றற் சகத்தோ டுடம்பின், பார்வை
யொழியா வன்றே

(2) மாற்றைக்குறைத்தான், (1) தட்டான், (4) ம
அழித்தான்-கெடுத்தான், எனல், (3) செட்டி, (5) உள
திடமுடைய, ஒருவற்கு - ஒருவனுக்கு, அவித்தை -
னம், ஒழிவாம் எனினும் - கெடும் ஆயினும், ஐயம் தே
பின்னும் சந்தேகமுண்டாக, பிரமக்குறிகள் - பிரமத்தி
க்ஷணங்கள், தொலையாய் - விளங்காமற்போய், விபரீ
விபரீதமுண்டாக, பாற்றல் - கெடுதலைச்செய்யும், சக
உலகத்துடன், உடம்பின், பார்வை-சத்தியபுத்தியும்,
நீங்கா, என்பதாம், (அன்று, ஏ, அசைகள்).

தட்டான் மாற்றைக்குறைத்தான் செட்டி ம
கெடுத்தான் எனல், திடமுடைய ஒருவனுக்கு அவி
கெடுமாயினும் பின்னும் சந்தேகமுண்டாகப் பிரமத்
க்ஷணங்கள் விளங்காமற்போய், விபரீதமுண்டாகக் கெ
செய்யும் உலகத்துடன் உடம்பின் சத்திய புத்தியு
என்பதாம்.

## குபேரன் பட்டணத்திலும் விறகுத்தலையனிருப

### கலித்துறை.

தனத னூரினு மிந்தனச் சென்னியன் றூனுளன் கா
வினைய றுங்குரு வின்மூன ஞானவி சாரமேய
மனித ருள்ளூம வாக்கரு மத்தின்வ சத்தமுந்து
மினிதில் பூருவ வாசனை யோனுமி யங்குமன்றே

தனதன் ஊரினும் - குபேரன் பட்டணத்திலும், இந்த னச்சென்னியன் - விறகுத்தலையன், (தான்) உளன் - இருப் பான், எனல், (காண்), வினை அறும் - பந்தகாரண கர்மங்கள ற்ற, குருவின், முனம் - சந்நிதியில், ஞான விசாரம், மேய - செய்யப்பெற்ற, மனிதருள்ளும், அவாக்கருமத்தின் - இச்சை கர்மங்களின், வசத்து அழுந்தும் - வசமாய் அழுந்தியிருக்கிற, இனிது இல் - நன்மையற்ற, பூருவ வாசனையோனும், இயங் கும் - இருப்பான் என்பதாம், (அன்று, ஏ, அசைகள்). (தான், சாரியை). (காண், முன்னிலையசை).

குபேரன் பட்டணத்திலும் விறகுத்தலையனிருப்பான் எனல், பந்த காரண கர்மங்களற்ற குருவின் சந்நிதியில் ஞான விசாரஞ் செய்யப்பெற்ற மனிதருள்ளும் இச்சை கர்மங்களின் வசமாய் அழுந்தியிருக்கிற நன்மையற்ற பூருவ வாசனையோனு மிருப்பான் என்பதாம்.

## ஆனைக்கும் அடி சறுக்கும்.

### வஞ்சித்துறை.

ஆனைக்கு மடிசறுக்கு
ஞானத்தை நனிமுயற்சிப்
போனுக்கு முணர்வுசற்று
மானுற்றும் வசமிழுக்கா (151)

ஆனைக்கும் - யானைக்கும், அடி - கால், சறுக்கும் - வழு க்கும் எனல், ஞானத்தை - ஞானப்பியாசத்தில், நனிமுயற் சிப்போனுக்கும் - நன்றாக முயற்சிப்பவனுக்கும், உணர்வு - அறிவு, சற்று - சிறிது, மானுற்றும் - தவறி மயங்கினும், வசம் - தன் வசத்தினின்றும், இழுக்கா - மாறாது என்பதாம்.

யானைக்கும் கால் வழுக்கும் எனல், ஞானாப்பியாசத்தில் நன்றாக முயற்சி செய்பவனுக்கும் அறிவு சிறிது தவறி மயங்கினும் தன் வசத்தினின்றும் மாறாது என்பதாம்.

## நெய்பவனுக்குக் குரங்குக்குட்டி எதற்கு.

### வெண்பா.

கனிவுறநெய் வார்க்கேன் கவிப்பறழ்தா னான்மாத்
தனையொருமை யாலென்றுந் தம்முண்—மனனம்
புரிபவர்க் காங்குப் பொருந்துவதோ சற்றுங்
கருமசங் கற்பக் கலப்பு (152)

(1) கனிவுற - திருத்தமாக, நெய்வார்க்கு, (3) ஏன் - எதற்கு எனல், (2) கவிப்பறழ் - குரங்குக்குட்டி, (தான்), (5) ஆன்மாத்தனை - ஆத்மாவை, (7) ஒருமையால் - ஏகாக்கிரமாக, (4) என்றும் - எப்போதும், (6) தம் உள் - தமதுள்ளத்தில், (8) மனனம், புரிபவர்க்கு-செய்வோர்க்கு, (ஆங்கு) (11) பொருந்துவதோ - பொருத்தமாகுமா என்பதாம், (10) சற்றும் - சிறிதும், (9) கரும சங்கற்பக் கலப்பு. (தான், சாரியை), (ஆங்கு, அசை).

திருத்தமாக நெய்வார்க்குக் குரங்குக்குட்டி எதற்கு எனல், எப்போதும் ஆத்மாவைத் தமதுள்ளத்தில் ஏகாக்கிரமாக மனனஞ் செய்வோர்க்குக் கரும சங்கற்பக் கலப்புச் சிற்றும் பொருத்தமாகுமா என்பதாம்.

## உண்பாரைப் பார்த்திருந்தாலும் உழுவாரைப் பார்த்திருக்கலாமா.

### அறுசீர் விருத்தம்.

நண்பார் பிரம வனுபூதி
நண்ணும் பராஞா னியர்தம்மைக்

கண்பார்த் திருந்தும் வாளாநாள்
கழிப்பா ரெனினுஞ் சாதகரைத்
திண்பா ரிடைக்கண் டுடன்முயற்சி
செய்யா திருப்பார் மனிதரலர்
உண்பார் களைப்பார்த் திருந்திடினு
முழுவார் தமைப்பார்த் திருப்பர்களோ (153)

(2) நண்பு-அன்பு, ஆர்-பொருந்திய, பிரம அநுபூதி-பிரமாநுபவம், நண்ணும்-அடைந்த, பரஞானியர் தம்மை-மேலான ஞானிகளை, கண்-கண்ணால் பார்த்திருந்தும், வாளா - வீணாக, நாள் கழிப்பார் எனினும், சாதகரை - அப்பியாசிகளை, திண் பார் இடை - திடமான பூமியினிடத்து, கண்டு, உடன் - உடனே, முயற்சி செய்யாதிருப்பார் மனிதர், அலர் - ஆகார் என்பதாம், (1) உண்பார்களைப் பார்த்து, இருந்திடினும் - இருந்தாலும், உழுவார்தமை - உழுபவர்களை, பார்த்து, இருப்பர்களோ - இருப்பார்களா எனல்.

உண்பார்களைப் பார்த்திருந்தாலும் உழுபவர்களைப் பார்த்திருப்பார்களா எனல், அன்பு பொருந்திய பிரமாநுபவமடைந்த மேலான ஞானிகளைக் கண்ணால் பார்த்திருந்தும் வீணாக நாள் கழிப்பாரெனினும் அப்பியாசிகளைத் திடமான பூமியினிடத்துக்கண்டு உடனே முயற்சி செய்யாதிருப்பார் மனிதராகார் என்பதாம்.

**கண்டது கற்கப் பண்டித னுவான்.**

வஞ்சித்துறை.

கண்டது கற்கப்
பண்டித னுவான்
விண்டவி சாரித்
தண்டுயர் வீடே (154)

(1) கண்டது கற்கப் பண்டிதனாவான், எனல், விண்ட - வேறாக எதிர்ப்பட்டவைகளை, விசாரித்து - ஆராய்ச்சி செய்து உண்மையைக்கண்டு, (3) அண்டு - அடை என்பதாம், (2) உயர் வீடு - மேலான மோட்சத்தை, (ஏ, அசை).

கண்டது கற்கப் பண்டிதனாவான் எனல், வேறாக எதிர்ப்பட்டவைகளை ஆராய்ச்சி செய்து உண்மையைக்கண்டு மேலான மோட்சத்தை அடை என்பதாம்.

மெல்ல மெல்லப் பாயும் தண்ணீர்
கல்லையும் ஊடுருவிச் செல்லும்.

அறுசீர் விருத்தம்.

மெல்லெனப் பாயு நீர்தான் கல்லையு முருவிச் செல்லும்
வில்லொழி தூல நோக்கான் மேலுமே லும்வி னைவல்
புல்விடா தமைந்து சூக்க புந்தியாற் செயும்வி சாரம்
வல்லதா மாயை தன்னை மாய்த்துமேல் வயங்கு மன்றே (155)

மெல்லெனப் பாயும் நீர், (தான்), கல்லையும் உருவிச் செல்லும், எனல், வில் ஒழி - பிரகாசமற்ற, தூலநோக்கால் - ஸ்தூல திருஷ்டியால், மேலுமேலும், வினவல் புல்விடாது - கேட்டலைப் பொருந்தாமல், அமைந்து - அடங்கி, சூக்கபுந்தியால் - சூட்சும புத்தியினால், செயும் - செய்யும், விசாரம், வல்லது ஆம் - வலிமையுடையதாகிய, மாயை தனை - மாயையையும், மாய்த்து, மேல் வயங்கும் - மேலான ஆத்மாவை அறிவித்து விளங்கும் என்பதாம், (அன்று, ஏ, அசைகள்). (தான், சாரியை).

மெல்லெனப் பாயும் நீர் கல்லையு முருவிச் செல்லும் எனல், பிரகாசமற்ற ஸ்தூல திருஷ்டியால் மேலும்மேலும் கேட்டலைப் பொருந்தாமல் அடங்கிச் சூட்சும புத்தியினல் செய்யும் விசாரம் வலிமையுடையதாகி மாயையையும் மாய்த்து மேலான ஆத்மாவை அறிவித்து விளங்கும் என்பதாம்.

## அஞ்சும் மூன்றும் உண்டானல் அறியாப் பெண்ணும் கறி சமைக்கும்.

அஞ்சு மூன்று முளவாயி னறியாப் பெண்ணுங் கறிசமைக்கும்
பஞ்ச கோச விவேகமொடு பகருஞ் சற்சிற் சுகவுணர்வுஞ்
செஞ்செ வேதேர் பரோட்சமதிச் சீவன் றனும் யுத்திகொடு
நெஞ்சு ளான்ம விசாரமதை நிறைப்ப னதுவே
நெறியன்றே (156)

அஞ்சும் மூன்றும், உள ஆயின் - உண்டானல், அறியாப் பெண்ணும் கறி சமைக்கும், எனல், பஞ்சகோச விவேகமொடு - ஐந்து மறைப்பின் ஆராய்ச்சியும், பகரும் - சொல்லப்படுகிற, சத்சித்சுக - சத்துச் சித்து ஆனந்தத்தின், உணர்வும் - தேர்ச்சியும், செஞ்செவே - மிகவும் நன்ருக, தேர் - பெற்றுத் தெளிந்த, பரோட்சமதி - கேள்விஞானமுடைய, சீ வ ன் த ா னு ம் - சீவனும், யுத்திகொடு - யூகங்கொண்டு, நெஞ்சு உள் - மனதில், ஆன்ம விசாரம் அதை - ஆத்ம விசாரத்தை, நிறைப்பன் - பூரணமாக்குவன், அதுவே, நெறி அன்றோ - மார்க்கமல்லவா என்பதாம். (செஞ்செவே - செஞ்செவ்வே என்பதன் இடைக்குறை).

அஞ்சும் மூன்றும் உண்டானல் அறியாப் பெண்ணுங் கறி சமைக்கும் எனல், ஐந்து மறைப்பின் ஆராய்ச்சியும்

சொல்லப்படுகிற சத்துச் சித்து ஆனந்தத்தின் தேர்ச்சியும் மிகவும் நன்றுகப் பெற்றுத் தெளிந்த கேள்வி ஞானமுடைய சீவனும் பூகங்கொண்டு மனதில் ஆத்ம விசாரத்தைப் பூரண மாக்குவன் அதுவே மார்க்கமல்லவா என்பதாம்.

## பழம் நழுவிப் பாலில் விழுந்தது.

வஞ்சித்துறை.

பழநழு விப்பால்
விழுதல்வி ரத்தர்
தழுவும்வி சாரத்
துழியுறு மாறே (157)

பழம் நழுவி, பால் - பாலில், விழுதல், என்பது, விரத்தர் - வைராக்கிய புருஷர், தழுவும் - அடையத்தக்க, விசாரத்து உழி - ஆத்ம விசாரணையினிடத்து, உறும் ஆறு - பொருந்தும் விதம் எனலாம். (ஏ, அசை).

பழம் நழுவிப் பாலில் விழுதல் என்பது, வைராக்கிய புருஷர் அடையத்தக்க ஆத்ம விசாரணையினிடத்துப் பொருந்தும் விதம் எனலாம்.

## வைத்தவன் எடுக்கவேண்டும்
## வழி தெரிந்தவன் நடக்கவேண்டும்.

வெண்பா.

வைத்தோ னெடுத்தல் வழிதெரிந் தோனடத்தன்
மைத்தாய்த் தனைமுன் மறந்தவனே—யொத்தே
தனைவிசா ரித்த றரும்புறநோக் கற்றே
னனிதனையுண் ணேக்க னலம் (158)

(1) வைத்தோன் - வைத்தவன், எடுத்தல் - எடுக்கக்கடவன், வழி தெரிந்தோன், நடத்தல் - நடக்கக்கடவன் எனல், (3) மைத்து ஆய் - அஞ்ஞானத்தையுடைய பிராணியாகி, (4) தனை - தன்னை, (2) முன் - அநுதினமே, (5) மறந்தவனை - மறந்த அவனை, ஒத்து - சாதனங்களைப் பெற்று, (ஏ), தனை - தன்னை, விசாரித்தல், தகும் - தகுதியாம், புறநோக்கு - நிவிர்த்தி மார்க்கத்தை யடைந்து பிரபஞ்ச திருஷ்டி, அற்றோன் - ஒடுங்கினவன், நனி - நன்றாக, தனை - தன்னை, உள் நோக்கல் - உள்ளத்தில் ஆராய்தல், நலம் - நல்ல பயனைத்தரும், என்பதாம். (ஏ, அசை). (மைத்து - மையை யுடையது). (மை - கறுப்பு - அஞ்ஞானம்).

வைத்தவன் எடுக்கக் கடவன்; வழி தெரிந்தோன் நடக்கக் கடவன் எனல், அநுதினமே அஞ்ஞானத்தை யுடைய பிராணியாகித் தன்னை மறந்த அவனை சாதனங்களைப் பெற்றுத் தன்னை விசாரித்தல் தகுதியாம்; நிவிர்த்தி மார்க்கத்தை யடைந்து பிரபஞ்ச திருஷ்டி ஒடுங்கினவன் நன்றாகத் தன்னை உள்ளத்தில் ஆராய்தல் நல்ல பயனைத் தரும் என்பதாம்.

### யானை பின்வரும் மணியோசை முன்வரும்.

#### கலிவிருத்தம்.

வார ணம்பின் வருமணி யோசைமுன்
னேரு றுந்தனி நின்மல தத்துவ
பூர ணத்தனு பூதியின் முன்னரே
சேரு நல்விருத் திக்திகழ் ஞானமே (159)

(1) வாரணம் - யானை, பின்வரும், மணியோசைமுன், நேர் உறும் - வரும் எனல், தனி - ஒப்பற்ற, நின்மல - அஞ்

ஞானமற்ற, தத்துவ - அது நீ யென்னும் பதங்களின் உண்மைப் பொருளாகிய, பூரணத்து - பரிபூரண சொரூபத்தின் அனுபூதியின் முன்னரே - அனுபவத்துக்கு முன்பாகவே (3) சேரும் - உண்டாகும் என்பதாம், (2) நல்விருத்தி, திகழ் ஞானம் - நான்கு சாதனங்களுடன் விளங்குகிற நல்விருத்தி ஞானம், (ஏ, அசை).

யானை பின்வரும் மணியோசை முன்வரும் எனல், நூ பற்ற அஞ்ஞானமற்ற அது நீ யென்னும் பதங்களின் உண்மைப் பொருளாகிய பரிபூரண சொரூபத்தின் அனுபவத்துக்கு முன்பாகவே நான்கு சாதனங்களுடன் விளங்குகி நல்ல விருத்தி ஞானம் உண்டாகும் என்பதாம்.

## முன்னே உள்ள காதைவிடப் பின் உண்டான கொம்பு வலிமையானது.

### வெண்பா.

முன்னுளகா திற்பின் முளைத்தவிடா ணம்வலிது
மன்னுயிர்பாற் பண்டு வருகருமந்—தன்னின்
முமுட்சுப் பருவமெழு மொய்ஞான மாயைச்
சிமிழ்ப்பொழித்த லான்வலிய தே (160)

முன் உள - முன்பே யிருக்கிற, காதில் - காதைவிட பின் - பின்பு, முளைத்த, விடாணம் - கொம்பு, வலிது - கெட்டியானது எனல், மன் - நிலைத்த, உயிர்பால் - சீவனிடத்து பண்டு - அநாதியே, வருகருமந்தன்னின் - வந்த அஞ்ஞான கர்மத்தைவிட, முமுட்சுப் பருவம் - முமுட்சுப் பக்குவத்தில் எழு - உண்டாகிற, மொய் - போர் செய்யும், ஞானம் - வி

த்தி ஞானம், மாயைச் சிமிழ்ப்பு - மாயையின் கட்டை, அழி த்தலான் - அழித்தலால், வலியது - வல்லமை யுடையது என்பதாம், (ஏ, அசை).

முன்பே யிருக்கிற காதைவிடப் பின்பு முளைத்த கொம்பு கெட்டியானது எனல், நிலைத்த சிவனிடத்து அநாதியே வந்த அஞ்ஞான கர்மத்தைவிட மூமுட்சுப் பக்குவத்தில் உண்டாகிற போர் செய்யும் விருத்தி ஞானம் மாயையின் கட்டை அழித்தலால் வல்லமை யுடையது என்பதாம். (போர் செய்தல் - அஞ்ஞான மாயைகளை அழித்தல்).

## இழவிற்கு வந்தவரெல்லாம் தாலியறுப்பார்களா.

*கலி நிலைத்துறை.*

மொழியப் பட்டுள பரம்பரை நெறிகளான் முத்தி
கெழுவற் கிச்சகத் தோரவ ரொத்திடக் கிளர்மெய்
விழிபெற் றார்சிவ சுவானுபூ தியைச்சதா விடாரால்
இழவிற் குற்றவர் மங்கல நாண்கழிக் கிலரே (161)

(4) மொழியப்பட்டு உள - சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கிற, பரம்பரை - முன்னுக்கு முன்னான, நெறிகளான் - சாதனங்களாகிய வழிகளில் நடத்தலால், (3) முத்தி, கெழுவற்கு - அடைதற்காக, (2) இச்சகத்தோர் - இவ்வுலகத்தோர், (5) அவர் ஒத்திட - அவர்கள் போல, கிளர் - விளங்குகிற, மெய் விழி பெற்றார் - உண்மையான ஞான திருஷ்டியைப்பெற்ற பெரியோர்கள், சிவ - மங்கள சொரூபமாகிய, சுவ அனுபூதியை - தன்னனுபவத்தை, சதா - எப்போதும், விடார், என்பதாம், (ஆல்), (1) இழவிற்கு உற்றவர் - இழவு

க்கு வந்தவர், மங்கல நாண் - தாலியை, கழிந்திலர் - அறுக்க மாட்டார் எனல், (ஏ, அசை). (ஆல், அசை).

இழவுக்கு வந்தவர் தாலியை அறுக்கமாட்டார் எனல், இவ்வுலகத்தோர் முத்தியடைதற்காகச் சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கிற முன்னுக்கு முன்னான சாதனங்களாகிய வழிகளில் நடத்தலால் அவர்கள் போல விளங்குகிற உண்மையான ஞான திருஷ்டியைப் பெற்ற பெரியோர்கள் மங்கள சொரூபமாகிய தன்னனுபவத்தை எப்போதும் விடார் என்பதாம்.

(இதுவுமது).

பொழிலுற் றென்னையா னுணர்கில னெனுமுயிர்ப் புலன்போய்ப்
பழகிச் சின்மயம் யானெனு முளமலாற் பரோட்ச
விழிபெற் றார்பல ருடலையா னெனுமதி விடாரா
விழவிற் குற்றவர் மங்கல நாணொழிந் திலரே (162)

(2) பொழில் உற்று - பூமியில் மனிதராய்ப் பிறந்தும், (4) என்னை, யான் உணர்கிலன் - நான் அறியேன், எனும், உயிர்ப்புலன் - சீவ அறிவு, போய், (3) பழகி - அப்பியாசத்தால், (5) சின்மயம் - சுத்த ஞான சொரூபம், யான் - நான், எனும் - என்னும் அபரோட்ச ஞானம் பெற்ற, உளம் அலால் - உள்ளம் அல்லாமல், பரோட்ச, விழி - ஞானம், பெற்றார் பலர் - அடைந்தவர் யாவரும், உடலை, யானெனும் மதி - நானென்றபிமானிக்கும் புத்தியை, விடார், எனலாம், (ஆல்), (1) இழவிற்கு - இழவுக்கு, உற்றவர் - வந்தவர் எல்லாம், மங்கலநாண் - தாலியை, ஒழிந்திலர் - அறுக்கமாட்டார் என்பது, (ஏ, அசை). (ஆல், அசை).

க்கு வந்தவரெல்லாம் தாலியை அறுக்கமாட்டார்
பூமியில் மனிதராய்ப் பிறந்தும் அப்பியாசத்தால்
ன் அறியேன் எனும் சீவ அறிவு போய்ச் சுத்த
ரூபம் நான் என்னும் அபரோட்ச ஞானம் பெற்ற
ல்லாமல் பரோட்ச ஞானம் அடைந்தவர் யாவரும்
னென்றபிமானிக்கும் புத்தியை விடார் எனலாம்.

## புத்திமான் பலவான்.

### வஞ்சிவிருத்தம்.

புத்தி மான்பல வானே
வித்தை யோங்கும்வி சாரச்
சித்தி யான்றிட மாயா
சத்தி நீங்கவொர் தானே (163)

மான் பலவான், என்பது, (ஏ), வித்தையோங்கும் -
டமாயடைதற்குக் காரணமாகிய, விசாரச் சித்தி
சாரம் சித்திக்கப் பெற்றவன், திடமாயாசத்தி -
ள்ள மாயையானது, நீங்க - ஒழிய, ஓர் - ஒப்பற்ற,
ஆத்மாவேயாக விளங்குவான், எனலாம். (ஏ, அசை).
மான் பலவான் என்பது, ஞானம் திடமாயடைதற்
மாகிய விசாரம் சித்திக்கப்பெற்றவன் வல்லமையு
யயானது ஒழிய ஒப்பற்ற ஆத்மாவேயாக விளங்கு
லாம்.

## காற்றுள்ளபோதே தூற்றிக்கோள்.

### வெண்பா.

றுளபோ தேதூற்றிக் கொள்வார் கனவிருத்தி
நிகழ்கா லத்தே விசாரஞ்செய்—தோற்றத்தான்
டல மூவவத்தை மூன்றபிமா னங்கெடவே
டுமான் மாவாய் விடல் (164)

காற்று, உள - உள்ள, போதே, தூற்றிக்கொள்வார், என்பது, கனவிருத்தி - நல்ல நினைவு, மேல்திகழ் - மேலாகவிளங்குகிற, காலத்தே - காலத்திலேயே, விசாரஞ்செய் - விசாரணை செய்கிற, தோற்றத்தால் - சிறப்பான உணர்ச்சியால், மூவுடலம் - மூன்றுசரீரம், மூவவத்தை - மூன்று அவஸ்தைகள், மூன்று அபிமானம் கெட, (ஏ), மேவிடும் - பிரமசொரூபமாகும், ஆன்மா ஆய் விடல் - ஆத்மாவாய் விளங்கக்கடவர் எனலாம், (ஏ, அசை).

காற்று உள்ளபோதே தூற்றிக்கொள்வார் என்பது, நல்ல நினைவு மேலாக விளங்குகிற காலத்திலேயே விசாரணைசெய்கிற சிறப்பான உணர்ச்சியால் மூன்று சரீரம் மூன்று அவஸ்தைகள் மூன்று அபிமானம்கெடப் பிரமசொரூபமாகும் ஆத்மாவாய் விளங்கக்கடவர் என்பதாம்.

## வேண்டுமானல் வெண்ணெயை மோத்தைபோல் நூற்றுலாகாதா.

### கலிவிருத்தம்.

தாண்டி மாயைத் தழியை விசாரணைக்
காண்ட மென்னுங் கடைதல் செயினெழுந்
தாண்டு ஞான வசங்க சிவத்துவம்
வேண்டு மாயிடின் வெண்ணெய் திரளுமே (165)

(2) தாண்டி - கடக்கத்தக்க, மாயை - மாயாசத்தியெனும், தழியை - தயிரை, விசாரணைக்காண்டம் - விசாரித்து முடிவு செய்தல், என்னும், கடைதல் செயின் - கடைதலைச்செய்தால், (4) எழுந்து - விளங்கி, (3) ஆண்டு - அவ்விடத்தில், ஞான

அசங்க - ஞானசொரூபமாகி ஒன்ருேடுங் கலப்பில்லாததாகிய, சிவம், (5) துவம் - நீயாகவே பிரகாசிக்கும், எனலாம், (1) வேண்டும் ஆயிடின் - வேண்டுமானல், வெண்ணெய், திரளே - திரண்ட மொத்தையாம் என்பது. (ஏ, அசை).

வேண்டுமானல் வெண்ணெய் திரண்ட மொத்தையாம், என்பது, கடக்கத்தக்க மாயாசத்தியெனும் தயிரை விசாரித்து முடிவுசெய்தல் என்னும் கடைதலேச்செய்தால் அவ்விடத்தில் ஞானசொரூபமாகி ஒன்ருேடுங் கலப்பில்லாததாகிய சிவம் விளங்கி நீயாகவே பிரகாசிக்கும் எனலாம்.

## கணக்கனுக்கு உடற்பிறப்புப் பட்டினி

### கலித்துறை.

இலேகை கற்கு டற்பி றப்பி லங்கனம்
விலாச வான்ம ஞான நல்வி சாரமுண்
ணிலாவு சாத கன்ப சித்த னித்திரை
புலாதி யுங்கு றிக்கொ ளாஞேர் பொற்பினே (166)

(1) இலேகை கற்கு - எழுதுங் கணக்கனுக்கு, உடற்பிறப்பு, இலங்கனம் - பட்டினி என்பது, விலாச - எல்லாமாகி அல்லாததாய்ப்பிரகாசிக்கிற, ஆன்ம - ஆத்மாவின், ஞான - உணர்ச்சிக்குக் காரணமாகிய, நல்விசாரம் - நல்ல ஆராய்ச்சி, உள் - உள்ளத்தில், நிலாவு - விளங்கப்பெற்ற, சாதகன் - அப்பியாசி, (3) பசித்தல் நித்திரை, புலாதியும் - விஷயங்கள் முதலான வற்றையும், குறிக்கொளான்- கவனிக்கமாட்டான் எனலாம், (2) ஓர் - ஒப்பற்ற, பொற்பின் - அழகிய சத்துவகுணத்தாலேற்பட்ட தீவிர பக்குவத்தால் (ஏ, அசை).

எழுதுங்கணக்கனுக்கு உடற்பிறப்புப்பட்டினி என்பது, ஏல்லாமாகி அல்லாததாய்ப்பிரகாசிக்கிற ஆத்மாவின் உணர்ச்சிக்குக் காரணமாகிய நல்ல ஆராய்ச்சி உள்ளத்தில் விளங்கப்பெற்ற அப்பியாசி ஒப்பற்ற அழகிய சத்துவ குணத்தாலேற்பட்ட தீவிர பக்குவத்தால் பசித்தல் நித்திரை விஷயங்கள் முதலானவற்றையும் கவனிக்கமாட்டான் எனலாம்.

## ஊதுகிற சங்கை யூதினல் விடியும்போது விடிகிறது.

### அறுசீர் விருத்தம்.

ஊது சங்க மூதிடத் துதய கால முதயமே
போத நூல்வி சாரநற் பொறிதொ டங்கி னோர்விடா
தாத ரிப்பின் மருண்முடிந் தடைவர் ஞான முக்தியுற்
பாத மீதி டைக்கணெய்ப் பார்பி னுங்க லங்குவார். (167)

(1) ஊதுசங்கம் - ஊதுகிறசங்கை, ஊது இடத்து - ஊதினல், உதயகாலம் - விடிகிறபோது, உதயம் - விடிகிறது, எனல், (ஏ), போதநூல் - ஞானசாஸ்திர, விசார, நற்பொறி - நல்லுணர்ச்சியை, தொடங்கினோர், விடாது, ஆதரிப்பின் - பிரீதியுடன் அனுசரித்துவந்தால், மருள் - பிராந்தி, முடிந்து - நீங்கி, (3) அடைவர், (2) ஞானம் - ஞானத்தை, (4) முத்தி - முத்திபெறுதற்கு, உற்பாதம் - முன்குறியாகிய, ஈது - இவ்விசாரத்தில், இடைக்கண் - இடையில், எய்ப்பார் - இளைத்துப்பின்வாங்கினவர், பினும் - பின்னும், கலங்குவார் - மிகுதியாய்க்கலக்கமடைவார் என்பதாம். (ஏ, அசை).

ஊதுகிற சங்கை ஊதினல் விடிகிறபோது விடிகிறது எனல், ஞானசாஸ்திர விசார நல்லுணர்ச்சியைத் தொடங்கி

விடாது பிரீதியுடன் அனுசரித்துவந்தால் பிராந்தி நீங்கி ஞானத்தையடைவர் முத்திபெறுதற்கு முன்குறியாகிய இவ்விசாரத்தில் இடையில் இளைத்துப்பின் வாங்கினவர் பின்னும் மிகுதியாய்க்கலக்கமடைவார் என்பதாம்.

## குலத்தைக்கெடுத்தது கோடாலிக்காம்பு.

### கலிவிருத்தம்.

நலத்த விருத்திதா னண்ணிய ஞானப்
பலத்தைக் கொடுபிர பஞ்சமெய் யாதி
மலத்தின் முடிவெலா மாய்ந்திடச் செய்யுங்
குலத்தைக் கெடுத்தது கோடரிக் காம்பே (168)

(2) நலத்த - நல்ல, விருத்தி - நினைவு, (தான்) நண்ணிய - பொருந்திய, ஞானப்பலத்தை - ஞானத்தின் வலிமையை, கொடு - கொண்டு, பிரபஞ்சம் - உலகம், மெய் - தேகம், ஆதி- முதலாக, மலத்தின் முடிவு - அஞ்ஞானம் முடிவான, எலாம்- அனைத்தையும், மாய்ந்திடச்செய்யும், எனலாம், (1) குலத்தைக்கெடுத்தது கோடரிக்காம்பு, என்பது, (ஏ, அசை), (தான், சாரியை)

குலத்தைக்கெடுத்தது கோடரிக்காம்பு என்பது, நல்ல நினைவு, பொருந்திய ஞானத்தின் வலிமையைக்கொண்டு உலகம் தேகம் முதலாக அஞ்ஞானம்முடிவான அனைத்தையும் மாய்ந்திடச்செய்யும் எனலாம்.

## அரிசி ஆழாக்கானாலும் அடுப்புக்கட்டி மூன்று வேண்டும்.

### வெண்பா.

சுருதிகுரு வாக்குச் சுவானுபவ மின்றே
யிருதயத்துள் ளாமான்மா வேனுந்—தெரியா
தரிசியா ழாக்கே யடுப்புத் திரளை
வரிசைமூன் றன்றோ மதி (169)

(3) சுருதி - அகண்ட பரிபூரணப்பிரமத்தின் விளக்கத்திற்கு ஏதுவாகிய வேதம், குருவாக்கு - யுக்தி, சுவஅனுபவம் - தனது அனுபவம் மூன்றும், இன்றேல் - இல்லாவிடில், (2) இருதயத்து உள் ஆம் ஆன்மாவேனும் - ஆத்மா இருதயத்துள் இருப்பதானாலும், (4) தெரியாது - விளங்காது, எனலாம், (1) அரிசி ஆழாக்கே, அடுப்புத்திரளைவரிசை - அடுப்புக்கட்டியின் வரிசை, மூன்று, அன்றோ - அல்லவா, மதி - கவனித்துப்பார் என்பது.

அரிசி ஆழாக்கே அடுப்புக்கட்டியின் வரிசை மூன்று அல்லவா கவனித்துப்பார் என்பது, ஆத்மா இருதயத்துள் இருப்பதானாலும் அகண்டபரிபூரணப்பிரமத்தின் விளக்கத்திற்கு ஏதுவாகிய வேதம் யுக்தி தனது அனுபவம் மூன்றும் இல்லாவிடில் விளங்காது எனலாம்.

## பட்ட காலிலேபடும் கெட்டகுடியே கெடும்

### அறுசீர்விருத்தம்.

பட்டகழ லேபடுதல் கெட்டகுல மேகெடுதல்
பண்டு மேவி

விட்டசன்மார்க் கக்குறைவா லின்றுமவா வினைகளிடை
விரத்தி யுண்டாய்த்
தொட்டுமுனஞ் சிறிதொழித்த வஞ்ஞான திகண்முழுதுந்
தொலைந்திந் நாளிற்
கிட்டுமுயர் முத்தியிவ்வா றோர்ந்துமுயல் வாரிகத்துங்
கிளர்வர் மேன்மேல். (170)

(1) பட்ட, கழலே - காலிலே, படுதல், கெட்ட, குல மே - குடியே, கெடுதல், என்பது, பண்டு - முன் சன்மத்தில், மேவி - அடுத்து, விட்ட, சன்மார்க்கக்குறைவால், இன்றும் - இச்சன்மத்திலும், அவாவினைகளிடை - காமியகர்மங்களில், விரத்தியுண்டாய்- வைராக்கியமுண்டாகி, (3) தொட்டு - ஆரம் பித்து, (2) முனம் - முன்பிறப்பில், (4) சிறிது ஒழித்த அஞ் ஞான ஆதிகள் முழுதுந்தொலைந்து, இந்நாளில் - இப்பிறப்பில், (6) கிட்டும், (5) உயர் - மேலான, முத்தி, (7) இவ்வாறு, ஓர் ந்து - அறிந்து, (9) முயல்வார் - முயற்சிசெய்பவர், (8) இகத் தும் - இச்சன்மத்திலும், (11) கிளர்வர் - விளங்குவார், (10) மேல் மேல் - மேலும் மேலும்.

பட்ட காலிலே படுதல் கெட்ட குடியே கெடுதல் என் பது, முன் சன்மத்தில் அடுத்து விட்ட சன்மார்க்கக் குறை வால் இச்சன்மத்திலும் காமிய கர்மங்களில் வைராக்கியமுண் டாகி முன் பிறப்பில் ஆரம்பித்துச்சிறிது ஒழித்த அஞ்ஞான ஆதிகள் முழுதுந் தொலைந்து இப்பிறப்பில் மேலான முத்தி கிட்டும் இவ்வாறு அறிந்து இச்சன்மத்திலும் முயற்சி செய்ப வர் மேலும் மேலும் விளங்குவார் எனலாம்.

### வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்

வஞ்சித்துறை.

நல்லறி வற்கெச்
சொல்லு முணர்ச்சி
வல்லவ னுக்குப்
புல்லுமொர் கட்கம் (171)

(2) நல் அறிவற்கு - நல்ல அறிவுடையவனுக்கு, எச் சொல்லும், உணர்ச்சி - ஞானத்திற்கேதுவாம் எனலாம், (1) வல்லவனுக்குப்புல்லும், ஓர்கட்கம் - ஒருகத்தி என்பது.

வல்லவனுக்குப் புல்லும் ஒரு கத்தி என்பது, நல்ல அறிவுடையவனுக்கு எச்சொல்லும் ஞானத்திற்கேதுவாம் எனலாம்.

### தம்பியுள்ளவன் படைக்கு அஞ்சான்.

கலிவிருத்தம்.

தம்பி யுள்ளவன் றான்படைக் கஞ்சிடான்
விம்ப மாய விருத்திஞா னத்தினை
யிம்ப ருற்றா னெதிருமஞ் ஞானநீ
ரம்பல் வாசனை யாவு மழிப்பனே. (172)

(1) தம்பியுள்ளவன் (தான்), படைக்கு, அஞ்சிடான், எனல், (3) விம்பம் - ஆதாரமான சொரூபஞானம், ஆய — ஆகிவிடும், விருத்தி ஞானத்தினை - விருத்தி ஞானத்தை, (2) இம்பர் - இவ்வுலகில், (4) உற்றான் - உடையவன், எதிரும் — தோற்றுகிற, அஞ்ஞானநீர் - அஞ்ஞானகுணம், அம்பல் —

பழியான, வாசனை - பேதவாசனையாகிய, யாவும், அழிப்பான், என்பதாம் (ஏ, அசை), (தான், சாரியை).

தம்பியுள்ளவன் படைக்கு அஞ்சிடான் எனல், இவ்வுலகில் ஆதாரமான சொரூபஞானம் ஆகிவிடும் விருத்தி ஞானத்தையுடையவன் தோற்றுகிற அஞ்ஞான குணம் பழியான பேதவாசனை யாகிய யாவும் அழிப்பான் என்பதாம்.

## பல துளி பெரு வெள்ளம்.

### வஞ்சித்துறை.

பலதுளி பெருவெள்ளந்
தொலைவறு மனனத்தா
னலமுறு பரஞான
நிலவிடு நிறைவாயே. (173)

(1) பலதுளி பெரு வெள்ளம், எனல், தொலைவு அறு - ஒழியாத, மனனத்தால், நலம் உறு - நன்மையான, பரஞானம் - அபரோக்ஷஞானம், (3) நிலவிடும் - விளங்கும் என்பதாம், (2) நிறைவாய் - பூரணமாய் (ஏ, அசை).

பல துளி பெரு வெள்ளம் எனல், ஒழியாத மனனத்தால் நன்மையான அபரோக்ஷஞானம் பூரணமாய் விளங்கும் என்பதாம்.

## திரித்தமட்டும் பழுதை.

திரித்த மட்டுமே
பிரச்சு வென்றிட
றெரித்த கேள்வியின்
வரைக்கு ஞானமே. (174)

திரித்த மட்டும், (ஏ) இரச்சு - கயிறு, என்றிடல் - எனல், தெரித்த - விளங்கிய, கேள்வியின், வரைக்கும் - அளவு, ஞானம், என்பதாம், (ஏ, அசை), (ஏ, அசை).

திரித்தமட்டும் கயிறு எனல், விளங்கிய கேள்வியின் அளவு ஞானம் என்பதாம்.

## கோட்டினுல் தேள் கோட்டாவிடில் பிள்ளைப்பூச்சி.

### வெண்பா.

கொட்டிற்றேள் கொட்டா விடிற்பிள்ளைப் பூச்சிகொலா
மெட்டிற் சகத்தை விசாரித்துட்—கட்டற்றுத்
தன்னை யறிந்தாற் றனிப்பரமாந் தன்னுணர்வு
மன்னுவிசா ரம்மறிற்சீ வன். (175)

கொட்டில் - கொட்டினுல், தேள், கொட்டாவிடில், பிள்ளைப்பூச்சி, (கொல்) ஆம் - எனல், மெட்டின் - பகிர்முகப் படுத்தலாகிய சுங்கத்தை வாங்குகிற, சகத்தை - உலகத்தை, விசாரித்து, உள் கட்டு அற்று - மனதிலுள்ள பந்தத்தைவிட்டு, தன்னை அறிந்தால், தனி - ஒப்பற்ற, பரம் ஆம் - பிரமமா வான், தன் உணர்வு - தன்னையறிதலில், மன்னு - நிலைத்த, விசாரம், அறில் - இல்லாவிடில், சீவன், என்பதாம், (கொல், அசை).

கொட்டினுல் தேள் கொட்டாவிடில் பிள்ளைப்பூச்சி எனல், பகிர்முகப்படுத்தலாகிய சுங்கத்தை வாங்குகிற உலகத்தை விசாரித்து மனதிலுள்ள பந்தத்தைவிட்டுத் தன்னையறிந்தால் ஒப்பற்ற பிரமமாவான், தன்னையறிதலில் நிலைத்த விசாரம் இல்லாவிடில் சீவன் என்பதாம்.

### கைப்புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமா

கைப்புண் ணறிதற்குக் கண்ணாடி வேண்டுங்கொ
ணைப்பிவ் வுடலுரியூ னாடிமல—வைப்புதிர
மத்தியுரோ மம்வழுநீ ராதிசட மென்றறிதற்
கொத்தொருநூ லும்வேண்டு மோ (176)

கைப்புண் அறிதற்குக் கண்ணாடி, வேண்டுங்கொல் - வேண்டுமா எனல், நைப்பு - துன்பப்படுத்துகிற, இவ்வுடல், உரி - தோல், ஊன் - மாமிசம், நாடி - நரம்பு, மலவைப்பு - மலப்புதையல், உதிரம் - இரத்தம், அத்தி - எலும்பு, உரோமம், வழு - குற்றமான, நீர், ஆதி - முதலாகிய, சடம் என்று அறிதற்கு, ஒத்து - பொருத்தமாக, ஒரு, நூலும் - சாஸ்திரமும், வேண்டுமோ, என்பதாம். (சடம் - அறிவற்றது).

கைப்புண் அறிதற்குக் கண்ணாடி வேண்டுமோ எனல், துன்பப்படுத்துகிற இவ்வுடல், தோல் மாமிசம் நரம்பு மலப்புதையல் இரத்தம் எலும்பு உரோமம் குற்றமான நீர் முதலாகிய சடம் என்று அறிதற்குப் பொருத்தமாக ஒரு சாஸ்திரமும் வேண்டுமோ என்பதாம்.

### நின்று தின்றால் குன்றும் கெடும்.

கலி விருத்தம்.

நின்று தின்றிடிற் குன்று நிகழ்ந்திடா
தொன்றி ஞான வுணர்ச்சியி னாற்றனை
யன்றி யின்றென் றகற்றி னளவற
மன்ற வுள்ளெழும் வாதனை மாயுமால். (177)

நின்று - நிலைத்து, தின்றிடில் - தின்ன ஆரம்பித்தால், குன்றும் - மலையும், நிகழ்ந்திடாது - இராது எனல், ஒன்றி - தீவிரமுற்று, ஞானஉணர்ச்சியினால், தனையன்றி, இன்று - இல்லை, என்று, அகற்றின் - நீக்கினால், அளவு, அற - இல்லாமல், மன்ற - மிக, உள் எழும் - மனதிற்கிளம்புகிற, வாதனை - அனாத்ம வாசனைகள், மாயும்-கெடும் என்பதாம். (ஆல், அசை).

நிலைத்துத் தின்ன ஆரம்பித்தால் மலையும் இராது எனல், தீவிரமுற்று ஞான உணர்ச்சியினால் தன்னையன்றி இல்லை என்று நீக்கினால், அளவு இல்லாமல் மிக மனதிற்கிளம்புகிற அனாத்ம வாசனைகள் கெடும் என்பதாம்.

## நெய்க்குத் தொன்னை ஆதரவு தொன்னைக்கு நெய் ஆதரவு.

அவிக்குத் தொன்னைதொன் னைக்கவி யாதர
வுவக்கு ஞான வுணர்ச்சி பெறப்புவி
புவிக்கண் மாயைப் புதுமை விளங்கிட
நிவக்கு ஞான நிகழ்ச்சி சகாயமே. (178)

அவிக்கு - நெய்க்கு, தொன்னை, தொன்னைக்கு, அவி - நெய், ஆதரவு, எனல், உவக்கும் - மகிழ்ச்சியைத்தரும், ஞான, உணர்ச்சிபெற - அனுபவமடைய, புவி - உலகமும், புவிக்கண் - உலகத்தில், மாயைப்புதுமை - மாயாசத்தியின் ஆச்சரியம், விளங்கிட, நிவக்கும் - மேலாகிய, ஞான, நிகழ்ச்சி - அனுபவமும், சகாயம், என்பதாம். (ஏ, அசை).

நெய்க்குத் தொன்னை, தொன்னைக்கு நெய் ஆதரவு எனல், மகிழ்ச்சியைத்தரும் ஞான அனுபவமடைய உலகமும், உல

ந்தில் மாயாசத்தியின் ஆச்சரியம் விளங்கிட மேலாகிய ஞான னுபவமும் சகாயம் என்பதாம்.

## பாசனம் சிறிதானுலும் ஆசனம் பெரிது வேண்டும்.

### வெண்பா.

உண்டி சிறிதேனு முண்கலம்வேண் டும்பெரிது
கொண்ட விதயக் குகையிடத்தே—கண்டுணர்வா
மென்றுலு மான்ம வியல்பைவிசா ரித்துலகி
னின்றுய்த லன்றோ நெறி. (179)

(1) உண்டி - உணவு, சிறிதேனும் - சிறிதானுலும், உண் ம் - உண்ணும் பாத்திரம், (3) வேண்டும், எனல், (2) பெ ு - பெரிதாக, (4) கொண்ட - தனதாகக்கொண்ட, இதய - ருதயமாகிய, குகையிடத்தே, (6) கண்டு - அறிந்து, உணர்வு ம - அனுபவமாம், என்றுலும், (5) ஆன்ம இயல்பை - ஆத் வின் இலக்ஷணத்தை, (8) விசாரித்து, (7) உலகில் நின்று, ஆய்தல் - ஆராய்தல், (11) அன்றோ - அல்லவா என்பதாம், )) நெறி - மார்க்கம்.

உணவு சிறிதானுலும் உண்ணும் பாத்திரம் பெரிதாக ண்டும் எனல். தனதாகக் கொண்ட இருதயமாகிய குகை த்தே ஆத்மாவின் இலக்ஷணத்தை அறிந்து அனுபவமாம் ன்றுலும் உலகில் நின்று விசாரித்து ஆராய்தல் மார்க்கம் ல்லவா என்பதாம்.

## எள்ளுக்காயும்போது எலிப்புழக்கையும் காயும்.

எள்ளுலருங்காலை யெலியெச்ச முங்காயுந்
தள்ளருமான் மாவாந் தனைக்குருமுன்—றெள்ள
விசாரிக்கும் போதுமன விட்சேப முமாங்
குசாவப் படும்வேறென் றோ. (180)

எள், உலருங்காலை - காயும்போது, எலி,
புழுக்கையும், காயும், எனல், தள்ளரும் - அன்
யாத, ஆன்மாவாம், தனை - தன்னை, குரு, முன்
தெள்ள - தெளிவாக, விசாரிக்கும்போது, மன
மனத்தோற்றங்களும், (ஆங்கு), உசாவப்படும் -
படும் ஏனெனில், வேறு ஒன்றோ - அவைகள் ஆ
வேறு ஒரு வஸ்துவா என்பதாம். (ஆங்கு, அவை

எள்ளுக்காயும்போது எலிப்புழுக்கையுங் க
அன்னியமாக்கமுடியாத ஆன்மாவாம் தன்னைக்கு
தெளிவாக விசாரிக்கும்போது மனத்தோற்றங்க
கப்படும், ஏனெனில் அவைகள் ஆத்மாவைவிட
வஸ்துவா என்பதாம்.

## பட்டறி கெட்டறி பத்தெட்டிறுத்தறி

### கட்டளைக் கலித்துறை.

பட்டறி கெட்டறி பத்தெட் டிறுத்தறி பல்
கட்டமுற் றனீ யுலகுதுன் பேயென்று காண்
றிட்ட லன்றென நின்னையவை பத்திந் திய
யட்டகம் வேறுகண் டாலப ரோட்ச வனுபவ

பட்டு - கஷ்டப்பட்டு, அறி, கெட்டு - எல்ல
அறி, பத்து எட்டு, இறுத்து - அபராதங்கொடு
எனல், பல்வகையால் - பலவிதத்தால், கட்டம் உற்
பப்பட்டால், நீ, உலகுதுன்பே - உலகம் துன்ப
காண்குவை-- அறிவாய், யான், திட்டு - பழிக்கத்
அன்று - அல்ல, என - என்று தெரிந்தால், நின்
உன்னையறிவாய், பத்து, இந்தியங்கள் - இந்திரியங்

டகம் - சத்த பரிச ரூப ரச கந்தம் மனம் புத்தி அகங்காரங் களை, வேறு கண்டால் - வேறாகத்தெரிந்தால், அபரோட்ச அநுபவி - அபரோட்ச அநுபவியாவாய் என்பதாம்.(ஏ,அசை)

கஷ்டப்பட்டு அறி, எல்லாம் விட்டு அறி, பத்து எட்டு அபராதங்கொடுத்து அறி எனல், பலவிதத்தால் துன்பப்பட் டால் நீ உலகம் துன்பமே என்று அறிவாய், யான் பழிக்கத் தக்க உடல் அல்ல என்று தெரிந்தால் உன்னையறிவாய், பத்து இந்திரியங்கள் சத்த பரிச ரூப ரச கந்தம் மனம் புத்தி அகங் காரங்களை வேறாகத்தெரிந்தால் திட அபரோட்ச அநுபவியா வாய் என்பதாம்.

## தானுண்டது மண்ணுண்டது பிறனுண்டது சிவனுண்டது.

### அறுசீர் விருத்தம்.

தானுண்டது மண்ணுண் டதுபிறர், தாமுண்டது
தேவுண் டதுவெனல்
யானிங்கனு போகித் தனனிதை, யெனன்மாயவ
கந்தைத் தொழிலவ
மூனென்றுமு டம்பிந் தியம்வளி, யுள்ளச்செய
லாமீ தெனுமறி
வானந்தசொ ரூபப் பரவுணர், வாமென்றிடும்
வேதப் பொருளதே. (182)

(1) தானுண்டது மண்ணுண்டது, பிறர், (தாம்), உண் டது, தேவு - சிவன், உண்டது, எனல், (3) யான் - நான், (2) இங்கு - இவ்விடத்தில், (5) அநுபோகித்தனன் - அநுபவித் தேன், (4) இதை, (6) எனல், மாய - வஞ்சனையான, அகங்

கைத்தொழில் - அகங்காரச்செயல், அவம் - அதனால் வீணும், (8) ஊன்ஒன்றும் - மாமிசத்தாலான, உடம்பு, இந்தியம் - இந்திரியங்கள், வளி - பிராணாதி வாயுக்கள், உள்ளச்செயல் - மனமுதலிய அந்தக்கரணங்கள் ஆகிய இவற்றின் செய்கை, ஆம் - ஆகும், (7) ஈது - இவ்வனுபவம், (9) எனும், அறிவு - சாட்சிமாத்திரமாகிய அறிவை, (11) ஆனந்தசொரூப, பர உணர்வு ஆம் - பிரமானுபவமாம், என்றிடும் - எனத்தெரிவிக்கும் என்பதாம், (10) வேதப்பொருள் - வேதார்த்தமானது, (அது, சொல்லுருபு), (ஏ, அசை).

தானுண்டது மண்ணுண்டது பிறர் உண்டது சிவன் உண்டது எனல், இவ்விடத்தில் நான் இதை அனுபவித்தேன் எனல் வஞ்சனையான அகங்காரச்செயல் அதனால் வீணும், இவ்வனுபவம் மாமிசத்தாலான உடம்பு இந்திரியங்கள் பிராணாதி வாயுக்கள் மன முதலிய அந்தக்கரணங்கள் ஆகிய இவற்றின் செய்கையாகும் எனும் சாட்சிமாத்திரமாகிய அறிவை வேதார்த்தமானது ஆனந்தசொரூபப்பிரமானுபவமாம் எனத் தெரிவிக்கும் என்பதாம்.

### எறும்பூரக் கல்லுங் குழியும்

### வஞ்சி விருத்தம்.

எறும்பூரக் கற்குழியு மென்றும்
பெறுந்தாரைச் சிந்தனையொர் பெற்றித்
துறுங்காலைத் தேயுமய லுண்மைத்
திறங்காணற் காகுநெறி தேரே. (183)

(1) எறும்பு ஊர, கல் - கல்லும், குழியும் - பள்ளமாம், எனல், (3) என்றும் - எப்போதும், பெறும் - அடையத்தக்க,

தாரை - இடைவிடாத தாரைபோல, (2) சிந்தனை, (4) ஓர் - ஒரே, பெற்றித்து - தன்மையுடையதாய், உறும்காலை - உண்டாகுங்காலத்தில், (6) தேயும், (5) மயல் - பிராந்தி, (7) உண்மைத்திறம் - யதார்த்த அனுபவம், காணற்கு - விளங்குதற்கு (9) ஆகும் - ஏற்படும், (8) நெறி - வழி, (10) தேர் - இதை அறிவாய் என்பதாம், (ஏ, அசை).

எறும்பு ஊரக் கல்லும் பள்ளமாம் எனல், சிந்தனை எப்போதும், அடையத்தக்க இடைவிடாத தாரைபோல ஒரே தன்மையுடையதாய் உண்டாகுங்காலத்தில், பிராந்தி தேயும், யதார்த்த அனுபவம் விளங்குதற்கு வழி ஏற்படும் இதை அறிவாய் என்பதாம்.

## அறையிலாடி அம்பலத்திலாடவேண்டும்.

### கலித்துறை.

பொறையு டம்பி னுள்ள மேபொ லிந்தசான்
றறிவி யானெ ணுந்தி டத்தை யண்மியே
நிறைபெ ருங்க ரிப்ப ரத்து நெஞ்சுற
லறையி னாடி யம்ப லத்தி னாடலே (184)

(2) பொறை - சுமையாகிய, உடம்பின் - சரீரத்துள், உள்ளம் - மனதில், (ஏ) பொலிந்த - விளங்கிய, சான்று - சாக்ஷியான, அறிவு, யான் - நான், எனுந்திடத்தை, அண்மி - அடைந்துபின், (ஏ) நிறை - வியாபகமாகிய, பெருங்கரி - சர்வசாக்ஷியான, பரத்து - பிரமத்தில், நெஞ்சு உறல் - சித்தம் பொருந்தல் என்பதாம், (1) அறையின் - அறைக்குள், ஆடி -

ஆடிப்பழகியபின், அம்பலத்தின் - சபையில், ஆடல் - ஆட வேண்டும் எனல், (ஏ, அசை). (ஏ, ஏ, அசைகள்).

அறைக்குள் ஆடிப்பழகியபின் சபையில் ஆடவேண்டும் எனல், சுமையாகிய சரீரத்துள் மனதில் விளங்கிய சாக்ஷியான அறிவு நான் எனுந்திடத்தை அடைந்தபின் வியாபகமாகிய சர்வசாக்ஷியான பிரமத்தில் சித்தம் பொருந்தல் என்பதாம்.

## அஸ்தினபுரிக்கு அரசனானாலும் தாய்க்குப் புத்திரனே.

### கலி விருத்தம்.

அத்தின புரிக்கர சாயுந் தாய்க்கவன்
புத்திர னேபரி பூர ணச்சதா
முத்தியா தாரமா முதன்மை யீசனுஞ்
சுத்தமா யைக்கணே தோற்ற மாமரோ. (185)

(1) அத்தினபுரிக்கு - அஸ்தினபுரத்துக்கு, அரசு - அரசன், ஆயும் - ஆனாலும், (3) தாய்க்கு, (2) அவன், (4) புத்திரனே - மகனே எனல், (6) பரிபூரண - பரிபூரணமான, (5) சதா - நித்திய, (7) முத்தி - மோக்ஷத்துக்கு, ஆதாரம் ஆம் - ஏதுவாகிய, முதன்மை - தலைமையுடைய, ஈசனும், சுத்த, மாயைக்கண் - மாயாசத்தியில், (ஏ)தோற்றம், ஆம் - ஆவான் என்பதாம், (அரோ அசை), (ஏ, அசை).

அஸ்தினபுரத்துக்கு அரசன் ஆனாலும் அவன் தாய்க்கு மகனே எனல், நித்திய பரிபூரணமான மோக்ஷத்துக்கு ஏதுவாகிய தலைமையுடைய ஈசனும் சுத்தமாயாசத்தியில் தோற்றமாவான் என்பதாம்.

## மயிலே மயிலே ஓரிறகு கோடு என்றால் கொடுக்குமா

### அறுசீர் விருத்தம்.

மயிலே மயிலே யோரிறகு, வழங்கா
யென்னின் வழங்குவதோ
செயலாம் வைராக் கியங்கொண்மனோ, திடமுற்
றுடலோ டுலகனைத்தி
னியல்சான் றுணர்வே யானுயிரன், றெனுஞா
னத்தா லன்றியயற்
பயில்வான் மாயைக் கடனின்று, பலியா
வீட்டின் பிரத்தினமே. (186)

(1) மயிலே மயிலே ஓர் இறகு, வழங்காய் - கொடுப்பாய், என்னின் - என்றால், வழங்குவதோ - கொடுக்குமா எனல், (4) செயல் ஆம் - செய்யத்தக்கதாம், வைராக்கியம், கொள் - பொருந்திய, மனோதிடம் உற்று, உடலோடு, உலகு - உலகம் ஆகிய, அனைத்தின் - சர்வத்தின், இயல் - விளக்கமான, சான்று உணர்வே . சாக்ஷியாகிய ஞானமே, யான் - நான், உயிர் அன்று - சீவன் அல்ல, எனும் ஞானத்தால் - என்றறியும் உணர்வினால் கிட்டும், அன்றி - அல்லாமல், அயல் - அன்னியமான, பயில்வால் - அப்பியாசத்தால், (2) மாயைக்கடல் நின்று - மாயையாகிய சமுத்திரத்திலிருந்து, (5) பலியா - கிட்டாது என்பதாம், (3) வீட்டு இன்பு - மோக்ஷானந்தமான, இரத்தினம், (ஏ, அசை).

மயிலே மயிலே ஓர் இறகு கொடுப்பாய் என்றால் கொடுக்குமா எனல், மாயையாகிய சமுத்திரத்திலிருந்து மோக்ஷா

னந்தமான இரத்தினம், செய்யத்தக்கதாம் வைராக்கியம் பொருந்திய மனோதிடம் உற்று உடலோடு உலகம் ஆகிய சர்வத்தின் விளக்கமான சாக்ஷியாகிய ஞானமே நான், சிவன் அல்லை என்றறியும் உணர்வினால் கிட்டும் அல்லாமல் அன்னியமான அப்பியாசத்தால் கிட்டாது என்பதாம்.

## கொடுத்தது கேட்டால் அடுத்தது பகை.

### கலி விருத்தம்.

கொடுத்தது கேட்கி னடுத்தது பகையாம்
விடுப்பரு மான்ம விளக்கமுற் றியலுஞ்
சடத்துவ மாயை தன்னினின் றுணர்வாந்
திடத்துற முயலிற் றேர்முர ணதுவே. (187)

(1) கொடுத்தது, கேட்கின் - கேட்டால், அடுத்தது பகையாம், எனல், விடுப்ப அரும் - விடமுடியாத, ஆன்ம - ஆத்மாவின், விளக்கம் உற்று, இயலும் - பொருந்திய, சடத்துவ - அறியாமையாகிய, மாயை தன்னின்நின்று - மாயையிலிருந்து, உணர்வு ஆம் - ஆத்மவிளக்கமாகிய, திடத்துஉற - திடத்தையடைய, முயலின் - முயற்சித்தால், (3) தேர் - ஆராயத்தக்க, முரண் - பகையாம் என்பதாம், (2) அது - அம்மாயை, (ஏ, அசை,)

கொடுத்தது கேட்டால் அடுத்தது பகையாம் எனல், விடமுடியாத ஆத்மாவின் விளக்கம் உற்றுப்பொருந்திய அறியாமையாகிய மாயையிலிருந்து ஆத்மவிளக்கமாகிய திடத்தையடைய முயற்சித்தால் அம்மாயை ஆராயத்தக்க பகையாம் என்பதாம்.

## மலையில் விளைந்தாலும் உரலில்வந் திடிபடவேண்டும்.

வெண்பா.

மலையின் விளைவேனும் வந்துரலி னுள்ளாம்
உலைவில் பிரமத் துபாதிப்—பலமாயை
தானு மிதயந் தனிற்றிகழுங் கூடத்த
ஞான விடயமென நாடு. (188)

மலையின் விளைவேனும் - மலையில் விளைந்த தானாலும், வந்து - பூமியில்வந்து, உரலினுள் ஆம் - உரலில் இடிபடும் எனல், உலைவு இல் - கெடாத, பிரமத்து உபாதி - ஈஸ்வர உபாதியாகிய, பலமாயைதானும் - வலிமையுடைய மாயையும், இதயந்தனில் - இருதயத்தில், திகழும் - விளங்கும், கூடத்த ஞான விடயம் - கூடஸ்த ஞானத்துக்கு விஷயமாகும், என, நாடு - அறிந்துகொள் என்பதாம்.

மலையில் விளைந்ததானாலும் பூமியில்வந்து உரலில் இடிபடும் எனல், கெடாத ஈஸ்வர உபாதியாகிய வலிமையுடைய மாயையும் இருதயத்தில் விளங்கும் கூடஸ்த ஞானத்துக்கு விஷயமாகும் என அறிந்துகொள் என்பதாம்.

## உழக்குக்குள் கிழக்கு மேற்கு.

உழக்குட் கிழக்குமேற் குன்னலனு பூதி
வழக்கிற் றிகழ்போத வண்ணத்— தெழிற்பிரமத்
தற்பசங் கற்பஉரு வாமாயைக் குண்ணின்று
பற்பலவா நிச்யஞ்செய் பண்பு. (189)

உழக்குள் கிழக்குமேற்கு, உன்னல் - பார்த்தல் என்பது அனுபூதி வழக்கில் - அனுபவ நிலைமையில், திகழ் - விளங்குகிற, போத வண்ணத்து - ஞானசொரூபமான, எழில் - அழகிய, பிரமத்து - பிரமத்தில், அற்பசங்கற்ப, உருவாம் - வடிவமாகும், மாயைக்குள் நின்று - மாயையிலிருந்து, பல்பலவா - தங்கள்கொள்கைகளைப் பலபலவிதமாக, நிச்சயம், செய்பண்பு - செய்கிறதன்மை எனலாம்.

உழக்குள் கிழக்குமேற்குப் பார்த்தல் என்பது, அனுபவநிலைமையில் விளங்குகிற ஞானசொரூபமான அழகிய பிரமத்தில் அற்பசங்கற்ப வடிவமாகும் மாயையிலிருந்து தங்கள் கொள்கைகளைப் பலபல விதமாக நிச்சயம் செய்கிற தன்மை எனலாம்.

## ஈருள்ளிக்கு இருபத்தெட்டுப்புரை.

ஈருள்ளி யான திருபத்தெட் டுப்புரைத்தே
யோருள்ள மேயீச் சுரன்மாயை—யாருயிரஞ்
ஞானங் கரணமிரு நண்பிந் தியம்வாயு
மானும்பூ தப்பிரிவா மன். **(190)**

ஈருள்ளியானது இருபத்தெட்டு, புரைத்து - புரைகளையுடையது எனல், (ஏ) ஓர் உள்ளமே, ஈச்சுரன் - ஈசன், மாயை, ஆர் உயிர் - அரியசீவன், அஞ்ஞானம், கரணம் - நான்கு அந்தக்கரணங்கள், இருநண்பு - ஞானம் கருமமென்னும் இரண்டு பக்ஷமான, இந்தியம் - இந்திரியங்கள்பத்து, வாயு - ஐந்துவாயுக்கள், மானும் - மயங்குதற்குக்காரணமாகிய, பூதப்பிரிவு - பூதங்களின் பேதம் ஐந்து எனும் யாவும், ஆம் - ஆகும் என்பதாம், (மன், அசை). (ஏ, அசை).

ஈருள்ளியானது இருபத்தெட்டுப் புரைகளையுடையது எனல், ஓர் உள்ளமே ஈசன் மாயை அரியசீவன் அஞ்ஞானம் நான்கு அந்தக்கரணங்கள் ஞானம் கருமமென்னும் இரண்டு பக்ஷமான இந்திரியங்கள்பத்து ஐந்துவாயுக்கள் மயங்குதற்குக்காரணமாகிய பூதங்களின்பேதம் ஐந்து என்னும் யாவும் ஆகும் என்பதாம்.

## காணிக்கொத்தது கோடிக்கும்.

### கலித்துறை.

காணிக் கொத்தது கோடிக் கும்மெனல் கருதுங்கால்
வீணிற் சீவனு பாதிய வித்தைவி டுத்தோரும்
ஆணிச் செய்கையி னீசனு பாதிய தாமாயை
பேணிக் கொள்வதொழித்தே தேறுவர் பிரமந்தான் (191)

(1) காணிக்கு ஒத்தது கோடிக்கும் எனல், கருதுங்கால் - அப்பியாசிகள் ஆராயுமிடத்து, வீணில் - பிரயோசனமற்றதென, சீவன் உபாதி அவித்தை - சீவஉபாதியாகிய அஞ்ஞானத்தை, விடுத்து - விட்டு, ஓரும் - கூடஸ்த ஆத்மாவாகியசாட்சிமாத்திரத்தையறியும், ஆணிச்செய்கையின் - வலிமையான நிச்சயத்தைப்போல, ஈசன் உபாதி (அது) ஆம் - ஈஸ்வர உபாதியாகிய, மாயை - மாயாசக்தியை, பேணிக்கொள்வது - கவனித்து அனுசரிப்பதை, ஒழித்து - விட்டு, (ஏ), (3) தேறுவர் - தெளிந்துகொள்வார் என்பதாம், (2) பிரமம்தான் - பிரமம்தானெனை. (அது, சொல்லுருபு) (ஏ, அசை)

காணிக்கு ஒத்தது கோடிக்கும் எனல், அப்பியாசிகள் ஆராயுமிடத்துப் பிரயோசனமற்றதெனச் சீவ உபாதியாகி

ய அஞ்ஞானத்தை விட்டுக் கூடஸ்த ஆத்மாவாகிய சாட்சிமாத்திரத்தையறியும் வலிமையான நிச்சயத்தைப்போல ஈஸ்வர உபாதியாகிய மாயாசக்தியைக் கவனித்து அனுசரிப்பதை விட்டுப் பிரமம் தானெனத் தெளிந்துகொள்வார் என்பதாம்.

## அன்பற்ற மாமிக்குக் கும்பிட்டாலும் குற்றம்.

### வெண்பா.

அன்பற்ற மாமிதனக் கஞ்சலியுங் குற்றமாம்
வன்புற்ற மாயைக்கு மாறுகத்—தென்பட்ட
ஞானியந்த மாயையையு நானென்று கண்டிடினு
மானிவந்த தம்மாயைக் காம். (192)

(1) அன்பு அற்ற, மாமிதனக்கு - மாமிக்கு, அஞ்சலியும் - கும்பிடுதலும், குற்றம் ஆம் எனல், வன்பு உற்ற - கடுமைபொருந்திய, மாயைக்கு, மாறுக, தென்பட்ட - தோற்றிய, ஞானி அந்த மாயையையும் நான் என்று கண்டிடினும், (3) ஆனி - கெடுதி, வந்தது, (2) அம்மாயைக்கு, (4) ஆம் - ஆகும் என்பதாம்.

அன்பற்ற மாமிக்குக் கும்பிடுதலுங் குற்றமாம் எனல், கடுமை பொருந்திய மாயைக்கு மாறுகத்தோற்றிய ஞானி அந்த மாயையையும் நானென்று கண்டிடினும் அம்மாயைக்குக் கெடுதி வந்ததாகும் என்பதாம்.

## குடி செழித்தால் கோன் செழிப்பான்.

### கலி விருத்தம்.

சடம லாதுயிர் தன்னைப் பிரமமாத்
திடம தாகத் தெளிந்திடி லீசன்முத்
தொடர்பி லாத சொரூபப் பிரமமாங்
குடிசெ ழிப்பெனிற் கொன்செழிப் பாமரோ. (193)

(3) சடம் - ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்களெனும் ஜடம், அலாது - அல்லாமல், (2) உயிர் - ஜீவன், தன்னை: (4) பிரமமா - கூடஸ்தராகிய பிரமமென, திடம் (அது) ஆக - நிச்சயமாக, தெளிந்திடில் - தேர்ந்துகொண்டால், ஈசன் - ஈஸ்வரன், முத்தொடர்பு - சிருஷ்டி திதி சங்காரமெனும் மூன்று தொடர்ச்சி, இலாத - அற்ற, சொரூபப்பிரமமாம் - பிரமசொரூபமாவன் என்பதாம், (1) குடிசெழிப்பெனில், கோன் - அரசன், செழிப்பாம் - செழிப்பாவன் எனல், (அரோ, அசை) (அது, சொல்லுருபு).

குடி செழிப்பெனில் அரசன் செழிப்பாவன் எனல், ஜீவன் தன்னை ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்களெனும் ஜடம் அல்லாமல் கூடஸ்தராகிய பிரமமென நிச்சயமாகத் தேர்ந்துகொண்டால் ஈஸ்வரன் சிருஷ்டி திதி சங்காரமெனும் மூன்று தொடர்ச்சி அற்ற பிரம சொரூபமாவன் என்பதாம். (மூன்றுசரீரமாகிய ஜடமாயிருப்பவனை முத்தொழிற்கு உட்படுத்த ஈசனிருப்பான், சித்தானால் இருவரும் ஒரே பிரமமாவார்).

**அரசனை யிச்சித்துப் புருஷனைக் கைவிட**
**அரசனும் புருஷனும் ஆற்றோடு போனார்.**

கட்டளைக் கலித்துறை.

வேந்தனை யிச்சித்துக் காந்தனைக் கைதான்
விடவொழிந்தார்
காந்தனும் வேந்தனு மீசுர பத்தி
கதித்துயிர்ப்பன்
போய்ந்திடச் சீவேச் சுரத்துவ மாய்த
லொடும்விருத்தி
யாய்ந்த நிராதார மாம்பிர மத்துற்
றடங்கியதே. (194)

(1) வேந்தனை - அரசனை, இச்சித்து, காந்தனை - கணவனை, கை (தான்)விட, (4) ஒழிந்தார், எனல், (3) காந்தனும் - கணவனும், (2) வேந்தனும் - அரசனும், (5) ஈசுரபத்தி, கதித்து - தீவிரமாகி, உயிர்ப்பண்பு - சீவத்தன்மை யாகிய அகங்காரம், ஒய்ந்திட - அழிய, சீவ ஈச்சுரத்துவம் - ஜீவத்தன்மை ஈஸ்வரத்தன்மைகள், மாய்தலொடும் - அற்றவுடனே, விருத்தி - சித்தமானது, ஆய்ந்த - மகான்களால் அநுபவமாகத் தேர்ந்துகொள்ளப்பட்ட, நிராதாரம் ஆம் - தான் சர்வத்துக்கும் ஆதாரமாவதன்றித் தனக்கு மற்றொரு ஆதாரவு வேண்டாததாகிய, பிரமத்து - பிரமத்தில், உற்று அடங்கியது - ஐக்கியமாய்விட்டது என்பதாம். (தான், சாரியை), (ஏ, அசை).

அரசனை இச்சித்துக் கணவனைக் கைவிட அரசனும் கணவனும் ஒழிந்தார் எனல், ஈசுரபத்தி தீவிரமாகிச்சீவத்தன்மையாகிய அகங்காரம் அழிய ஜீவத்தன்மை ஈஸ்வரத்தன்மைகள் அற்ற உடனே சித்தமானது மகான்களால் அநுபவமாகத் தேர்ந்துகொள்ளப்பட்ட, தான் சர்வத்துக்கும் ஆதாரமாவதன்றித் தனக்கு மற்றொரு ஆதாரவு வேண்டாததாகிய பிரமத்தில் ஐக்கியமாய்விட்டது என்பதாம்.

### தாழி வயிறு ஊசி வாய்.

### வெண்பா.

தாழிவயி றூசிவாய் கூறுங்கால் முன்னை
மொழிவறநே ரும்விடயத் தொன்றுங்—கழியாது
தன்னுட் படநிகழுஞ் சற்பூ ரணஞான
மன்னத் துடலிதயத் தால். (195)

குழிசி - தாழி, வயிறு, ஊசிவாய், எனல், கூறுங்கால் - சொல்லுமிடத்து, முன்னர் - எதிராக, ஒழிவு அற - ஒழிவின்றி, நேரும் - காணப்படும், விடயத்து - விஷயங்களில், ஒன்றும், கழியாது - விடாது, தன்னுட்பட - தனக்குள்ளாகக்கொண்டு; நிகழும் - விளங்கும், சற்பூரணஞானம், சத்திய பரிபூரண ஞானமானது, அன்னத்து உடல் - அன்னமயகோசமான சரீரத்துள், இதயத்தால் - சுத்தமான மனத்தில் தோன்றும் என்பதாம்.

தாழிவயிறு ஊசிவாய் எனல், சொல்லுமிடத்து எதிராக ஒழிவின்றிக் காணப்படும் விஷயங்களில் ஒன்றும் விடாது தனக்குள்ளாகக்கொண்டு விளங்கும் சத்திய பரிபூரண ஞானமானது அன்னமயகோசமான சரீரத்துள் சுத்தமான மனத்தில் தோன்றும் என்பதாம்.

## பிழைக்கிற குழந்தையானால் பிறந்தவுடன் சாகாதா

பிழைக்குமக வானாற் பிறந்தவுடன் மாயு
முழைப்பில் சுவானுபவ முற்றுத்—தழைக்குமொரு
சீடனெனிற் றன்னைத் தெரிவித்த லோடுமுடற்
பாடகந்தை நீக்கும் பரிந்து. (196)

(1) பிழைக்கும், மகவு-குழந்தை, ஆனால், பிறந்தவுடன், மாயும் - இறக்கும் எனல், உழைப்பு இல்-இனிவருந்துதலற்ற, சுவானுபவம், உற்று - அடைந்து, தழைக்கும் - விளங்கும், ஒரு சீடன் எனில் - ஒப்பற்ற சீஷனாக இருந்தால், தன்னை, தெரிவித்தலோடும் - அறிவித்தவுடனே, (3) உடற்பாடு - தேகத்தினிடத்து, அகந்தை - தோற்றுகிற அகங்காரத்தை, நீக்கும் - விடுவான் என்பதாம், (2) பரிந்து - மனது கரைந்து.

பிழைக்குங் குழந்தை யானால் பிறந்தவுடனிறக்கும் எனை ல், இனி வருந்துதலற்ற சுவானுபவமடைந்து விளங்கும் ஒப் பற்ற சிஷனாக இருந்தால் தன்னை அறிவித்தவுடனே மனது கரைந்து தேகத்தினிடத்துத் தோற்றுகிற அகங்காரத்தை விடுவான் என்பதாம்.

## கத்தரிக்காய்க்குக் காம்பு ருசி
## வெள்ளரிக்காய்க்கு விதை ருசி.

கத்தரிக் காய்க்குத்தான் காம்புருசி வெள்ளரிக்கு
வித்துருசி கன்மத்தின் மேண்மைபல—னத்துகிலாத்
தேற்றமுடைமை திகழ்ஞானத் தின்வளமோ
வேற்ற பரபத்தி யே. (197)

கத்தரிக்காய்க்கு (தான்) காம்புருசி, வெள்ளரிக்கு - வெள்ளரிக்காய்க்கு, வித்துருசி, எனல், கன்மத்தில் - கர்மமார்க்கத்தில், மேண்மை - மேலானது, பலன் - பலனை, நத்துகிலா - விரும்பாத, தேற்றம் உடைமை - தெளிவுடைமையாகும், திகழ் - விளங்குகிற, ஞானத்தின், வளமோ-சிறப்போ, ஏற்ற- அநேக மகான்கள் அனுசரித்த தகுதியுடைய, பரபத்தியே - மேலானபக்தியோடுகூடிய தன்மையே என்பதாம். (தான், சாரியை).

கத்தரிக்காய்க்குக் காம்புருசி வெள்ளரிக்காய்க்கு வித்துருசி எனல், கர்மமார்க்கத்தில் மேலானது பலனை விரும்பாத தெளிவுடைமையாகும். விளங்குகிற ஞானத்தின் சிறப்போ அநேக மகான்கள் அனுசரித்த தகுதியுடைய மேலான பக்தியோடுகூடிய தன்மையே என்பதாம்

## கரும்பு தின்னக் கூலியா

### கலி விருத்தம்.

அருந்த னிச்சிவ மன்புரு வாதலாற்
பரிந்து மெய்ப்பர பத்தி புரிபவர்
பொருந்து றும்பயன் பூமிசை வேறெணார்
கரும்பு தின்னக் கருதிடு கூலியோ. (198)

(2) அரும் தனி - அருமையான ஒப்பற்ற, சிவம், அன்பு, உரு - வடிவம், ஆதலால், பரிந்து - மனங்கரைந்து, மெய் - உண்மையாகிய. பரபத்தி - மேலானபக்தி, புரிபவர் - செய்பவர், (4) பொருந்துறும் - அடையும், (6) பயன் - பலனை, (3) பூமிசை - உலகில், (5) வேறு, (7) எணார் - நினையார் என்பதாம், (1) கரும்பு தின்ன, கருதிடு - கருதப்படும். கூலியோ - கூலி வேண்டுமோ எனல்.

கரும்பு தின்னக் கருதப்படுங் கூலி வேண்டுமோ எனல், அருமையான ஒப்பற்ற சிவம் அன்பு வடிவமாதலால் மனங் கரைந்து உண்மையாகிய மேலானபக்தி செய்பவர் உலகில் அடையும் வேறு பலனை நினையார் என்பதாம்.

## சர்க்கரைப்பந்தலில் தேன் மழை பெய்தது.

### கட்டளைக் கலித்துறை.

திருக்கற யாவும் பரமெனச் சிந்தனை
செய்துமன
முருக்கும் பரபத்திக் கண்ணே பாத்தி
னுருவுணரும்

பெருக்கத் தபரோக்ஷ ஞானனு பூதி
பெறுவதுதான்
சருக்கரைப் பந்தரிற் றேன்மழை பெய்த
தகைமையன்றே. (199)

(2) திருக்கு அற - குற்றமற, யாவும், பரம் - பரம்பொருளே, எனச் சிந்தனைசெய்து, மனது - மனதை, உருக்கும், பரபத்திக்கண் (ஏ) - பரபக்தியில், பரத்தின் உரு - பிரமசொரூபத்தை, உணரும், பெருக்கத்து - பூரணமான, அபரோக்ஷ ஞான, அனுபூதி-அனுபவம், பெறுவதுதான், என்பதாம் (1) சருக்கரைப்பந்தரில் தேன்மழை பெய்த, தகைமை - தன்மை எனல், (அன்று, ஏ, ஏ, அசைகள்).

சருக்கரைப்பந்தரில் தேன்மழை பெய்த தன்மை எனல், குற்றமறயாவும் பரம்பொருளே எனச்சிந்தனைசெய்து மனதை உருக்கும் பரபக்தியில் பிரமசொரூபத்தையுணரும் பூரணமான அபரோக்ஷஞானவனுபவம் பெறுவதுதான் என்பதாம்.

## தலையைச்சுற்றினலும் தன்கை வாய்க்கேவரும்.

கலி விருத்தம்.

தலையைச் சுற்றியும் தன்கரம் வாய்க்குற
லெலையி றேற்ற மெவைக்குமா தாரமெய்ந்
நிலைமை யீசனென் னிச்சய மும்முதிர்ந்
தலைவி ருஞ மொழிதரு முண்மையே. (200)

தலையைச்சுற்றியும், தன், கரம் - கை, வாய்க்குஉறல் - வாய்க்கே வரவேண்டும் எனல், எலை இல் - எல்லை இல்லாத, தோற்றம் எவைக்கும், ஆதார மெய்ந்நிலைமை - ஆதாரமாகிய

உண்மை நிலை, ஈசன் - ஈஸ்வரனே, என் - என்னும், நிச்சய மும் முதிர்ந்து, உலைவுஇல் - கெடாத, தானாய் - தானாக, ஒழி தரும் - முடிகிற, உண்மையே - யதார்த்த அனுபவமே என்ப தாம்.

தலையைச்சுற்றியும் தன் கை வாய்க்கே வரவேண்டும் எனல், எல்லை இல்லாத தோற்றம் எவைக்கும் ஆதாரமாகிய உண்மைநிலை ஈஸ்வரனே என்னும் நிச்சயமும் முதிர்ந்து, கெடாத தானாக முடிகிற யதார்த்த அனுபவமே என்பதாம்.

## ஒரு பானை சாதத்துக்கு ஒரு சாதமே பதம்.

### வெண்பா.

ஓர்குழிசி யன்னத்திற் கோரன்ன மேபதமாஞ்
சார்தருமோர் சீவன் றனதுண்மை—பேர்வரிய
சச்சிதா னந்தசிவந் தானென் றுணரினெலா
மச்சொரூ பத்துணர்ந்த தாம். (201)

ஓர்குழிசி - ஒருபானை, அன்னத்திற்கு ஓரன்னமே பதமாம், எனல் சார்தரும் - பக்குவத்தைப்பெற்ற, ஓர்சீவன் தனது, உண்மை - யதார்த்த சொரூபம், பேர்வு அரிய - அசைவற்ற, சச்சிதானந்த சிவந்தான் என்று உணரின் எலாம் - சகலத்தையும், அச்சொரூபத்து - அச்சிவ சொரூப மாகவே, உணர்ந்ததாம் என்பது.

ஒரு பானை அன்னத்திற்கு ஓரன்னமே பதமாம் எனல், பக்குவத்தைப்பெற்ற ஓர் சீவன் தனது யதார்த்த சொரூபம், அசைவற்ற சச்சிதானந்த சிவந்தானென்று உணரின் சகலத்தையும் அச்சிவசொரூபமாகவே உணர்ந்ததாம் என்பது.

## குழந்தை வரத்திற்குப் போய்க் கணவனை யிழந்தது.

குழந்தைவரத் திற்கேகிக் கொண்கனைத்தா னங்கே
யிழந்ததென லோபெரும்பே றெய்தற்—குழந்துமன
மன்றவிசா ரித்தலுஞ்சீ வத்துவம்போய்த் தற்பரமா
நின்றொருபற் றற்ற நிலை. (202)

(2) குழந்தை வரத்திற்கு, ஏகி - போய், (4) கொண் கனை - கணவனை, (1) தான் - ஒரு பெண், (3) ஆங்கே - அவ் விடத்தே, (5) இழந்தது, எனலோ - என்பதோ, (7) பெரும் பேறு - பெரிய லாபம், எய்தற்கு - அடைய, உழந்து - முயற் சித்து, (6) மனம், (8) மன்ற - நன்றாக, விசாரித்தலும் - விசா ரித்தவுடனே, சீவத்துவம்போய் - சீவத்தன்மை கெட்டு, தற் பரமா - அந்தப்பிரமமாக, நின்று - நிலைத்து, ஒருபற்று - ஓர் பற்றும், அற்றநிலை - இல்லாமல் நிற்கும் ஸ்திதியாம், எனல், (தத் - ஈஸ்வர லக்ஷ்யார்த்தமாகிய அந்த).

ஒரு பெண், குழந்தை வரத்திற்குப்போய் அவ்விடத்தே கணவனை இழந்தது என்பதோ, மனம் பெரிய லாபம் அடைய முயற்சித்து நன்றாக விசாரித்தவுடனே சீவத்தன்மைகெட்டு அந்தப்பிரமமாக நிலைத்து ஓர் பற்றுமில்லாமல் நிற்கும் ஸ்திதி யாம் எனல்.

## அரைப்பணத்துக்கு இழந்த மானம் ஆயிரம் பணம் கொடுத்தாலும் திரும்பி வராது.

### அறுசீர் விருத்தம்.

அரைப்பொன்னிற் கிழந்த மான, மாயிரம்
பொன்னீந் தாலுந்

தரைக்கண்வா ராது ளத்திற், சான்றியா
னென்னு மான்ம
வரத்தின்ஞா னத்தான் மாய்சீ, வத்துவஞ்
சருவ சாட்சி
பிரிப்பொண்ணாப் பரமென் றோரும், பிரமஞா
னத்துண் டாமோ. (203)

(2) அரைப் பொன்னிற்கு - அரைப்பணத்துக்கு, இழந்தமானம், ஆயிரம், பொன் ஈந்தாலும் - பணங்கொடுத்தாலும், (1) தரைக்கண் - இவ்வுலகில், (3) வாராது, எனல், உளத்தில் - உள்ளத்தில், சான்று - சாக்ஷி, யான் - நான், என்னும் - எனச் சம்சய விபரீதமின்றி நிச்சயித்தலாகிய, ஆன்ம வரத்தின் ஞானத்தால் - சிரேஷ்டமான ஆன்ம ஞானத்தால், மாய் - அழிந்த, சீவத்துவம் - சீவத்தன்மையானது, சருவசாட்சி - சர்வசாக்ஷியோ, பிரிப்பு ஒண்ணா - பேதமாக்கமுடியாத, பரம் - மேலான வஸ்து, என்று ஓரும் - என்றுணரும், பிரமஞானத்து - பிரமஞானத்தால், உண்டாமோ, என்பதாம்.

இவ்வுலகில் அரைப்பணத்துக்கு இழந்த மானம் ஆயிரம் பணங் கொடுத்தாலும் வாராது எனல், உள்ளத்தில் சாக்ஷி நான் எனச் சம்சய விபரீதமின்றி நிச்சயித்தலாகிய சிரேஷ்டமான ஆன்மஞானத்தால் அழிந்த சீவத்தன்மையானது, சர்வசாக்ஷியோ பேதமாக்கமுடியாத மேலான வஸ்து என்றுணரும் பிரமஞானத்தால் உண்டாமோ என்பதாம்.

### குப்பையில் முளைத்த கோடி கூரைமேல் காய்த்தது

மைப்பல தத்து வஞ்சேர், மானிட
தேகத் துண்டாய்
மெய்ப்படும் விசார மோங்கி, வியன்பிர
மாண்டத் திற்கு

மப்புற மாகு ஞானு, னந்தமா
முத்தி நல்கல்
குப்பையுண் முகிழ்த்த வல்லி, கூரைமேற்
பலித்த வாறே. (204)

(2) மை - அஞ்ஞான காரியமாகிய, பலதத்துவம், சேர் - பொருந்திய, மானிட தேகத்து, உண்டாய் - உண்டாகி, மெய்ப் படும் - உண்மையாகிய, விசாரம், ஓங்கி - விருத்தியாய், வியன் - பெருமையுற்ற, பிரமாண்டத்திற்கும், அப்புறமாகும் - மேலும் வியாபித்திருக்கும், ஞானானந்தமாம், முத்தி நல்கல் - மோட்சத்தைக்கொடுத்தல், என்பதாம், (1) குப்பையுள், முகிழ்த்த - முளைத்த, வல்லி - கொடி, கூரைமேல், பலித்த - படர்ந்து காய்த்த, ஆறு - விதம் எனல், (ஏ, அசை).

குப்பையுள் முளைத்த கொடி கூரைமேல் படர்ந்து காய்த்தவிதம் எனல், அஞ்ஞான காரியமாகிய பலதத்துவம் பொருந்திய மானிட தேகத்து உண்டாகி உண்மையாகிய விசாரம் விருத்தியாய்ப் பெருமையுற்ற பிரமாண்டத்திற்கும் மேலும் வியாபித்திருக்கும் ஞானானந்தமாம் மோட்சத்தைக்கொடுத்தல் என்பதாம்.

## ஆயத்தில் ஞாயம்.

### வெண்பா.

ஆயத்தின் ஞாய மசத்தா யனுதியதா
மாயைக் கணேநிவிர்த்தி வாசனையாற்—றூய
விசாரத்தாற் சிந்தை விலக்காற்பசு தப்பே
ரசாரம்போய் முத்தியுற லாம். (205)

ஆயத்தில் ஞாயம், என்பது, அசத்து ஆய் - தோற்றமாகி, அநாதி (அது) ஆம், மாயைக்கண் (ஏ) - மாயாசத்தியினிடத்து, நிவிர்த்தி வாசனையால், தூய - சுத்தமான, விசாரத்தால், சிந்தை விலக்கால் - மனோ நிக்கிரகத்தால், பந்தப்பேர் - பந்தமெனும் பெயரையுடைய, அசாரம், போய் - நீங்கி, முத்தி, உறல் ஆம் - அடைதலாமெனல் (அது, சொல்லுருபு), (ஏ, அசை).

ஆயத்தில் ஞாயம் என்பது, தோற்றமாகி அநாதியாம் மாயாசத்தியினிடத்து நிவிர்த்திவாசனையால் சுத்தமானவிசாரத்தால் மனோநிக்கிரகத்தால் பந்தமெனும்பெயரையுடைய அசாரம் நீங்கி முத்தியடைதலாம் எனல்.

## கயிற்றின் நீளமும் கிணற்றினாழமும் காணல்

*கலி நிலைத்துறை.*

கயிற்றி னீளமுங் கேணியி னாழமுங் காணன்
மயக்க மாமவி சார தூ லத்துவ மனந்தா
னயிக்க வாத்தும விசாரத்தாற் சூக்கும மாகி
யியக்க மில்பரி பூரணப் பிரமமொன் றிடலே. (206)

கயிற்றின் நீளமும் கேணியின் ஆழமும் காணல், எனல், மயக்கமாம், அவிசார - விசாரணையற்ற, தூலத்துவ - ஸ்தூலத் தன்மையுடைய, மனம், (தான்), அயிக்க - ஏக சுபாவமான, ஆத்தும - ஆன்ம, விசாரத்தால், சூக்குமம் - சூக்ஷமம், ஆகி, இயக்கம் இல் - அசைவில்லாத, பரிபூரண, பிரமம் ஒன்றிடல் - பிரமத்திற் கலத்தல் என்பதாம், (ஏ, அசை), (தான், சாரியை), (அயிக்கம் - ஐக்கியம் என்பதின் போலி) ஐக்கியம் - ஏகத் தன்மை, கலத்தல் - நீர் பாலிற் கலத்தல்போல மனம் பிரமாகாரமாதல்.

கயிற்றின் நீளமும் கேணியின் ஆழமும் காணல் எனல், மயக்கமாம் விசாரணையற்ற ஸ்தூலத்தன்மையுடைய மனம் ஏகசுபாவமான ஆன்ம விசாரத்தால் சூக்ஷமம் ஆகி அசைவில்லாத பரிபூரணப் பிரமத்திற் கலத்தல் என்பதாம்.

## பலதீட்டுக் கோநுழழக்கு

### வெண்பா.

உறுபலவா சூசங்கட் கோர்கான் முழுக்கே
நெறியறுமெண் ணில்பவத்து நெஞ்சிற்—செறியுமெலாக்
கற்பனையு நீங்குங் கருத்தொருகாற் பூரணமாந்
தற்பரத்தி லொன்றியிடிற் றான். (207)

(1) உறு - பொருந்திய, பல, ஆசூசங்கட்கு - ஆசௌசங்களுக்கும், ஓர்கால் - ஓரேதடவை, முழுக்கு (ஏ) - ஸ்நானம் எனல், (4) நெறி அறும் - நேர்வழியற்ற, (3) எண்இல் பவத்து - கணக்கில்லாத பிறவிகளில், (5) நெஞ்சில் செறியும் - மனதிற்சேர்ந்த, எலாக்கற்பனையும் - எல்லாக் கற்பனைகளும், நீங்கும், என்பதாம், (2) கருத்து - சித்தம், ஒருகால் - ஒருதரம், பூரணமாம், தற்பரத்தில் - அந்தப்பிரமத்தில், ஒன்றியிடில் - கலந்தால், (தான், சாரியை), (ஏ, ஆசை).

பொருந்திய பல ஆசௌசங்களுக்கும் ஓரேதடவை ஸ்நானம் எனல், சித்தம் ஒருதரம் பூரணமாம் அந்தப்பிரமத்தில் கலந்தால் கணக்கில்லாதபிறவிகளில் நேர்வழியற்ற மனதிற் சேர்ந்த எல்லாக்கற்பனைகளும் நீங்கும் என்பதாம்.

## ஆயிரங் காக்கைக்கு ஒருகல்

எண்ணில் கருமங்கள் யாவு மவித்தையோடு
பண்ணுறவே மாயும் பரமான்ம—விண்ணிடையே
மேயிடுங்காற் சாத்தீக விர்த்தியொரு காலன்றே
யாயிரங்காக் கைக்கொருகல் லாம். (208)

(7) எண் இல் - எண்ணிக்கையற்ற, கருமங்கள் யாவும், (6) அவித்தையொடு - அஞ்ஞானத்துடன், (8) பண்உற - நன்றாக, (ஏ), மாயும் - கெட்டுப்போம் என்பதாம், (3) பரம ஆன்ம - மேலான ஆத்மாவாகிய, விண் இடை - ஞானகாயத்தில், (ஏ), (5) மேயிடுங்கால் - பொருந்தினால், (2) சாத்தீகவிர்த்தி - சத்துவ விர்த்தி, (4) ஒருகால் - ஒருதரம், (அன்று, ஏ), (1) ஆயிரங் காக்கைக்கு ஒரு கல், எனல், (ஆம்), (ஏ, ஏ, அன்று, ஏ, அசைகள்), (ஆம், சாரியை).

ஆயிரம் காக்கைக்கு ஒருகல் எனல், சத்துவ விர்த்தி மேலான ஆத்மாவாகிய ஞானகாயத்தில் ஒருதரம் பொருந்தினால் அஞ்ஞானத்துடன் எண்ணிக்கையற்ற கருமங்கள் யாவும் நன்றாகக் கெட்டுப்போம் என்பதாம்.

## குயவனுக்குப் பலநாள் வேலை தடிகாரனுக்கு ஒரு நாழிகை வேலை.

### அறுசீர் விருத்தம்.

மிடியில் குயவற் குப்பலநாள், வேலை
தடிகா ரன்றனக்கோர்
கடிகை வேலை யனுதினெடுங், கால
மவித்தைக் காரியமாம்

விடய ஞாலங் கருவிபல, மிடையுங்
காய மூன்றுடனே
முடியுந் துரிய ஞானவிழி, முகிழ்த்த
வந்தக் கணத்தன்றே. (209)

(1) மிடியில் - தன் தொழிலில் குறைவற்ற, குயவற்கு - குயவனுக்கு, பலநாள் வேலை, தடிகாரன்றனக்கு - தடிகாரனுக்கு, ஓர் கடிகை - ஒரு நாழிகை, வேலை, எனல், (3) அறுதி நெடுங்காலம், அவித்தை - அஞ்ஞானத்தின், காரியம், ஆம் - ஆகிய, விடயம் - விஷயங்கள், ஞாலம் - உலகங்கள், கருவிபல - பலதத்துவங்கள், மிடையும் - சேர்ந்த, காயம் மூன்றுடன் - மூன்று சரீரங்களோடு யாவும், (ஏ), முடியும் - பொய்யாய்விடும் என்பதாம், (2) துரியஞான, விழி - திருஷ்டி, முகிழ்த்த - உண்டாகிய, அந்தக்கணத்து - அந்தக்ஷணத்தில், (அன்று, ஏ, அசைகள்), (ஏ, அசை).

தன் தொழிலில் குறைவற்ற குயவனுக்குப் பலநாள் வேலை, தடிகாரனுக்கு ஒரு நாழிகை வேலை எனல், துரியஞான திருஷ்டி உண்டாகிய அந்தக்ஷணத்தில் அறுதி நெடுங்காலம் அஞ்ஞானத்தின் காரியமாகிய விஷயங்கள் உலகங்கள் பலதத்துவங்கள் சேர்ந்த மூன்று சரீரங்களோடு யாவும் பொய்யாய் விடும் என்பதாம்.

## ஏறவிட்டு ஏணியை வாங்குதல்.

### கலி விருத்தம்.

ஏற விட்டட னேணியை வாங்கிடல்
வீறு சாத்து விகநெறி யான்முத
லேறி லாப்பரத் தெய்துவித் தன்னதும்
பாறு விக்கும் பானது பண்பரோ. (210)

ஏறவிட்டு, உடன் - உடனே, ஏணியை, வாங்கிடல் - எடுத்துவிடல் என்பது, வீறு - தீவிரமான, சாத்துவிகநெறியால் - சத்துவவிர்த்தி மார்க்கத்தால், முதல் ஈறு இலா - ஆதியந்தமில்லாத, பரத்து - பிரமத்தில், எய்துவித்து - கலக்கச்செய்துபின், அன்னதும் - அந்தச்சத்துவ விர்த்தியையும், பாறுவிக்கும் - விட்டுவிடும்படி செய்யும், பரனது - குருவினுடைய, பண்பு - தன்மையாம் எனல், (அரோ, அசை).

ஏறவிட்டு உடனே ஏணியைஎடுத்துவிடல் என்பது, தீவிரமான சத்துவவிர்த்தி மார்க்கத்தால் ஆதியந்தமில்லாத பிரமத்தில் கலக்கச்செய்து பின் அந்தச்சத்துவவிர்த்தியையும் விட்டுவிடும்படி செய்யும் குருவினுடைய தன்மையாம் எனல்.

## பேசப் பேசப் பிழையல்லவா

மாசித் தேயெலா மென்று மதித்திடுந்
தேசொத் தானுந் திகழ்மவு னத்தலாற்
பாசச் சேதம் படுவ திலையகோ
பேசப் பேசப் பிழைநிகழ் கின்றதே. (211)

(3) மா - மகாபரிபூரண, சித்தே - ஞானசொரூபமே, (2) எலாம் - எல்லாம், (4) என்று, மதித்திடும் - நிச்சயிக்கும், தேசு ஒத்தானும் - அனுபவவிளக்கம் கிடைத்தாலும்,(7) திகழ் - சுயம்பிரகாசமாகவும் நிரதிசயமாகவுமுள்ள, மவுனத்து அலால் - அனுபவாதீதமாகிய மௌன நிலையால் அல்லாமல், (6) பாசச்சேதம் - சங்கற்பமாகிய மாயையின் நாசம், (8) படுவதிலை - உண்டாவதில்லை யென்பதாம், (5) அகோ - ஆச்சரியம், (1) பேசப் பேசப் பிழை, நிகழ்கின்றது - ஏற்படுகிறது எனல், (ஏ, அசை).

பேசப் பேசப் பிழை ஏற்படுகிறது எனல், எல்லாம் மகா பரிபூரண ஞானசொரூபமே என்று நிச்சயிக்குமனுபவவிளக்கங் கிடைத்தாலும், ஆச்சரியம்! சங்கற்பமாகிய மாயையின் நாசம் சுயம்பிரகாசமாகவும் நிரதிசயமாகவுமுள்ள அனுபவாதீதமாகிய மௌனநிலையில் அல்லாமல் உண்டாவதில்லை என்பதாம்.

## கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்.

### கொச்சகக் கலிப்பா.

கண்டவரோ விண்டிலரே விண்டவரோ கண்டிலரே
உண்டெனுமப் பிரமத்தி னொன்றியசத் துவவிர்த்தி
யண்டுசுகத் தாற்சங்கற் பம்புரியா சங்கற்ப
மண்டுமிரா சதவிர்த்தி வான்பிரமத் தொன்றாதே. (212)

கண்டவரோ, விண்டிலர் (ஏ) - பேசார், விண்டவரோ - பேசுகிறவரோ, கண்டிலர் (ஏ) - காணார், எனல், உண்டு - இருக்கிறது, எனும் - என்பதாகமாத்திரம் சொல்லத்தக்க, அப்பிரமத்தின் - அந்த ஆத்மாவாகிய பிரமத்தில், ஒன்றிய - கலந்த, சத்துவ விர்த்தி - சாந்தசித்தமானது, அண்டு - அடைந்த, சுகத்தால் - ஆனந்தத்தால், சங்கற்பம், புரியா - செய்யாது, சங்கற்பம் - சங்கற்பத்தை, மண்டும் - பொருந்திய, இராசத விர்த்தி - இரஜோகுணமுடைய மனது, வான் - மகிமையுடைய, பிரமத்து - பிரமத்தில், ஒன்றாது (ஏ) - இலயமடையாது, என்பதாம்.(ஏ, ஏ, அசைகள்).

கண்டவரோ பேசார் பேசுகிறவரோ காணார் எனல், இருக்கிறது என்பதாகமாத்திரம் சொல்லத்தக்க அந்த ஆத்மாவாகிய பிரமத்தில் கலந்த சாந்தசித்தமானது அடைந்த ஆனந்தத்

தால் சங்கற்பம்செய்யாது. சங்கற்பத்தைப்பொருந்திய இரஜோகுணமுடைய மனது மகிமையுடைய பிரமத்தில் இலயமடையாது என்பதாம்.

## அழக்கொண்டது அழப்போம்

### வஞ்சித்துறை.

நிழற்றத்துவ நின்றே
விழக்கண்டவி சாரத்
துழப்போடக மோவு
மழக்கொண்டத ழப்போம். (213)

(2) நிழல் - சாயைபோலத் தோற்றமான, தத்துவம் நின்றே - மூன்று சரீரத்தின் தத்துவங்களிலிருந்தே, விழ - அவைகள் பொய்யாய்ப்போக, கண்ட - தெரிந்துகொண்ட, விசாரத்து உழப்போடு - விசார முயற்சியோடு, அகம் - மனதும், ஓவும்- ஒழிந்துவிடும் என்பதாம், (1) அழக்கொண்டது அழப்போம், எனல்.

அழக்கொண்டது அழப்போம் எனல், சாயைபோலத் தோற்றமான மூன்றுசரீரத்தின் தத்துவங்களிலிருந்தே அவைகள் பொய்யாய்ப்போகத் தெரிந்துகொண்ட விசார முயற்சியோடு மனதும் ஒழிந்துவிடும் என்பதாம்.

## நாட்டுக்கு நல்ல துரை வந்தாலும் தோட்டிக்குப் புல்லின் சுமை போகாது

### வெண்பா.

நாட்டிற்கு நல்லதுரை நண்ணிடினு மப்போழ்துந்
தோட்டிக்குப் புற்சுமையே சுத்தமுறு—தேட்ட

விருத்தியின்ஞா னனந்த மேவுகினுந் தேகத்
திருப்பதுபி ராரத்த மே. (214)

நாட்டிற்கு நல்ல, துரை - அதிகாரி, நண்ணிடினும் - வந்தாலும், அப்போழ்தும் - அப்போதும், தோட்டிக்கு, புற்சுமையே - புல்லின் சுமையே, எனல், சுத்தம், உறு - அடைந்த, தேட்டவிருத்தியில் - தெளிந்த சித்தத்தில், ஞானானந்தம், மேவுகினும் - விளங்கினாலும், தேகத்து, சரீரத்தில், இருப்பது பிராரத்தமே என்பதாம்.

நாட்டிற்கு நல்ல அதிகாரி வந்தாலும் அப்போதும் தோட்டிக்குப் புல்லின் சுமையே எனல், சுத்தமடைந்த தெளிந்த சித்தத்தில் ஞானானந்தம் விளங்கினாலும் சரீரத்தில் இருப்பது, பிராரத்தமே என்பதாம்.

யானை யுண்ட விளாம் பழம்

வஞ்சி விருத்தம்.

வேழ முண்டவி ளங்கனி
யாழு நெஞ்சம வித்தையும்
வீழ ஞானவி ழிப்புறு
மூழி னோர்தமு டம்பரோ (215)

வேழும் - யானை, உண்ட, விளங்கனி - விளாம்பழம் எனல், ஆழும் - அழுந்திய, நெஞ்சம் - மனதும், அவித்தையும் - அஞ்ஞானமும், வீழ - ஒழிந்துபோக, ஞான, விழிப்பு உறும் - திருஷ்டியைப்பெற்ற, ஊழினோர் (தம்) - ஒழுங்கை

யுடைய ஞானிகளின், உடம்பு (அரோ) - சரீரம் என்பதாம். (தம், சாரியை, அரோ, அசை) (ஊழினோர் - ஜீவன் முத்திப் பிராரத்தமுடையோர் எனலும் பொருந்தும்.)

யானையுண்ட விளாம்பழம் எனல், அழுந்திய மனதும் அஞ்ஞானமும் ஒழிந்துபோக ஞானதிருஷ்டியைப் பெற்ற ஒழுங்கையுடைய ஞானிகளின் சரீரம் என்பதாம்.

### உண்பான் தின்பான் சிவப்பிராமணன் குத்துக்கு நிற்பான் வீர முஷ்டி.

வெண்பா.

உண்பானுந் தின்பானு முற்ற சிவத்துவிசன்
எண்பாவு குத்துக் கெதிர்நிற்போன்—பண்பாற்
படர்வீர முட்டி பரானுபவ நெஞ்சிற்
றொடரூழ் சரீரத்திற் சொல். (216)

உண்பானும் தின்பானும், உற்ற - தகுதியுடைய, சிவத்துவிசன் - சிவப்பிராமணன், எண்பாவு - எண்ணப்பட்ட, குத்துக்கு, எதிர் - எதிராக, நிற்போன், பண்பால் - அஞ்சாத்தன்மையால், படர் - செல்லும், வீரமுட்டி, எனல், பர அனுபவம் - பிரமானுபவம், நெஞ்சில் - மனதிலும், தொடர் ஊழ் - தொடர்ந்தபிராரத்வம், சரீரத்தில் - தேகத்திலும் உள்ளன, சொல் - இது வேதவாக்கு என்பதாம்.

உண்பானுந் தின்பானுந் தகுதியுடைய சிவப்பிராமணன், எண்ணப்பட்ட குத்துக்கு எதிராக நிற்போன் அஞ்சாத்தன்மையால் செல்லும் வீரமுட்டி எனல், பிரமானுபவம் மனதிலும், தொடர்ந்த பிராரத்வம் தேகத்திலும் உள்ளன இது வேதவாக்கு என்பதாம்.

## கரும்பு கோணினாலும் கைக்குமா

### வஞ்சி விருத்தம்.

தெரிந்த ஞானியின் றேகமூழ்
திரிந்த வாறுடன் சேரினு
மரும்பு ஞானவின் பாமவன்
கரும்பு கோடினுங் கைப்பதோ

(2) தெரிந்த ஞானியின் தேகம், ஊழ் - பிராரத்வ
ந்த ஆறு - ஏற்பட்டபடி, உடன் - விவகாரங்களோடு
னும் - பொருந்தினாலும், (4) அரும்பும் - நவநவமாய்
கும், ஞான இன்பு ஆம் - ஞானானந்தமயமாவன், (3)
அந்த ஞானி, (1) கரும்பு, கோடினும் - கோணினாலும்
பதோ - கைக்குமா எனல்.

கரும்பு கோணினாலும் கைக்குமா எனல்,
ஞானியின் தேகம், பிராரத்வம் ஏற்பட்டபடி விவ
ளோடு பொருந்தினாலும் அந்த ஞானி நவநவமாய் வி
ஞானானந்தமயமாவன் என்பதாம்.

## பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சுமா

### கலி விருத்தம்.

தால நீள்வனச் சம்பு சலசலைப்
பானு மஞ்சா பலதத் துவவியல்
சால வோர்ந்துள தத்துவ ஞானியூ
ழானு நஞ்செய லான்மரு ளானரோ.

தால நீள்வனச்சம்பு - பெரிய பனங்காட்டு நரி, ச
பானும் - சலசலவெனும் சத்தத்தினாலும், அஞ்சா - பய

யாது எனல், பலதத்துவ இயல் - எல்லாத்தத்துவங்களின் சுபாவத்தையும், சால - நன்றாக, ஓர்ந்து உள - அறிந்திருக்கிற, தத்துவஞானி, ஊழால் - பிராரத்வத்தினால், உறும் செயலால் - உண்டாகுங் காரியங்களால், மருளான் - மயங்கான் என்பதாம் (அரோ, அசை).

பெரிய பனங்காட்டு நரி சலசலஎனும் சத்தத்தினாலும் பயமடையாது எனல், எல்லாத்தத்துவங்களின் சுபாவத்தையும் நன்றாக அறிந்திருக்கிற தத்துவஞானி, பிராரத்துவத்தினால் உண்டாகுங் காரியங்களால் மயங்கான் என்பதாம்.

வெயிலிலுங் காயமாட்டான் நீரிலும்
நனையமாட்டான்.

வஞ்சி விருத்தம்.

காரிய வெயிலினுங் காயார்
நீரினு நனைகிலார் நீடுன்
பீரவு மிடருறு னின்பஞ்
சாரவு மகிழ்கலன் றக்கோன். (219)

(1) காரிய- பல காரியங்களுக்கேதுவாகிய, வெயிலினும் காயார் நீரினும், நனைகிலார் - நனையார் எனல், (3) நீள் துன்பு - பெருந்துன்பம், ஈரவும் - மார்பைப் பிளப்பதுபோல நேர்ந்தாலும், இடர்உறுன் - துன்பம் அடையான், இன்பம், சாரவும் - வந்தாலும், மகிழ்கலன் - மகிழான் என்பதாம், (2) தக்கோன் - மனமொழி மெய்களால் வழிபடத்தக்கவனாகிய ஞானி,

பல காரியங்களுக்கேதுவாகிய வெயிலினுங் காயார் நீரினும் நனையார் எனல், மனமொழி மெய்களால் வழிபடத்தக்க

வணங்கிய ஞானி, பெருந்துன்பம் மார்பைப் பிளப்பதுபோல நேர்ந்தாலும் துன்பம் அடையான், இன்பம் வந்தாலும் மகிழான் என்பதாம்.

## பூவோடு சேர்ந்த நாரும் மணம்பெறும்

வெண்பா.

நற்பூ வொடுசேர்ந்த நாரு மணம்பெறுமாற்
சற்சீவன் முத்தர் தமைமேவும்—பொற்பில்
பிராரத்த கன்மமுமுற் பெற்றியர்வாய் வேதத்
திராநிற்கு மேன்மையுட னே. (220)

(1) நற்பூவொடு - நல்ல புஷ்பத்துடன், சேர்ந்த நாரும் மணம்பெறும், எனல், (ஆல்) சற்சீவன் முத்தர் தமை சத்தாகிய சீவன் முத்தர்களை, மேவும் - அடுத்த, பொற்புஇல் - நயமில்லாத, பிராரத்த, கன்மமும் - கர்மமும், முன் - முதன்மையான, பெற்றியர் - குணவான்களாகிய பெரியோர்களின், வாய்- வாக்கினலும், வேதத்து-ஈஸ்வர வாக்காகிய வேதங்களாலும், (3) இராநிற்கும் - விளங்கும், (2) மேன்மையுடன் - உயர்வாகப் புகழப்பட்டு, (ஏ, ஆல், அசைகள்).

நல்ல புஷ்பத்துடன் சேர்ந்த நாரும் மணம் பெறும் எனல், சத்தாகிய சீவன் முத்தர்களை அடுத்த நயமில்லாத பிராரத்த கர்மமும் முதன்மையான குணவான்களாகிய பெரியோர்களின் வாக்கினலும் ஈஸ்வர வாக்காகிய வேதங்களாலும் உயர்வாகப் புகழப்பட்டு விளங்கும் என்பதாம்.

### கெட்டாலுஞ் செட்டி கிழிந்தாலும் பட்டு

கெட்டாலுஞ் செட்டி கிழிந்தாலும் பட்டேபொய்
விட்டான்மா வாம்பிரம வித்தொருகா—னிட்டானு
பூதியற்று மந்நிலையே பூண்பன் வரிட்டனையூ
ழேதியற்றி னும்பிரம மே. **(221)**

கெட்டாலுஞ் செட்டி கிழிந்தாலும் பட்டு, (ஏ) எனல், பொய் விட்டு - கற்பனைகளில் அபிமானமின்றி, ஆன்மா ஆம் - தானாக விளங்கும், பிரமவித்து, ஒருகால் - ஒவ்வொரு சமயங்களில், நிட்டானுபூதி - பிரமமாகவிருக்குமனுபவம், அற்றும் - விட்டிருந்தாலும், அந்நிலையே-மறுபடியும் அந்தநிலைமையையே, பூண்பன் - அடைவான், வரிட்டனை - பிரமவரிஷ்டனை, ஊழ் - பிராரத்வகர்மம், ஏது இயற்றினும் - என்ன செய்தாலும், பிரமமே - அவன் பிரமமாகவேயிருப்பான் என்பதாம், (ஏ, அசை).

கெட்டாலுஞ் செட்டி கிழிந்தாலும் பட்டு எனல், கற்பனைகளில் அபிமானமின்றித் தானாக விளங்கும் பிரமவித்து ஒவ்வொரு சமயங்களில் பிரமமாகவிருக்குமனுபவம் விட்டிருந்தாலும் மறுபடியும் அந்த நிலைமையையே அடைவான், பிரமவரிஷ்டனைப் பிராரத்வகர்மம் என்ன செய்தாலும் அவன் பிரமமாகவே யிருப்பான் என்பதாம்.

### பாழாய்ப்போவது பசுவின் வாயிலே

#### கலி விருத்தம்.

ஊழுளூர் மெயுஞ்செய லொழிந்தொர் போழ்தினும்
வாழல தகனைநூல் வழியின் விட்டிடித்
கீழுல கந்நெறி கிடைத்து மேற்செனும்
பாவிலே கழிவது பசுவின் வாயிலே. **(222)**

(2) ஊழ் உறார் - பிராரத்துவத்தையடையாத ஞானி களின், மெயும் - சரீரமும், செயல் ஒழிந்து - தொழிலின்றி, ஓர் போழ்தினும் - ஓர் காலமும், வாழலது - இருப்பதில்லை ஆதலால், அதனை - அச்சரீரத்தை, நூல்வழியின் - சாஸ்திர மார்க்கத்தில், விட்டிடில் - நடக்கவிடில், கீழ் - கீழ்ப்படியி லுள்ள, உலகு - உலகத்தார், அந்நெறி - அவ்வொழுங்கை, கிடைத்து - அடுத்து, மேல் - மேற்படியில், செலும் - நடப் பார் என்பதாம், (1) பாழிலே - வீணுகை, கழிவது -போவது, பசுவின், வாயிலே - வாய்ப்பட்டுப் பிரயோசனமாகட்டும் எனல்.

வீணுகைப்போவது பசுவின் வாய்ப்பட்டுப் பிரயோசனமா கட்டும் எனல், பிராரத்வத்தையடையாத ஞானிகளின் சரீரமும் தொழிலின்றி ஓர்காலமுமிருப்பதில்லை ஆதலால் அச்சரீரத் தைச் சாஸ்திரமார்க்கத்தில் நடக்கவிடில் கீழ்ப்படியிலுள்ள உலகத்தார் அவ்வொழுங்கை அடுத்து மேற்படியில் நடப்பார் என்பதாம்.

(செய்யவேண்டியதைச் செய்துமுடித்தோராகிய ஞானி கள் செய்தேதீரவேண்டும் எனும் கர்த்துருத்துவமின்றி விளை யாட்டாக உலோகோபகாரமான சற்கர்மங்களை யனுஷ்டிப்பார் கள் என்பது கருத்து.)

**பெற்றவளுக்குத்தெரியும் பெறும் வருத்தம்.**

**குற்ற காதுக்கு ஊனமில்லை.**

கொச்சகக்கலிப்பா.

பெற்று ளறிவாள் பெறுந்துயர ஞானநிலை
யுற்றோரே மாயை யுறுதுயர்கண் டுய்ந்திட்டார்
குற்றச் செவிக்குக் குறைவின்று சங்கற்ப
மற்றே திகழ்பவனுக் கானி துயரிலையே. (223)

(1) கெட்டார்க்கு உறவு, கிளையினும் - பந்துக்களிடத்தும், இன்று - இல்லை, (ஏ), வாழப்பட்டார்க்கு - வாழ்ந்தார்க்கு, உறவு, (3) ஆம் - உண்டு எனல், (2) படர்வழியும் - செல்லும் வழியிலும், (5) கட்டால் - பிடிப்பாக, ஓர் நல் நிலை - ஒரு சன்மார்க்க நிலைமையும், அற்றார்க்கு - இல்லாதவர்க்கு, (4) உலகோர் - உலகத்தார், (6) நல்குவது என் - கொடுப்பதென்ன ஒன்றுமில்லை, (8) மெய்ஞானிக்கு, என் இலை - என்ன இல்லை எல்லாமுண்டு என்பதாம், (7) சீவன் முத்தியில் (ஏ, அசை).

கெட்டார்க்கு உறவு பந்துக்களிடத்துமில்லை, வாழ்ந்தார்க்கு உறவு செல்லும் வழியிலும் உண்டு எனல், உலகத்தார், பிடிப்பாக ஒரு சன்மார்க்கநிலைமையும் இல்லாதவர்க்குக் கொடுப்பதென்ன ஒன்றுமில்லை, சீவன் முத்தியில் மெய்ஞ்ஞானிக்கு என்னஇல்லை எல்லாமுண்டு என்பதாம்.

**உண்டு கண்ட பூனை உறியை உறியைத்தாவும்.**

*அறுசீர் விருத்தம்.*

உண்டு கண்ட பூஞை யுறியை யுறியைத் தாவ
லண்டு சங்கற் பங்க ளகன்று சமாதி சுகத்தைக்
கண்டு கொண்ட சிந்தை கலந்தூழ் விவகா ரங்கண்
மண்டு போழ்து மேன்மேன் மருவு மேகாக் கிரமே (229)

(1) உண்டு கண்ட, பூஞை - பூனை, உறியை உறியை, தாவல் - தாவும் எனல், அண்டு - வருகின்ற, சங்கற்பங்கள் அகன்று - சங்கற்பங்களைவிட்டு, சமாதிசுகத்தை, கண்டுகொண்ட, சிந்தை - மனது, (3) கலந்து - சேர்ந்து, (2) ஊழ் - பிராரத்வமான, விவகாரங்கள், (4) மண்டுபோழ்தும் - மிகுதியான

காலத்திலும், (5) மேல் மேல் - மேலு மேலும், (7) மருவும் - அடையும் என்பதாம், (6) ஏகாக்கிரமே - பிரமத்திலொன்றுந் தன்மையையே.

உண்டுகண்ட பூனை உறியை உறியைத் தாவும் எனல், வருகின்ற சங்கற்பங்களைவிட்டுச் சமாதிசுகத்தைக் கண்டு கொண்ட மனது, பிராரத்வமான விவகாரங்கள்சேர்ந்து மிகுதி யானகாலத்திலும் மேலு மேலும் பிரமத்திலொன்றுந் தன்மை யையே அடையும் என்பதாம்.

## மழைக்கால் இருளானலும் மந்திகொம்பு தப்பிப்பாயாது.

### வெண்பா.

மழைக்கா லிருளேனு மந்திகிளை பாய்தல்
பிழைக்கா திணையில் பிராந்தி—யுழைப்புச்
சுழுத்தியுடன் மூர்ச்சை சொலுஞ்சாவின் ஞானி
விழுத்துரிய மோனம் விடான் (230)

(1) மழைக்கால், இருளேனும் - இருளானலும், மந்தி கிளைபாய்தல் - குரங்கு மரக்கொம்புகளில் பாய்தல், பிழைக் காது - தவறாது எனல், (3) இணையில் - சமானமில்லாத, பிரா ந்தி - மயக்கம், உழைப்பு - தொழில், சுழுத்தியுடன் மூர்ச் சை, சொலும் - உலகதிருஷ்டியால் சொல்லப்பட்ட, சாவில் - மரணம் முதலியவைகளில், (2)ஞானி, (4) விழு - சிறந்த, துரிய, மோனம் - மௌனநிலைமையை, விடான், என்பதாம்.

மழைக்கால் இருளானலும் குரங்கு மரக்கொம்புகளில் பாய்தல் தவறாது எனல், ஞானி, சமானமில்லாத மயக்கம் தொ

ழில் சுழுத்தியுடன் மூர்ச்சை உலகதிருஷ்டியால் சொல்லப்பட்ட மாணம் முதலியவைகளில் சிறந்த துரிய மௌனநிலைமையை விடான், என்பதாம்.

## எல்லிசெட்டி கணக்கு ஏகக்கணக்கு.

எல்லியெனுஞ் செட்டிகணக் கேகக் கணக்கேயா
நல்ல நிலைச்சகச ஞானிதனக்—கில்லதுள
தின்பமிடர் மேன்மையிழி வெண்ணன் மறத்தலிறப்
பென்பவெலாந் தன்மயமன் றே (231)

எல்லி எனும் செட்டி கணக்கு ஏகக்கணக்கேயாம்,எனல், நல்லநிலை - நல்ல நிலைமையாகிய, சகசஞானி தனக்கு - சகச நிட்டையுடைய ஞானிக்கு, இல்லது உளது - இல்லாதது உள்ளது, இன்பம், இடர் - துன்பம், மேன்மை, இழிவு - தாழ்மை, எண்ணல் - நினைத்தல், மறத்தல், இறப்பு - சாவு, என்ப எலாம் - ஞானம் அஞ்ஞானம் பந்தம் முத்தி முதலியவெல்லாம், தன்மயம் - தன்சொரூபமாகவே விளங்கும் என்பதாம். (அன்று, ஏ, அசைகள்).

எல்லி எனும் செட்டிகணக்கு ஏகக்கணக்கேயாம் எனல், நல்ல நிலைமையாகிய சகசநிட்டையுடைய ஞானிக்கு, இல்லாதது, உள்ளது, இன்பம், துன்பம், மேன்மை, தாழ்மை, நினைத்தல், மறத்தல், சாவு, ஞானம், அஞ்ஞானம், பந்தம், முத்தி, முதலிய வெல்லாம் தன்சொரூபமாகவே விளங்கும் என்பதாம்.

## பெரு நெருப்புக்கு ஈரமில்லை.

### வஞ்சி விருத்தம்.

நரர்தமக்குட் டேர்சகச ஞானிதான்
பொருவலற்றுச் சேருமனு பூதியின்
றிரமறைப்பச் சூழும்வினை தீயதில்
பெருநெருப்புக் கீரமிலை பேசினே. (232)

(3) நரர் தமக்குள் - மனிதர்க்குள், தேர் - தெளிந்த, சகச ஞானி, (தான்), பொருவல் அற்று - சமானமின்றி, சேரும் - பொருந்திய, அனுபூதியின் திரம் - சுவானுபவத்தின் நிலையை, மறைப்ப - மறைக்கும்படி, சூழும் - வரும், வினை தீயது - தீவினை, இல் - இல்லை. என்பதாம், (2) பெரு நெருப்புக்கு, ஈரம், இலை - இல்லை எனல், (1) பேசின் - சொல்லுமிடத்து (ஏ, அசை), (தான், சாரியை).

சொல்லுமிடத்துப் பெரு நெருப்புக்கு ஈரமில்லை எனல், மனிதர்களுக்குள் தெளிந்த சகசஞானி சமானமின்றிப் பொருந்திய சுவானுபவத்தின் நிலையை மறைக்கும்படி வருந் தீவினையில்லை என்பதாம்.

## நிழலருமை வெய்யிலிலிருந்தவர் அறிவார்.

நிழலருமை வெய்யிற்க ணின்றடைந்தா ரோர்வர்
தொழுதகைய மோக்ஷ சுகத்திற்—கழிபுதுமை
மோக மகல்சீவன் முத்தர்க் கலாதிலையா
லேக னருகிருத்தற் கே (233)

(1) நிழலருமை, வெய்யிற்கண் - வெய்யிலினிடத்து, நின்று - இருந்து, அடைந்தார் - வந்துசேர்ந்தவர், ஓர்வர் -

அறிவார் எனல், தொழுதகைய - வணங்கத்தக்க, மோக்ஷசுகத்தில், கழிபுதுமை - உள்ளமிகுந்த அதிசயத்தன்மை, மோகம் அகல் - மயக்கம் நீங்கிய, சீவன் முத்தர்க்கு, அலாது - அல்லாமல், (3) இலை - தோன்றுவதில்லை என்பதாம், (ஆல்), (2) ஏகன் - ஒருவனான, அநாதி முத்தற்கு (ஏ) - ஆதியற்றசுபாவ முத்தனாகிய ஈஸ்வரனுக்கு, (ஆல், ஏ, அசைகள்), (வணங்கல் - ஒடுங்கல்).

நிழலருமை வெய்யிலினிடத்து இருந்து வந்து சேர்ந்தவர் அறிவார் எனல், வணங்கத்தக்க மோக்ஷசுகத்தில் உள்ளமிகுந்த அதிசயத்தன்மை, மயக்கம் நீங்கிய சீவன் முத்தர்க்கு அல்லாமல் ஒருவனான ஆதியற்ற சுபாவ முத்தனாகிய ஈஸ்வரனுக்குத்தோன்றுவதில்லை என்பதாம்.

### சமையல் வீட்டுக்கு ஒருபெண் சபைக்கு ஒருஆண்.

### வெண்பா.

மகானசத்துக் கோர்மாது மன்றிற்கோர் பூமான்
சகாமனதுண் டாயிற் சமாதி—சுகானுபவ
விர்த்திவேண் டுஞ்சிந்தை வீந்து வெளியாமேற்
சித்திசாட் சாத்காரந் தேர். (234)

மகானசத்துக்கு - சமையல் வீட்டுக்கு, ஓர்மாது - ஒருபெண், மன்றிற்கு - சபைக்கு, ஓர்பூமான் - ஒரு ஆண்வேண்டும் எனல், சகா - சகாயமாகிய, மனது - சத்துவமனம், உண்டாயில் - இருந்தால், சமாதி சுக அனுபவவிர்த்திவேண்டும், சிந்தை வீந்து - சத்துவமனமும் இலயித்து, வெளி - ஞானாகாயம், ஆமேல் - ஆகுமானால், சித்தி - யதார்த்தமாகச்சித்தித்ததாகிய, சாட்சாத்காரம் - சகச அனுபவம் வேண்டும், தேர் - எனத்தெரிந்துகொள் என்பதாம். (சமாதி - நிர்விகற்ப நிஷ்டை).

சமையல் வீட்டுக்கு ஒருபெண் சபைக்கு ஒருஆண் வேண்டும் எனல், சகாயமாகிய சத்துவமனமிருந்தால் சமாதி ஈக அநுபவவிர்த்திவேண்டும், சத்துவமனமும் இலயித்து ஞானகாயம் ஆகுமானால் யதார்த்தமாகச்சித்தித்ததாகிய, சகச அநுபவம்வேண்டும் எனத்தெரிந்துகொள் என்பதாம்.

## சாட்டையில்லாப்பம்பரத்தை ஆட்டவல்லவர் உண்டா.

சாட்டையிலாப் பம்பரத்தை யாட்டவல்லார் தாமுளரோ
வேட்டை யவித்தை வினையொழிந்த—தேட்டந்
திகழ்சீவன் முத்தர்தமைச் சேர்த்தைந் தொழிற்கண்
மகிழீச னுண்டோ மதி. (235)

(1) சாட்டையிலாப்பம்பரத்தை ஆட்டவல்லார், (தாம்), உளரோ - உண்டா எனல், வேட்டை - இச்சை, அவித்தை - அஞ்ஞானம், வினை - கர்மம், ஒழிந்த, தேட்டம் திகழ் - தெளிவு பொருந்திய, சீவன் முத்தர் தமை - சீவன் முத்தர்களை, (3) சேர்த்து, (2) ஐந்தொழிற்கண் - சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம், என்னும் பஞ்சகிர்த்தியங்களிடத்து, (4) மகிழ் - மகிழும், ஈசன் உண்டோ, மதி - இல்லையெனத் தீர்மானித்தறி என்பதாம். (தாம், சாரியை).

சாட்டையில்லாப் பம்பரத்தை யாட்டவல்லார் உண்டா எனல், இச்சை, அஞ்ஞானம், கர்மம், ஒழிந்த தெளிவுபொருந்திய சீவன்முத்தர்களைச், சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம், என்னும் பஞ்சகிர்த்தியங்களிடத்துச்சேர்த்து மகிழும் ஈசன் உண்டோ இல்லையெனத்தீர்மானித்தறி என்பதாம்.

## இடிக்குக் குடை பிடிப்பார் உண்டா.

இடிக்குக் குடைபிடித்து மென்னு முயற்சித்
தொடித்தீ விரதரமா மூழைத்—தடுப்பதிலை
மன்னும் வெயின்மழைபோன் மந்தமொடு தீவிரவூழ்
பன்னின் முயன்றுதடுப் பார் (236)

இடிக்கு - இடியைத்தடுக்க, குடை பிடித்தும், என் - என்ன பிரயோசனம், ஆம் - ஆகும், எனல், முயற்சித்து, ஓடி - கெடுக்கிற, தீவிரதரம், ஆம் - ஆகிய, ஊழை - விதியை, தடுப்பதிலை - தடுக்கமுடியாது, மன்னும் - மிகுதியும், வெயில் மழை, போல் - போன்ற, மந்தமொடு தீவிர - மந்தமும் தீவிரமும் ஆகிய, ஊழ் - விதி, பன்னின் - வந்துசேர்ந்தால் அவற்றை, முயன்று - முயற்சிசெய்து, தடுப்பார் என்பதாம்.

இடியைத் தடுக்கக் குடை பிடித்தும் என்ன பிரயோசனமாகும் எனல், முயற்சித்துக் கெடுக்கின்ற தீவிரதரமாகிய விதியைத் தடுக்கமுடியாது, மிகுதியும் வெயில் மழை போன்ற மந்தமும் தீவிரமும் ஆகிய விதி வந்து சேர்ந்தால் அவற்றை முயற்சி செய்து தடுப்பார், என்பதாம்.

## வேலைக்குத்தக்க கூலி.

### கலித்துறை.

வேலைக் குத்தகும் வேதன முண்டுவி திப்பகுப்பை
நாலத் தோர்வரி தாதவிற் றீமைந லிப்பநன்மை
யலைத் தக்கமு யற்சிவி டாதுசெய் வீரிரண்டு
ாலற் றேகுமொன் றேகில தேனும்ப யன்பினுண்டே (237)

(1) வேலைக்கு, தரும் வேதனம் - தக்க கூலி, உண்டு, எனல், (3) விதிப் பகுப்பை - பிராரத்வப் பிரிவுகளை, (2) ஞாலத்து - உலகத்தில், (4) ஓர்வுஅரிது - அறியமுடியாது, ஆதலின், தீமை, நசிப்ப - கெடவும், நன்மை, ஏல - பொருந்தவும், தக்கமுயற்சி, விடாது - இடைவிடாது, செய்வீர் - செய்யுங்கள், இரண்டுபால் - மந்தம் தீவிரம் என்னும் இருவகைப் பிராரத்வங்களும், அற்று ஏகும் - நீங்கிவிடும், ஒன்று - தீவிரதரமாகிய ஓர் பிராரத்வம் மாத்திரம், ஏகிலேதனும் - இச்சன்மத்தில் நீங்காதாறுைம், பயன் - செய்த முயற்சிக்குப் பிரயோசனம், பின் உண்டு (ஏ) - மறு சன்மத்தில் கிடைக்கும் என்பதாம், (ஏ, அசை).

வேலைக்குத்தக்க கூலி உண்டு எனல், உலகத்தில் பிராரத்வப் பிரிவுகளை அறியமுடியாது ஆதலின் தீமை கெடவும் நன்மை பொருந்தவுந் தக்கமுயற்சி இடைவிடாது செய்யுங்கள், மந்தம், தீவிரம், என்னும் இருவகைப் பிராரத்வங்களும் நீங்கிவிடும், தீவிரதரமாகிய ஓர் பிராரத்வம் மாத்திரம் இச்சன்மத்தில் நீங்காதாறுைம், செய்த முயற்சிக்குப் பிரயோசனம் மறு சன்மத்தில் கிடைக்கும் என்பதாம்.

(இதுவுமது).

கலிவிருத்தம்.

வேலைக் குத்தரும் வேதன முண்டெனன்
மாலைக் கேள்வி மனன நிதித்தியா
லேலுற் றொன்றினொன் றேற்றம தாகவே
சாலச் சிந்தையிற் சார்தரு ஞானமே (238)

(1) வேலைக்கு, தகும் வேதனம் - தக்க கூலி, உண்டு எனல், மாலை - ஒழுங்கான, கேள்வி, மனனம் - சிந்தனை, நிதித்தியால் - தியானம் என்பவைகளால், (5) ஏலுற்று - பொருந்தி, (2) ஒன்றின் ஒன்று - ஒன்றைவிட அடுத்த மற்றொன்று, ஏற்றம் (அது) ஆக - உயர்வாக, (ஏ), (6) சால - பூரணமாக, (3) சிந்தையில் - மனத்தில், (7) சார்தரும் - விளங்கும் என்பதாம், (4) ஞானம் (ஏ) - ஞானமானது. (ஏ, ஏ, அசை). (அது, சொல்லுருபு).

வேலைக்குத்தக்க கூலி உண்டு எனல், ஒழுங்கான, கேள்வி, சிந்தனை, தியானம், என்பவைகளால் ஒன்றைவிட அடுத்த மற்றொன்று உயர்வாக மனத்தில் ஞானமானது பொருந்திப் பூரணமாக விளங்கும் என்பதாம்.

## அடிமேலடி வைத்தா லம்மி நகரும்.

### வெண்பா.

அடிமீ தடிவைத்தா லம்மி நகரும்
படிமேல் விடாமுயற்சி பற்றின்—மடியாத
ஊழுமிருந் தில்லா தொழியுமீ ரெட்டாண்டின்
வாழுமுனிக் கொப்பா மதி (239)

(1) அடி, மீது - மேல், அடிவைத்தால், அம்மி நகரும், எனல், படிமேல் - உலகத்தில், (3) விடாமுயற்சி, பற்றின் - செய்தால், மடியாத - ஒழியாத, ஊழும் - தீவிரதர பிராரத்வமும், இருந்து - இருந்தும், இல்லாது, ஒழியும் - நீங்கும், (2) ஈரெட்டாண்டின் - எக்காலமும் பதினறு வயதுடையவர் போல, வாழும் - விளங்கும், முனிக்கு - மார்க்கண்டேய

முனிவருக்கு, ஒப்பா - சமானமாக, (4) மதி - எனத்தெரிந்துகொள் என்பதாம்.

அடிமேலடி வைத்தா லம்மி நகரும் எனல், உலகத்தில் எக்காலமும் பதினாறு வயதுடையவர்போல விளங்கும் மார்க்கண்டேய முனிவருக்குச் சமானமாக விடாமுயற்சி செய்தால் ஒழியாத தீவிரதர பிராரத்வமும் இருந்துமில்லாது நீங்குமெனத் தெரிந்துகொள் என்பதாம்.

## ஆறு மாதத்திற்கு வட்டியில்லை அதன்பின் முதலேயில்லை.

### கொச்சகக்கலிப்பா.

ஊறுபிரா ரத்தமுடி வுறுமளவா காமியமின்
றீறிலுயர் ஞானியருக் கெண்ணில்கட னுண்மணலின்
வீறியுள சஞ்சிதமாம் வினைகளொழிந் ததுவிளங்கு
மாறுமதிக் கிலாபமிலை யதன்பின்னர் முதலிலையே (240)

(3) ஊறு - இடையூறு போன்ற, பிராரத்தம், முடிவு உறும் அளவு - முடியுமட்டும், ஆகாமியம் இன்று - ஆகாமிய கர்மம் இல்லை என்பதும், ஈறில் - முடிந்தபின்பு கடைசியில், (2) உயர் - மேலான, ஞானியருக்கு - ஞானிகளுக்கு, (5) எண்இல் - அளவற்ற, (4) கடல் - சமுத்திரத்தின், (6) நுண் மணலின் - நுட்பமான மணலைப்போல, வீறியுள - மிகுந்திருக்கின்ற, சஞ்சிதமாம் வினைகள் - சஞ்சித கர்மங்கள், ஒழிந்தது - ஒழிந்துபோனது என்பதும், விளங்கும் - தெரியும் என்பதாம், (1) ஆறு, மதிக்கு - மாதத்திற்கு, இலாபமிலை - வட்டியில்லை, அதன்பின்னர் - அதற்குமேல், முதலிலை (ஏ) - முதலே இல்லை எனல், (ஏ, அசை).

ஆறு மாதத்திற்கு வட்டியில்லை அதற்குமேல் முதலே இல்லை எனல், மேலான ஞானிகளுக்கு இடையூறுபோன்ற பிராரத்வம் முடியுமட்டும் ஆகாமிய கர்மமில்லை என்பதும், முடிந்தபின்பு கடைசியில் சமுத்திரத்தின் அளவற்ற நுட்பமான மணலைப்போல மிகுந்திருக்கின்ற சஞ்சித கர்மங்கள் ஒழிந்துபோனதென்பதுந் தெரியும் என்பதாம்.

## கிணற்று ஜலத்தை வெள்ளங் கொண்டுபோகாது.

### கலி விருத்தம்.

கேணி நீரைவெள் ளங்கிர கித்திடா
தூணி றன்னை யுணர்ந்த வுளமுடல்
வீணின் மாய்ந்திட வேறுல கம்புகா
தாணி யான்மா வயிக்ய மலாதரோ. (241)

(1) கேணி நீரை - கிணற்று ஜலத்தை, வெள்ளம், கிரகித்திடாது - கொண்டுபோகாது எனல், ஊண் இல் - வேறு அனுபவம்வேண்டாத, தன்னை - ஆத்மாவை, உணர்ந்த, உளம் - மனது, உடல் - பிராரத்வமுடிவில் சரீரம், வீணில்மாய்ந்திட - சஞ்சரியாமல் இறந்த காலத்தில், (3) வேறு உலகம் புகா - மற்றலோகங்களையடையாது, என்பதாம், (2) ஆணி - சிறிதும் அன்னியமில்லாத, ஆன்மா அயிக்யம் அலாது (அரோ), - ஆத்மாவில் ஏகத்தன்மையாகின்றதல்லாமல், (அரோ, அசை).

கிணற்று ஜலத்தை வெள்ளங் கொண்டுபோகாது எனல், வேறு அனுபவம் வேண்டாத ஆத்மாவை யுணர்ந்த மனது பிராரத்வமுடிவில் சரீரம் சஞ்சரியாமல் இறந்தகாலத்திற் சிறிதுமன்னியமில்லாத ஆத்மாவில் ஏகத்தன்மையாகின்றதல்லாமல் மற்றலோகங்களை யடையாது என்பதாம்.

## அரசன் அன்று தண்டிப்பான் தெய்வம் நின்று தண்டிக்கும்.

### எழுசீர் விருத்தம்.

*அரச னன்று தெய்வ நின்ற ழித்தல் சத்தி யோநெறி*
*யிருத யத்தின் விர்த்தி ஞான வேது வால வித்தையைப்*
*பரிய விங்கொ ழித்தி டும்ப ரத்த விச்சை யைக்கொலுங்*
*கிரம முத்தி நெறிய யன்கி ளர்ந்த நாடு கிட்டவே.* (242)

(1) *அரசன், அன்று* - *அப்போதே தண்டித்தல், தெய்வம், நின்று* - *பிற்காலத்தில், அழித்தல்* - *தண்டித்தல் என்பது, சத்தியோநெறி* - *சத்தியோ முத்திமார்க்கமானது, இருதயத்தில்* - *மனதில் உண்டாகிற, விர்த்திஞான ஏது வால்* - *விர்த்திஞானமென்கிற ஏதுவைக்கொண்டு, அவித்தையை* - *அஞ்ஞானத்தை, பரிய* - *நன்றாக, இங்கு* - *இப்பிறப்பிலேயே, ஒழித்திடும்,* (3) *பரத்து* - *மறுபிறப்பில்,* (5) *அவிச்சையை* - *அஞ்ஞானத்தை. கொலும்* - *அழிக்கும் எனலாம்,* (2) *கிரம முத்தி, நெறி* - *மார்க்கமானது,* (4) *அயன்* - *பிரமதேவன், கிளர்ந்தநாடு* - *வாழ்கின்ற சத்தியலோகத்தை, கிட்ட* - *அடைய, (ஏ, அசை).*

*அரசன் அப்போதே தண்டித்தல், தெய்வம் பிற்காலத்தில் தண்டித்தல் என்பது, சத்தியோ முத்திமார்க்கமானது மனதிலுண்டாகிற விர்த்திஞானமென்கின்ற ஏதுவைக்கொண்டு அஞ்ஞானத்தை நன்றாக இப்பிறப்பிலேயே ஒழித்திடும், கிரமமுத்தி மார்க்கமானது மறு பிறப்பில் பிரமதேவன் வாழ்கின்ற சத்தியலோகத்தையடைய அஞ்ஞானத்தை அழிக்குமெனலாம்.*

## தோலிருக்கச் சுளை விழுங்கி

### வெண்பா.

சூழ்தோ லிருப்பச் சுளைவிழுங்கு வோன்ஞானி
யூழ்வா யுடல மொழியவுளே—வாழ்வாந்
துரியானு பூதியையுந் தோன்றாதுட் கொள்ளுந்
திரியா வதீத சிவம். (243)

சூழ் - மூடிய, தோல், இருப்ப - இருக்க, சுளை விழுங்குவோன், எனல், ஞானி - ஞானியினுடைய, ஊழ் - பிராரத்வத்தை, வாய் - அடைந்திருக்கிற, உடலம் ஒழிய - சரீரத்தைவிட்டு, உளே - மனதிலேயே, வாழ்வு ஆம் - விளங்குவதாகிய, துரிய, அனுபூதியையும் - அனுபவத்தையும், தோன்றாது - விளங்குவதென்பதுந் தோன்றாமல், உட்கொள்ளும் - தானாக்கிக்கொள்வது, திரியா - மாறுபடாத, அதீதசிவம் - அனைத்துக்கும் மேலாகிய மங்கள சொரூபமான பிரமம் என்பதாம்.

மூடிய தோலிருக்கச் சுளைவிழுங்குவோனெனல், ஞானியினுடைய பிராரத்வத்தையடைந்திருக்கிற சரீரத்தை விட்டு மனதிலேயே விளங்குவதாகிய துரியானுபவத்தையும் விளங்குவதென்பதுந் தோன்றாமல் தானாக்கிக்கொள்வது, மாறுபடாத அனைத்துக்கும் மேலாகிய மங்கள சொரூபமான பிரமம் என்பதாம்.

## பசித்தார் பொழுதும் போம் பாலன்னம் புசித்தார் பொழுதும் போம்.

பசித்தார் பொழுதோடு பாலனமுண் டார்போ
தொசித்தேபோம் பந்தத் துழன்றார்—நிசித்த
வவத்தையுடன் முத்த ரவத்தை யதீத
சிவத்திடையில் லாதொழிவ தே. (244)

பசித்தார், பொழுதோடு - பொழுதும், பால், அனம் - அன்னம், உண்டார்போது - புசித்தார் பொழுதும், ஒசித்து (ஏ) - கழிந்து, போம், எனல், பந்தத்து உழன்றார் - பந்த தசையில் உழல்பவர்களுடைய, நிசித்த - அறியாமையோடு கூடிய, அவத்தையுடன் - அனுபவமும் முத்தரவத்தை - முத்ததசையையடைந்தவர்களின் அறிவுவடிவமாகிய அனுபவமும், அதீத, சிவத்திடை - சிவத்தினிடத்தில், இல்லாதொழிவதே - தோன்றாமலே போம் என்பதாம் (ஒசிந்து என்பது வலித்தல் விகாரத்தால் ஒசித்து என்றாயிற்று) (ஏ, அசை), நிசி-இருள்.

பசித்தார் பொழுதும் பாலன்னம் புசித்தார் பொழுதும் கழிந்துபோம் எனல், பந்த தசையில் உழல்பவர்களுடைய அறியாமையோடுகூடிய அனுபவமும், முத்ததசையையடைந்தவர்களின் அறிவுவடிவமாகிய அனுபவமும் அதீத சிவத்தினிடத்தில் தோன்றாமலே போம் என்பதாம்.

## பெட்டைக்குதிரைக்கு இரட்டைக் கொம்பாம்.

பெட்டைக் குதிரைக் கிரட்டைப் பெருங்கொம்பா
நிட்டைத் துரிய நிலையுமொழிந்—திட்ட
பிரமத்திற் சீவேச பேதமா மாயைக்
கிரமத்தி லென்றறியார்க் கே. (245)

(1) பெட்டைக்குதிரைக்கு, இரட்டை - இரண்டு, பெருங்கொம்பாம், என்பது, (3) நிட்டைத்துரியநிலையும் - துரிய சொரூபநிஷ்டையனுபவமும், ஒழிந்திட்ட - கடந்த, பிரமத்தில் - அதீதப்பிரமத்தில், சீவ ஈசபேதமாம் - சீவத்தன்மை ஈஸ்வரத்தன்மை என்னும்பேதங்களுண்டாம் எனல், (2) மா

யைக்கிரமத்தில் - மாயாசத்தி நியமமாகிய நிலைமையில் மாத்திரம் ஜீவபேதமுண்டு, என்று, அறியார்க்கு - அறியாதவர்களுக்கு. (ஏ, அசை).

பெட்டைக்குதிரைக்கு இரண்டு பெருங்கொம்பாம் என்பது, மாயாசத்தி நியமமாகிய நிலைமையில் மாத்திரம் ஜீவபேதமுண்டென்று அறியாதவர்களுக்குத்துரிய சொரூப நிஷ்டையனுபவமுங் கடந்த அதீதப்பிரமத்தில் ஜீவத்தன்மை ஈஸ்வரத்தன்மை என்னும் பேதங்களுண்டாம் எனல்.

## மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடல்.

கலி விருத்தம்.

முண்டி தச்சிர சோடுமு ழந்தாட்
குண்டு கொல்பிணி யோரிரு சத்தி
யண்டி லாதவ தீதப ரத்திற்
பண்டு நேர்பிர பஞ்சம தின்றே. (246)

(1) முண்டி-தச்சிரசோடு - மொட்டைத்தலைக்கும், முழந்தாட்கு - முழங்காலுக்கும், (3) உண்டுகொல் - உண்டா இல்லை எனல், (2) பிணி - முடிபோடுதல், (4) ஓர் - ஒப்பற்ற, இருசத்தி - அசுத்தமாயை சுத்தமாயை என்னுமிரண்டு சத்திகளும், அண்டிலாத - பொருந்தாத, அதீத, பரத்தில் - பிரமத்தில், பண்டு - அறுதியாக, நேர் - இருப்பதுபோன்ற, பிரபஞ்சம், (அது), இன்று - (ஏ) இல்லை என்பதாம் (அது, சொல்லுருபு), (ஏ, அசை).

மொட்டைத்தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடுதல் உண்டா, இல்லை எனல், ஒப்பற்ற அசுத்தமாயை, சுத்தமாயை என்னுமிரண்டு சத்திகளும் பொருந்தாத அதீதப்பிரமத்தில் அறுதியாகஇருப்பது போன்ற பிரபஞ்சமில்லை என்பதாம்.

## பைத்தியம் பலவிதம்.

### வஞ்சி விருத்தம்.

மொய்த்த னந்தமென் முறையா
லுய்த்து றுஞ்சக வுதயம்
வைத்த றைந்திடு மறைகள்
பைத்தி யம்பல விதமே (247)

(5) மொய்த்து - திரள்களாக, (4) அனந்தம் - அநேகவிதம், என் - என்கிற, முறையால் - கிரமத்தால், (6) உய்த்து உறும் - தோற்றப்படும் என, (3) சகஉதயம் - பிரபஞ்சசிருஷ்டியை, (7) வைத்து - கற்பித்து, அறைந்திடும் - சொல்லுகின்றன என்பதாம், (2) மறைகள் - வேதங்கள், (1) பைத்தியம் பலவிதம், (ஏ) எனல், (ஏ, அசை).

பைத்தியம் பலவிதம் எனல், வேதங்கள் பிரபஞ்ச சிருஷ்டியை அநேக விதம் என்கிற கிரமத்தால் திரள்களாகத் தோற்றப்படுமெனக்கற்பித்துச் சொல்லுகின்றன என்பதாம்.

## ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய் சொல்லவேண்டும்.

### எழு சீர் விருத்தம்.

பிரமமொன் றிருப்ப மாயையு முளதாப்
பேசியே சத்துட னசத்தும்
இரிசத சத்து மவயவ நிரவ
யவமுட னிருமையும் பின்னம்
வருமபின் னம்பின் னுபின மெனவும்
வழங்கொணு வநிர்வச னீய
வுருவமஃ தென்பா ரோர்பிசி மறைப்ப
வொன்பது பிசியவை சியமே. (248)

(2) பிரமம், ஒன்று - ஒன்றே, இருப்ப - இருக்க, மாயை யும், உளதா - இருக்கிறதாக, பேசி (ஏ) - சொல்லி, (4) சத்துடன் - சத்தும், அசத்தும், இரி - பொருந்தாத, சதசத்தும், அவயவம் - அவயவத்தோடு கூடியதும், நிரவயவமுடன் - அவயவத்தோடு கூடாததும், இருமையும் - இவ்விரண்டு தன்மையுடையதும், பின்னம் - பின்னமும், வரும் அபின்னம் - தோற்றுகின்ற அபின்னமும், பின்ன அபினம் - பின்னு பின்னமும், எனவும், வழங்கொணு - ஒன்பதுவிதத்தாலுஞ் சொல்லமுடியாததாகிய, அநிர்வசனீய, உருவம் - இலக்ஷணமுடையது, (3) அஃது - அம்மாயாசத்தியானது, (5) என்பார் - என்று ஓர்சமயத்தில் சொல்வார்கள் என்பதாம், (1) ஓர்பிசி - ஒரு பொய்யை, மறைப்ப - மறைக்க, ஒன்பது, பிசி - பொய், அவசியம் (ஏ) - சொல்லவேண்டும் எனல், (ஏ, ஏ, அசைகள்) (அபினம், அபின்னம் என்பதினிடைக்குறை) (சத்து - இருப்பது) (அசத்து - இல்லாதது) (பின்னம் - பேதம்) (அபின்னம் - பேதமில்லாதது).

ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய் சொல்லவேண்டும் எனல், பிரமம்ஒன்றே இருக்க, மாயையுமிருக்கிறதாகச் சொல்லி அம்மாயாசத்தியானது சத்தும் அசத்தும் பொருந்தாத சதசத்தும், அவயவத்தோடுகூடியதும் அவயவத்தோடு கூடாததும் இவ்விரண்டு தன்மையுடையதும், பின்னமும் தோற்றுகின்ற அபின்னமும் பின்னுபின்னமும் எனவும் ஒன்பது விதத்தாலுஞ் சொல்லமுடியாததாகிய அநிர்வசனீய இலக்ஷணமுடையது என்று ஓர்சமயத்திற் சொல்லுவார்கள் என்பதாம்.

## 198-ம் பாடலின் தொடர்ச்சி, இதுவுமது.

### வெண்பா.

தன்னை யறியுங்காற் சத்தியமாம் பூரணமுந்
துன்னு மகண்டசுயஞ் சோதியும்—உன்ன
லரும்பரமா னந்தமு மாயிருப்பன் றானே
கரும்புதினக் கூலியோ காண்.

(2) தன்னையறியும், கால் - இடத்து, சத்தியமாம் பூரணமும், துன்னும் - பொருந்திய, அகண்ட - பிரிவற்ற, சுயம்சோதியும் - தானாகியவிளக்கமும், உன்னல் அரும் - நினைத்தற்கரிய, பரம - மேலான, ஆனந்தமும், (4) ஆய் இருப்பன் - ஆகியிருப்பான் என்பதாம், (3) தானே, (1) கரும்பு, தின - தின்ன, கூலியோ - கூலிவேண்டுமா எனல், (காண், முன்னிலையசை)

கரும்பு தின்னக்கூலி வேண்டுமா எனல், தன்னையறியுமிடத்துச், சத்தியமாம் பூரணமும், பொருந்திய பிரிவற்ற தானாகிய விளக்கமும், நினைத்தற்கரிய மேலான ஆனந்தமும், தானேயாகியிருப்பான் என்பதாம்.

## 4-ம் பாடலின் தொடர்ச்சி, இதுவுமது.

### பன்னிரு சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

அதுவன்றி யற்பமும சைந்திடா தென்றசொல்
லர்த்தமே தேசகாலம்
அமர்வத்து வன்றிச்சு சாதியும்வி சாதியு
மடைந்தசுவ கதமுமின்றி

எதுவுஞ்சொ லக்கருத வொண்ணாத தேசத்
தெனச்சுயஞ் சோதியென்ன
வின்பகன மென்னச்சு வானுபவ மெனவெண்
ணிறந்தசத் திகளென்னவும்
சதுரொன்ற னாதிமுக் தப்பரம னாதிபத்
தச்சீவர் சகமென்னவும்
தருமமதர் மங்கா மியத்தவமு நிட்காம
தவமெனவு மோட்சவிச்சை
விதுவென்ற சாதனஞ் சீடர்குரு வுபதேச
வித்தையப் யாசநித்ய
வீடெனும் பிரமமா யாவுமெனை வலதென
விளங்கிடு சுபாவநிலையே

அது அன்றி அற்பமும், அசைந்திடாது - அசையாது, என்ற, சொல் - சொல்லுக்கு, அர்த்தம், (ஏ) தேசகாலம் - இடமும் காலமும், அமர்வத்து - பொருந்திய வஸ்துக்களும், அன்றி - அல்லாமல், சுசாதியும் விசாதியும், அடைந்த - சம்பந்தமான, சுவகதமும், இன்றி - இல்லாமல், எதுவும் - எவ்விதமும், சொல - சொல்லவும், கருத - நினைக்கவும், ஒண்ணாதே - முடியாதது எதுவோ அதுவே, சத்து என - இருக்கிறதென்பது எனவும், சுயம் சோதி என்ன - தானாகவே விளங்குவது எனவும், இன்ப கனம் என்ன - ஆனந்த மாத்திரமெனவும், சுவானுபவம் என - தானாகிய அனுபவமெனவும், எண் இறந்த - அளவற்ற, சத்திகளென்னவும், சதுர் ஒன்று - வல்லமையுற்ற, அனாதி, முத்த - முக்தனாகிய, பரம் - ஈசுவரனெனவும், அனாதிபத்த - அனாதியே பந்தமுற்றவராகிய, சீவர், எனவும், சகம் என்னவும், தருமம் - புண்ணியமெனவும், அதர்மம் - பாவமெனவும், காமிய, தவமும் - தவ

மெனவும், நிட்காம - நிட்காமிய, தவமெனவும், மோட்ச இச்சை - மூமூட்சுத்துவமெனவும், விது என்ற - வளர்கின்ற சந்திரன் போன்ற, சாதனம் - சாதனங்களெனவும், சீடர் - சீஷர்களெனவும், குரு - குருக்களெனவும், உபதேச வித்தை - ஞானஉபதேசமெனவும், அப்பாசம், எனவும், நித்யவீடு எனும் - நித்திய நிவிர்த்திசொரூபம் என்று சொல்லப்படும், பிரமமா - பிரம்மமாக, யாவுமென - எல்லாம் எனவும், அலது என - அல்லது எனவும், விளங்கிடு - விளங்குகின்ற, சுபாவநிலையே - தானாகவேயிருக்கும்நிலைமையே என்பதாம். (ஏ, அசை).

அதுவன்றி அற்பமும் அசையாது என்ற சொல்லுக்கு அர்த்தம், இடமும் காலமும், பொருந்திய வஸ்துக்களும் அல்லாமல், சுசாதியும் விசாதியும், சம்பந்தமான சுவகதமுமில்லாமல், எவ்விதமும் சொல்லவும் நினைக்கவும் முடியாதது எதுவோ அதுவே, இருக்கிறதென்பது எனவும், தானாகவே விளங்குவது எனவும், ஆனந்தமாத்திரம் எனவும், தானாகிய அனுபவமெனவும், அளவற்ற சத்திகளென்னவும், வல்லமையுற்ற அநாதி முக்த்தனாகிய ஈசுவரனெனவும், அநாதியே பந்தமுற்றவராகிய சீவரெனவும், சகமென்னவும், புண்ணியமெனவும் பாவமெனவும், காமியத்தவமெனவும் நிட்காமியத் தவமெனவும், முமூட்சுத்துவமெனவும், வளர்கின்ற சந்திரன் போன்ற சாதனங்களெனவும், சீஷர்களெனவும் குருக்களெனவும், ஞான உபதேசமெனவும், அப்யாசமெனவும், நித்திய நிவிர்த்தி சொரூபமென்று சொல்லப்படும் பிரம்மமாக, எல்லாமெனவும் அல்லதெனவும் விளங்குகின்ற தானாகவே யிருக்கும் நிலைமையே என்பதாம்.

முற்றிற்று.

கரூர் பிரிட்டிஷ் இந்தியா பிரசில் பதிப்பிக்கப்பட்டது.